# மகரிஷி ஸ்வாமி தயானந்த சரஸ்வதியாரின்

## வாழ்க்கையும், கற்பனைகளும்



காரியதரிசி,
ஆரியசமாஜ், சென்னை.

1000 காபிகள்] ஆகஸ்ட் 1934 [8 அணு.



மகரிஷி ஸ்வாமி தயானந்த ஸரஸ்வதியாரின்

வாழ்க்கையும், கற்பனைகளும்.



# விஷய அட்டவணை

# நூன்முகம்

19வது நூற்றுண்டின் சீர்திருத்தவாதிகளுள் ஸ்வாமி தயானந்தரின் பெயரே உச்சியில் நிற்கின்றது. பிராம்மணப் பெற்றோர்களுக்குப் பிறந்து பழைய பொய் வைதிகமுறையில் வளர்க்கப்பட்டு வந்திருந்தும் அர்த்தமில்லாத ஜாதி பேதங்களை அடியுடன் நீக்க முயற்சித்ததன்றி பொய் வைதிகத்தை மாண அறை அறைந்தார். வாழ்நாள் முழுதும் மறைமாணவர்களாயிருந்து, சமூகத்தின் உன்னதிக்காகத் தங்களின் எல்லாவற்றையும் தியாகம் செய்யக்கூடிய உண்மை திடமனங் கொண்ட தன்னலமிலா உத்தமர்கள் சிலரை உண்டு செய்தார். பழங்கால நாகரீகத்தையும், சித்தாந்தங்களையும் புதுப்பித்து, சரியான இந்து தர்மத்தை அநுசரித்த கல்விச்சாலைகளைத் திறந்துவைத்தார். தங்களைத் தாங்களே கோழைகளென்று நினைத்துக்கொண்டிருந்த இந்துக்களுக்கு அவ்வுணர்ச்சியை விலக்கி எப்பேர்ப்பட்ட எதிரியையும் கடைதுளி இரத்தம் சிந்தும் வரை எதிர்க்கக்கூடிய தைரியத்தை அளித்தார். மகம்மதியர், கிருஸ்தவர்களின் கூட்டுறவால் இந்துக்களுக்கேற்படும் எதிர்ப்பை விளக்கிக் காட்டி, சுத்தி, சங்கடனை அநுசரிக்குமாறு உபதேசித்தார். பலமிலா, கோழை ஆட்டுக்குட்டிகளாய்ப்பிறந்த இந்துக்களை பலமுடைய, பயமிலா வீரசிங்கங்களாக மாற்றினர். துட்டெண்ணங்கள், பொய் நம்பிக்கைகள் எனும் சேற்றிலிருந்து எல்லா தர்மங்களையும் கரையேற்றி ஆராய்ச்சி அறிவெனும் உத்தம மாளிகையில் இருத்தினர்.

தயானந்தரின் முழுவாழ்க்கையையும் நியாயமாக விளக்கிச் சொல்ல இச்சிறு நூல் உபயோகப்படாதெனினும் இதோ இது வாசகர்களுக்கு அளிக்கப்படுகிறது. இது நன்கு ஆதரிக்கப்படுமாயின் ஒரு நாளில் விரிவான வாழ்க்கையையும் வெளியிடக்கூடும்.

முடிவில் இத்தமிழ் நூலை எழுதியளித்தவரான பண்டிட் கண்ணையா அவர்களுக்கு நம் மனமார்ந்த வந்தனம் உரியதாகுக.

16—8—1934. பண்டிட் கே. க்ஞானி

ௐ

மகரிஷி ஸ்வாமி

# தயானந்தர்

## வாழ்க்கையும், கற்பனைகளும்.



### அத்தியாயம் 1.

### முகவுரை.

“புண்யபூமியாம் பாரத தேசத்திலே எவ்வெக் காலங்களிலே தர்மம் அழிந்து அதர்மம் தலைதூக்க ஆரம்பிக்கின்றதோ, அவ்வக்காலங்களிலே கடவுள் அவதாரம் செய்து அதர்மத்தை அழித்து தர்மத்தை நிலைநாட்டுவார்” என்று ஸ்ரீமத் பகவத்கீதை கூறுகின்றது. இதை உண்மையென்று நம்பினாலுஞ் சரி, நம்பாவிட்டாலுஞ் சரி. பழங்காலத்திய இத்தேச சரித்திரம் இக்கொள்கையை ஆதரிக்கின்றது. எவ்வாறெனில் தேச சரித்திரத்தைப் பார்த்தோமானால் இந்நாட்டிலே மிகுந்த அதர்மம் தலையோங்கியிருந்த காலங்களிலெல்லாம் ஒவ்வோர் மஹான் உற்பத்தியாகி அதர்ம எண்ணங்

களையும், சமூக-மத-அரசாங்க சம்பந்தமான அநர்த்தங்களையும் அழித்துக்கொண்டே வந்திருக்கிறார்கள் எனத் தெரிகிறது. இதுகாலம் வரையும் அப்படியேதான் தொடர்ச்சியாக நடந்து வந்துகொண்டிருக்கிறது. ஆகையால் இம்மதம் முழுதும் தப்பிதமான வழியிலே சென்றுவிட்ட காலம் ஒன்று இருந்திருக்கவில்லை. மற்ற மதங்களிலும் இவ்வாறே பெரியோர்கள் பிறந்து வேலை செய்திருக்கலாம். ஆனாலும் தனிப்பட பாரத மக்களை மாத்திரம் குறிப்பதின் காரணம் அவர்களின் தன்னல மின்மையும், உயர்ந்த கொள்கைகளும், உயர்ந்த வாழ்வுமே யாகும்.

அன்றி இவர்களின் வாழ்க்கை - கொள்கை - யின் மேன் மையைக் குறிக்க ஓர் முக்யமான காரணம் என்னவென்றால் இவர்கள் தங்களைமாத்திரம் சீர்திருத்த முற்படுவதில்லை. ஆனால் எல்லா மனிதர்களினுடையவும் சமூக-மத-அரசாங்க விஷயங் களைச் சீர்திருத்தி மேன்மையாக்க விரும்புவதேயாகும். ஏனென்றால் “மனிதன் உண்மைச் சுகம் பெற விரும்பினால் தன் சுகத்தை மாத்திரம் நாடாமல் எப்போதும் எல்லோ ருடைய சுகத்திலேயே தன் சுகத்தை நாடவேண்டும்” என் பது அவர்களின் உயர்ந்த எண்ணமாகும். இப்பேர்ப்பட்ட லோகோபகாரிகளே அவ்வப்போது பாரத நாட்டில் தோன்றி வந்தனர்-வருகின்றனர்-வருவார்கள். சுமார் ஐயாயிரம் வரு டங்களுக்கு முன் தேசத்திலே மிகுந்த கஷ்ட நிலை யேற்பட் டிருந்தபோது ஸ்ரீ கிருஷ்ணன் தன் நாட்டுமக்களைநோக்கி தன் வாழ்நாளின் லக்ஷ்யமே சாதுக்களையும் பலஹீனர்களையும் ரக்ஷிப்பதும், பலமடைந்திருக்கும் பாபத்தை யழிப்பதும்,

மதத்தை சரியான நிலையில் வைப்பதுமே என்று சொல்லியி ருக்கிறார். அவர் மதத்திற்கும் அரசாங்கத்திற்கும் ஒருவித வித்யாசமும் கற்பிக்கவில்லை. அவர் ஓர் பெரும் யோகியாக மாத்திரமின்றி ஓர் பெரிய அரசாங்க வேதாந்தியாகவும் இருந்தார். கருணை பொருந்தியவராயிருந்ததுடன் ஓர் பெரிய யுத்தவீரனாகவும் இருந்தார். தன் பக்தனும் நண்பனுமாகிய அர்ஜுனனை பாபிகளை யழித்து தர்மத்தை நிலைநாட்டும்படிச் சிறிதும் தயங்காது உத்தரவிட்டார்.

அவர் காலத்திற்குப் பிறகு மறுபடியும் அதர்மம் தலை நீட் டத்தொடங்கிய காலத்திலே புத்தபிரான் அவதரித்து மறுபடி யும் தர்மத்தை நிலை நாட்டினார். அவரின் கொள்கைகளே பிற்காலத்தில் புத்தமதமாக வெளிப்படத் தொடங்கியது. ஆனா லும் வேத அவநம்பிக்கை, ப்ராம்மணம் எனுமிரண்டிற்கும் விரோதமிருந்துகொண்டு வந்தது. வேதமதம் அவ்விரண்டு தூண்களின் மேல் நின்றிருந்தது. அவ்வாறே யிருந்து சில காலத்தில் புத்த சன்யாசிகள் அதர்மம் புரியத்தொடங்கிய போது அதைத் தடுக்க சங்கராச்சாரியார் பிறந்தார். அவரும் அதர்மத்தை யழித்து வேத மதத்தை நிலை நாட்டினார். அக் காலத்திலிருந்து இந்திய நாடு முழுவதிலேயும் பக்திக்கு ஆதர வேற்பட்டிருந்தது. மனிதர்கள் கடவுளின் வழிபாட்டை மறக்காதிருப்பதற்காக அநேக கோவில்கள் கட்டுவிக்கப் பட்டு அவைகளிலே அநேக பணம் செலவிடப்பட்டும்வந்தது. இவ்வாறே 800 வருடங்கள் வரை இது நடந்துகொண்டுவந் தது. இதே காலத்தில் முகம்மதியர்கள் இந்தியாவிலே குடி யேறித் தங்களின் ராஜ்யத்தை ஸ்தாபிக்க ஆரம்பித்தார்கள்.

களையும், சமூக-மத-அரசாங்க சம்பந்தமான அதர்மங்களையும் அழித்துக்கொண்டே வந்திருக்கிறார்கள் எனத் தெரிகிறது. இதுகாலம் வரையும் அப்படியேதான் தொடர்ச்சியாக நடந்து வந்துகொண்டிருக்கிறது. ஆகையால் இம்மதம் முழுதும் கெட்டுப்பிதமான வழியிலே சென்றுவிட்ட காலம் ஒன்று இருந்திருக்கவில்லை. மற்ற மதங்களிலும் இவ்வாறே பெரியோர்கள் பிறந்து வேலை செய்திருக்கலாம். ஆனாலும் தனிப்பட பாரத மக்களை மாத்திரம் குறிப்பதின் காரணம் அவர்களின் தன்னலமின்மையும், உயர்ந்த கொள்கைகளும், உயர்ந்த வாழ்வுமேயாகும்.

அன்றி இவர்களின் வாழ்க்கை - கொள்கை - யின் மேன்மையைக் குறிக்க ஓர் முக்யமான காரணம் என்னவென்றால் இவர்கள் தங்களைமாத்திரம் சீர்திருத்த முற்படுவதில்லை. ஆனால் எல்லா மனிதர்களினுடையவும் சமூக-மத-அரசாங்க விஷயங்களைச் சீர்திருத்தி மேன்மையாக்க விரும்புவதேயாகும். ஏனென்றால் "மனிதன் உண்மைச் சுகம் பெற விரும்பினால் தன் சுகத்தை மாத்திரம் நாடாமல் எப்போதும் எல்லோருடைய சுகத்திலேயே தன் சுகத்தை நாடவேண்டும்" என்பது அவர்களின் உயர்ந்த எண்ணமாகும். இப்பேர்ப்பட்ட லோகோபகாரிகளே அவ்வப்போது பாரத நாட்டில் தோன்றி வந்தனர்-வருகின்றனர்-வருவார்கள். சுமார் ஐயாயிரம் வருடங்களுக்கு முன் தேசத்திலே மிகுந்த கஷ்ட நிலை யேற்பட்டிருந்தபோது ஸ்ரீ கிருஷ்ணன் தன் நாட்டுமக்களைநோக்கி தன் வாழ்நாளின் லக்ஷ்யமே சாதுக்களையும் பலஹீனர்களையும் ரக்ஷிப்பதும், பலமடைந்திருக்கும் பாபத்தை யழிப்பதும்,

)தத்தை சரியான நிலையில் வைப்பதுமே என்று சொல்லியி
5க்கிறார். அவர் மதத்திற்கும் அரசாங்கத்திற்கும் ஒருவித
ித்யாசமும் கற்பிக்கவில்லை. அவர் ஓர் பெரும் யோகியாக
ாத்திரமின்றி ஓர் பெரிய அரசாங்க வேதாந்தியாகவும்.
)ருந்தார். கருணை பொருந்தியவராயிருந்ததுடன் ஓர் பெரிய
த்தவீரனுகவும் இருந்தார். தன் பக்தனும் நண்பனுமாகிய
ர்ஜுனனை பாபிகளை யழித்து தர்மத்தை நிலைநாட்டும்படிச்
றிதும் தயங்காது உத்தரவிட்டார்.

அவர் காலத்திற்குப் பிறகு மறுபடியும் அதர்மம் தலை நீட்
த்தொடங்கிய காலத்திலே புத்தபிரான் அவதரித்து மறுபடி
ம் தர்மத்தை நிலை நாட்டினார். அவரின் கொள்கைகளே
ற்காலத்தில் புத்தமதமாக வெளிப்படத் தொடங்கியது. ஆனு
ம் வேத அவநம்பிக்கை, ப்ராம்மணம் எனுமிரண்டிற்கும்
ரோத மிருந்துகொண்டு வந்தது. வேதமதம் அவ்விரண்டு
ண்களின் மேல் நின்றிருந்தது. அவ்வாறே யிருந்து சில
லத்தில் புத்த சன்யாசிகள் அதர்மம் புரியத்தொடங்கிய
ாது அதைத் தடுக்க சங்கராச்சாரியார் பிறந்தார். அவரும்
தர்மத்தை யழித்து வேத மதத்தை நிலை நாட்டினார். அக்
லத்திலிருந்து இந்திய நாடு முழுவதிலேயும் பக்திக்கு ஆதர
ஏற்பட்டிருந்தது. மனிதர்கள் கடவுளின் வழிபாட்டை
க்காதிருப்பதற்காக அனேக கோவில்கள் கட்டுவிக்கப்
டு அவைகளிலே அனேக பணம் செலவிடப்பட்டும்வந்தது.
வ்வாறே 800 வருடங்கள் வரை இது நடந்துகொண்டுவந்
து. இதே காலத்தில் முகம்மதியர்கள் இந்தியாவிலே குடி
றித் தங்களின் ராஜ்யத்தை ஸ்தாபிக்க ஆரம்பித்தார்கள்.

அப்போதுங்கூட ரஜபுத்திரர்களும், மஹாராஷ்ட்டிரர்களும் சிவாஜியின் உத்திரவின் கீழும், சீக்கியர்கள் தங்கள் குருவின் உத்திரவின் கீழுமிருந்து நம் பழைய மதம் அழிந்துவிடாமல் காப்பாற்றி வந்தார்கள். முகம்மதியர்களின் காலத்திலே அவர்கள் பார்சி (Persian) பாஷையை அரசாங்க பாஷையாகச் செய்திருந்தார்களாகையினாலே நம் நாட்டின் தேவபாஷைப் படிப்பு குறையலாயிற்று. அதினாலேயே வேதமத சம்பந்தமான நூல்களை அன்னிய நாட்டினர், அதுவும் முக்யமாக ஜர்மானியர் கற்றுவந்து கொண்டிருந்தபோதிலும் இந்நாட்டு மக்கள் அதைப் படிக்காதொழிந்தனர்.

இந்து சமூகம் பலவித துன்பங்களையடைந்தது. தன்னைச் சீர்திருத்தி உண்மையை உணர்த்திவைக்க ஓர் மஹானை வேண்டி நின்றது. இக்காலத்திலேயே மூலசங்கரன் பிறந்தான். இவரே பிற்காலத்தில் ஸ்வாமி தயானந்தர் என்று சொல்லப்பட்டவரானார். இச்சிறு புத்தகத்திலே அவருடைய ஜீவிதத்தை விளக்கிச் சொல்வோம்.

இம் முகவுரையை முடிக்குமுன் இந்தியநாடு தனக்கு வேண்டியபோதெல்லாம் ஓர் மஹானைப் பெற்றுக்கொள்ளுடம் பெருமை பொருந்தியதெனச் சொல்ல விரும்புகிறோம். அவர்களைக்கொண்டு மறுபடியும் இந்நாடு சீர்திருத்தம் பெற்று, உண்மையை விளக்கும் சாதனமாய் உலகத்திலே நிற்கிறது. மகாத்மா காந்தியும் அத்தொடர்ச்சியில் ஒருவரே யென நாம் நம்புகின்றோம். குஜராத் தேசத்தில் பிறந்தவரான ஸ்வாமி தயானந்தருக்குச் சரியாக உண்டானவரெனவும் நாம் நம்பு

கின்றோம். சுமார் 50 வருடங்களுக்கு முன்பு (விக்ரம 1940 ஆண்டு) ஆஜ்மீர் நகரத்திலே தீபாவளிப் பண்டிகை நாளில் ஸ்வாமி தயானந்தர் உயிர் துறந்தார். இப்போது அவரின் ஐம்பதாவது வருட விழாவைக் கொண்டாடும் நாம் அவரின் முழுவாழ்க்கையையும் கவனத்திற்குக் கொண்டுவந்தொழுகுவதற்காக இச் சிறு நூலை இயற்றுகின்றோம். இதைக் காணுந் தோறும் அவரின் கவனமுண்டாகி அவரின் சத்திய வழியைப் பின்பற்றி நடந்து மற்றவர்களையும் நடக்கச் செய்வோமாக.



ஓர் நாள் வழக்கம் போல தயானந்தர் இரவானவுடன் எதிரில் மேஜைமேல் வைத்திருந்த பாலை யருந்திவிட்டு படுக்கச் சென்றார். சிறிது நேரம் படுத்திருந்து கண்ணயரும் சமயத்தில் வயிற்றில் ஏதோ கோளாறு நடப்பதாய் தெரிய எழுந்து உட்கார்ந்தார். வெகு சீக்கிரத்தில் இரண்டொருமுறை வாந்தியாயிற்று. தானே தண்ணீரைக்கொண்டு சுத்தம் செய்து கொண்டார். அருகில் படுத்து தூங்கிக்கொண்டிருந்த வேலைக்காரர்களுக்கு தொந்தரவளிக்கவில்லை.

மறுநாள் வழக்கம்போல உலாவுதற்காக எழுந்து செல்ல முயற்சித்த தயானந்தருக்கு எழுந்திருக்கமுடியவில்லை. மறுபடியும் சிறிது நீரையருந்தி மற்றோர் முறை வாந்தியெடுத்தார். தனக்கேதோ கோளாறு நடந்திருக்கிறதென்று கண்டபின் தன் பரிசாரகர்களுக்கு தனக்கேதோமாதிரியாக இருப்பதாகத் தெரிவித்தார். குடலில் பலமான வேதனையுண்டாயிற்று. தானிருக்கும் அறையில் “ஹவனம்” செய்து காற்றை சுத்தி செய்யுமாறு வேண்டினர். உடனே ஹவனமும் நடைபெற்றது. மற்றும் சிறிது நேரத்திற்கெல்லாம் வயிற்றில் சூல வேதனையுண்டாயிற்று. சில மருந்துகள் அளிக்கப்பட்டன. ஆனால் வியாதிமாத்திரம் அமைதியடையவில்லை. அதற்குப் பதிலாக இன்னும் சிறிது அதிகமேயாயிற்று.

உடனே டாக்டர் சூர்யமல் என்பவர் வரவழைக்கப்பட்டார். அவர் வாந்தியை நிறுத்த மருந்தளித்துவிட்டு தயானந்தரை நோக்கி“ இப்போது உங்கள் ஆரோக்யம் எப்படியிருக்கிறது? ” என்று கேட்க தயானந்தர் “ வயிற்றில் பலமான நோயுண்டாயிருக்கிறது. முகமும் சிறிது வலிக்க ஆரம்பிக்கி

## அத்தியாயம் 2.

# பால்யப் பருவம்.



குஜாராத்தில் கத்தியாவார் யெனும் நாட்டிலே ஸ்வாமி தயானந்தர் பிறந்தார். தன் குடும்ப வரலாற்றைக் குறித்து அதிகமாகச் சொல்ல விரும்பாமல் அதன் சரித்திரத்தையும் அவர் சொல்ல மறுத்திருந்தார். ஆனால் தான் விக்ரம 1881ல் மசூகா மஹாநதிக் கரையில் கட்டப்பட்டுள்ள மோர்வீ நாட்டிலே ஔதீச்ய ப்ராம்மண குடும்பத்திலே பிறந்ததாக மட்டும் சொல்வார். ஆனால் பின்னால் அவர் மோர்வீ நாட்டிலே டங்காரயெனும் கிராமத்திலே பிறந்தவரென்றும் அவரின் தகப்பனார் பரம வைதிக ப்ராம்மணராகிய அம்பாசங்கர் என்றும் கண்டுபிடிக்கப்பட்டது. அம்பாசங்கர் மோர்வீ நாட்டிலே ஜமேதாராக வேலைபார்த்து வந்தார். பணம் கொடுக்கல் வாங்கலிலும் சிறிது பொருள் அவருக்கு வருமானம் வந்து கொண்டிருந்தது. தான் நிச்சயமென்று நம்பி அனுசரித்துவரும் கொள்கைகளை யாராவது தப்பிதமென்று சொல்லிவிட்டால் அம்பாசங்கர் மிகுந்த வருத்தமடைவார். "இயற்கை அன்பும் மக்கட் கருணையும் அவருக்கில்லாமலில்லை. இரண்டு குணங்களுமவரிடம் நிரம்பியிருந்தன. ஆனால் யாராவது அவரின் கொள்கைகளைத் தப்பு என்று சொல்லிவிட்டால் அவர்

களை அனேக காலம்வரை விரோதித்துக் கொண்டேயிருப்பார். தன் கொள்கைகளில் ஒன்றுமே குற்றமில்லை யென்ற நம்பிக்கை அவருக்கிருந்தது.'' அவர் அரசாங்கத்திலே பெரிய உத்தியோகஸ்தராக இருந்தமையால் அவருக்குதவியாக அனேக சிப்பாய்கள் இருந்தனர். இவரின் உத்தியோகத்தின் மேன்மையே இவருக்கு ஓர் விதஎதிர்ப்பில்லாமைக் குணத்தை யளித்து வந்ததென்னலாம்.

இதற்குமாறாக தயானந்தரின் தாயாரோ மிகுந்த அமைதியான கருணை பெற்றவளாயிருந்தாள். தன்னைச் சேர்ந்த எல்லோரிடத்திலும் அன்பைச் செலுத்தி அவர்களின் சுக துக்கங்களைத் தன்னுடையதாக பாவித்து வந்தாள். "படாடோபமின்மை, சுத்தம், நன்னடத்தை இவைகளின் வாசஸ்தானமாகவு மிருந்தாள்." "வீட்டு ராணி" யாகவும் விளங்கியிருந்தாள்.

மூலசங்கர் (தயானந்தர்) முன் சொன்ன பெற்றோர்களுக்கு மூத்த குமாரனாகப் பிறந்தார். இவரின் பிறப்பின் சந்தோஷத்தை அவ்வூரானைவரும் பங்கிட்டுக்கொண்டனுபவித்தார்கள். அனேக பெரிய மனிதர்களிடமிருந்து அம்பாசங்கருக்கு வாழ்த்துப் பத்திரங்களும், புகழ்ப் பத்திரங்களும் வந்து குவிந்தன. சரியான புராண வைதிக விதிப்படி ஜாதகர்மச் சடங்குகளும் நடைபெற்றன. புராண வைதிக முறையில் வளர்க்கப் பட்டுவந்த மூலசங்கரைப் படிப்புக்காக அக்கிராமத்திலிருந்த கிராமப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பி வைத்தனர். முதன் முதலில் மூலசங்கரன் தேவநாகர எழுத்துக்களையே கற்றுவந்தான். கல்வி கற்பதிலே தான் மிகுந்த

திறமையுடையவ னென்பதை வெகு சீக்கிரத்தில் காட்டிவிட்டான். நாளாவட்டத்தில் அனேக சுலோகங்களை அர்த்தத்துடன் கற்று, ருத்ரசம்ஹிதையையும் கற்ருன். பிறகு எட்டாவது வயதிலே அவனுக்குப் பூணூற் சடங்கு (யக்ஞோபவீதம்) நடைபெற்றது. சந்த்யோபாஸனை (கூட்டுவேளைத் தொழுகை) யும் கற்பித்து வைத்தார்கள். அம்பாசங்கர் சாமவேதியரா யிருந்தபோதிலுங்கூட ஓர் பெரிய சைவராக இருந்து வந்தார். ஆகையாலே மூலசங்கரனும் தன் தகப்பனின் கற்பனைப்படி சைவமதத்தைத் தழுவிவரலானுன். குற்றமில்லாமல் சிவபூஜை நடத்தி சைவவிரதங்களைத் தன் மகன் அனுசரித்து வருவதிலே அம்பாசங்கரர் மிகுந்த கவனம் செலுத்தி வந்தார். வேண்டியபோதெல்லாம் பூஜை செய்யத் தயாராக இருப்பதற்காக தன் மகனுக்கு ஓர் களிமண்ணுலாகிய சிவலிங்கத்தை அளித்திருந்தார். 10 வயதில் மூலசங்கரனும் சிவபூஜையின் விதிகளை நன்கு அறிந்து சிறிதுங் குற்றமின்றி புரிந்துவரலாயினுன். ஆனுலும் குறித்த காலங்களுக்குப் பிறகு அச்சிவலிங்கத்தின் பரிசுத்தத்தை அவ்வளவாகக் கவனியாதவனுயுமிருந்துவந்தான்.

தன் மகன் ஓர் பிடிவாத சைவனுயிருக்கவேண்டுமெனு அம்பாசங்கர் விரும்பினுர். ஆகையால் தன் மகனுக்குச் சைவ சம்பந்தமான எல்லா கதைகளைம், வழிபாடுகளையும் கற்பித்ததன்றி மற்ற பிடிவாத சைவர்களையும் அறிமுகம் செய்து வைத்தார். தன் மகன்மேல் சுமத்தியிருக்கும் இப்பிடிவாதப் பளுவை அவன் தாங்க முடியாது என்று தாயார் வருத்தப் பட்டுக்கொண்டே யிருந்தாள். அடிக்கடி சிவன் கோவிலுக்குச் சென்றுவந்து கொண்டிருந்த மூலசங்கரனுக்கு வழிபாட்

டின் எல்லா சடங்குகளும் தெரியவந்தது. இக்காலத்திலே மூலசங்கரன் பதினான்காம் வயதை அடைந்தான். யஜுர் வேதம் முழுவதும் மற்ற வேதங்களிலே சில பாகங்களும் மனப்பாடமாக யிருந்தது. மற்ற சம்ஸ்கிருத நூல்களிலும் சிறிது அனுபவம் ஏற்பட்டிருந்தது. அர்த்தம் சரியாகத் தெரியாமலே இவ்வளவையும் பாடம் செய்துவைத்திருந்த போதிலும் அவன் தகப்பனார் மாத்திரம் தன் புத்திரனின் சாமர்த்யத்தைக் கண்டு மிகுந்த சந்தோஷத்தையே அடைந்து வந்தார்.

இக்காலத்திலே மூலசங்கரனின் மனதைவிட்டுப் பிரியக் கூடாத ஓர் பெரிய சம்பவம் ஏற்பட்டது. விக்ரம ஆண்டு 1894-ல் வந்த மாசிமாதம் 13-ந் தேதியில் அனுசரித்த சிவ ராத்திரி விரதத்தின் பலனே அச்சம்பவமாகும். இக் குறிப்பிட்ட நாளுக்குச் சில நாள் முன்பாகவே அம்பாசங்கர் தன் மகனுக்கு விரதமனுஷ்டிக்கவேண்டிய கட்டளையிட்டிருந்தார். குழந்தை அதை சரிவர அனுசரிக்க முடியாது, தவறி அனுசரித்தாலும் மிகுந்த வியாதிக்கு உள்ளாவான் என்று சொல்லித் தாயார் மறுத்தாள். ஆனாலும் அம்பாசங்கர் தன் மனதை மாற்றாமல் அவ்விரதமனுஷ்டிப்பதால் உண்டாகும் நற்பலனை தன் மகனுக்கு அடிக்கடி விளக்கிச் சொல்லிக்கொண்டு வந்தார். மூலசங்கரனும் தன் தந்தையின் வார்த்தைகளை யேற்றுக்கொண்டு காலை ஆகாரம் மாத்திரம் உண்டு மற்ற வேளைகளில் பட்டினி இருந்து வரலானான். குறித்த நாளும் வந்தது. மனதை திடம் செய்துகொண்ட மூலசங்கரன் அன்று முழுவதும் கொஞ்ச ஆகாரமுமின்றி முழுப்பட்டினியாக இருந்தான். மாலை ஆனவுடன் தன் மகனை சிவன் கோவிலுக்கு அழைத்

துச் சென்ற அம்பாசங்கர் அன்று இரவு முழுவதும் தூக்க மில்லாமல் இருந்தால்தான் நல்ல பலன் கிடைக்குமென்று தன் மகனுக்குச் சொல்லிவைத்தார். தூங்கிவிட்டால் அவன் அன்று முழுவதும் பட்டினியாகக் கிடந்ததும் வீணாகிவிடு மென்றும் சொல்லியிருந்தார். அக்கோவிலிலே சிவபக்தர்கள் நெருங்கியிருந்ததை மூலசங்கரன் கண்டான். எல்லா பக்தர் களும் சிவனுக்குப் பூஜை செய்து பலவிதமான பாடல்களாலும் கடவுளை வழிபட்டு வந்தனர். "ஹர ஹர பம்பம் மஹாதேவ" எனும் சப்தம் எங்கும் உண்டாயிற்று. மணியின் ஓசை எல் லோரின் செவிகளையும் துளைத்தது. மூலசங்கரனும் இனிமை யுடன் இச்சப்தங்களைச் செவியேற்றான். இவ்வாறு அவ்விர வின் கால்பாகம் சந்தோஷமாகக் கழிந்தது. இரண்டாம் பாகத்திலே களைப்பை யடைந்த பக்தர்கள் அனேகம் பேர் ஒவ்வொருவராகத் தூங்க ஆரம்பித்தனர். மற்றும் அனேகம் பேர் முழு இரவும் விழித்திருப்பதாக திடம் செய்து கொண் டிருந்தனர். மூன்றாம் பாகத்திலே மற்ற பக்தர்களும் தூக் கத்தை வெல்ல முடியாதவர்களாய் அதனுடன் எவ்வளவோ சண்டையிட்டும் முடியாமல் அதனால் ஜெயிக்கப்பட்டவர்க ளாய் ஒவ்வொருவராக அதன் வசத்தை அடைந்துகொண்டு வந்தனர். அப்பாகத்திலே முதலாக நின்றவர் அம்பாசங்க ரரே யாகும். பூஜாரிகளும் தூக்கத்தை வெல்ல முடியாதவர் களானார்கள். இவற்றை யெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த மூலசங்கரன் "ஏன் இவர்கள் தங்களின் விரதத்தின் பலனை வீணாக்கிக் கொள்கின்றனரோ!" என ஆச்சரியமடைந்தான். ஆனாலும் தான் மாத்திரம் கட்டாயம் விழித்திருக்க வேண்டு மெனத் தீர்மானித்துக்கொண்டான். தூக்கத்தை விலக்கிக்

கொள்வதற்காக சிறிது ஜலத்தைத் தன் முகத்திலே தெளித்துக்கொண்டு சிவலிங்கத்தையே உற்று நோக்கியபடியிருந்தான். அச்சமயத்திலே ஓர் எலி எங்கிருந்தோ அச்சிவலிங்கத்தின்மேல் வந்து ஏறி இறங்கி அங்கே வைத்திருந்த பூஜாத்திரவியங்களை அருந்தலாயிற்று. சில நேரம் வரை இக்காட்சியைக் கண்ணுற்றுப் பிரமித்துப்போயிருந்த மூலசங்கரன் திடீரென்று தன் நினைவைப்பெற்று "இதுதான் மனித உருக்கொண்டுவருவதாகவும், உடுக்கை வாத்தியம் வாசித்துக்கொண்டிருப்பதாகவும் நான் கதையிலே படித்த மஹாதேவனு (சிவனு)? துஷ்டர்களைத் தண்டித்து சிஷ்டர்களைக் காப்பாற்றும் கைலாசவாசியான பரமசிவன் இதுதானு? தன்மேல் ஏறிய இச்சுண்டெலியையுங்கூட விலக்காமல் சும்மாயிருக்கின்றதே இவ்வுருவம்!" என்று தனக்குள்ளே விசாரிக்கலாயினன்.

அனேக நூற்றூண்டுகளாக சிவபக்தர்கள் இச் சிவராத்திரியைக் கொண்டாடிவந்தும் ஒருவருக்காவது இச்சந்தேகம் எழவில்லை. ஒருவராவது இவ்வாறு விசாரிக்கவில்லை. காரணம் என்ன? அவர்களின் சுபாவமே எதையும் விசாரிக்காது நம்பிவிடுவது ஆகும். கணக்கிட முடியாத பேர்கள் கணக்கிட முடியாத மரங்களிலிருந்து கணக்கிட முடியாத பழங்கள் பூமியின்மேல் விழுவதைப் பார்த்திருக்கிறூர்கள். ஆனால் ஒருவராயினும் "பழுத்த பழம் ஏன் பூமிமேல் விழவேண்டும்?" என ஆராய்ந்தாரில்லை. ஆனல் ந்யூடன் (Newton) என்னும் ஒருவரே அதை ஆராய்ந்து அதன் காரணத்தைக் கண்டுபிடித்து மனித சமூகத்திற்கு உதவினர். ஜடப்பொருள்கள் தண்ணீரின்மேல் மிதப்பதைக் கணக்கில்லாதவர்கள் தின

மும் காண்கின்றார்கள். ஆனாலும் அதன் காரணத்தை அறிய முயற்சித்துக் கண்டுபிடித்தவர் கேலிலியோ (Galileo) வே ஆகும். இப்புத்தகத்தில் வரும் விஷயத்திலேயும் இதே மாதிரியான ஓர் சம்பவத்தை அறியலாம். இச்சம்பவத்தைக் குறித்து சர் சையத் அஹமத்கான் அவர்கள் பின்வருமாறு கூறுகிறார் :—

"தயானந்தருக்கு விக்கிரகத்திலே நம்பிக்கை இல்லாத வராகச் செய்து வேதங்களின் உண்மைப் பொருளைத் தேடியலையச் செய்த சம்பவம் ஏற்பட்டிராவிட்டால் என்ன ஆகி இருக்கும் :" மூலசங்கரனின் வாழ்விலே மிகுந்த ப்ரகாசம் பொருந்திய சம்பவம் இதுவே யாகும். ஏனெனில் அவன் தனக்குள்ளேயே உண்டான "இதற்குப் பிறகு உண்டாகும் வரம் உன்னுடையதே யாகும். ஆனால் நீ செய்யவேண்டிய வேலை அதிகமுண்டு. நீ முக்தியைப் பெறுவதற்கு முன்பே அவ்வேலைகளை யெல்லாம் செய்து முடித்துவிடவேண்டும். வேதத்தைப் படித்து உன்னை அறிவால் நிறப்பிக்கொள். அதிலிருந்து உன் சகோதரர்களைப் பொம்மை விளையாட்டினின்றும் விலக்கி உண்மைக் கடவுள் தொழுகையில் செலுத்து" இவ் வார்த்தைகளைக் கேட்டுவந்தான். அதையே பரம்பொருளின் ஆசீர்வாதமெனத் தெரிந்துகொண்டான்.

மற்றும் பலதடவை அவ்வுருவம் கடவுளா அல்லவா என்ற விசாரணையைச் செய்தான். தனக்குத்தானே அச் சந்தேகத்தைத் தீர்த்துக்கொள்ள முடியாது என்று கண்ட போது அவன் தன் தந்தையை எழுப்பித் தன் சந்தேகத்தைத்

தீர்க்குமாறு வேண்டிக்கொண்டான். ஆனால் தகப்பனாரோ மிகுந்த கோபமடைந்தவராய்த் தன் மகன் அவ்வாறு கேட்டது மிகமிகத் தப்பிதம் என்று சொன்னார். தன் தகப்பனின் கோபத்தைக் கண்ட மூலசங்கரன் மிகுந்த அமைதியான குர லில் "இக்கல்லுருவத்தின்மேல் எலி திரிந்துகொண்டிருக்கி றது. சொல்லமுடியாத ஆபாசங்களையும் செய்கிறது. கதை யில் நான் படித்த மஹாதேவன் சகல திரிபுரசம்ஹாரனல் லவா? என்றால் இவ்வுருவம் எலியையும்கூட தடுக்கவில்லையே! முதலில் தன் தலையைக்கூட இவ்வுருவம் அசைக்கவில்லை. தன்னைத்தான் காப்பாற்றிக்கொள்ள இதற்குத் தெரியவில்லை ஆகையாலே இவ்வுருவத்தைக் கொண்டு உண்மையான பரம் பொருளை அறியமுடியாதென்று நான் நினைக்கின்றேன்!" என்று பதிலளித்தான். அம்பாசங்கரன் தன் மகனின் சந் தேகங்களை விலக்க முற்பட்டு உண்மையில் மஹாதேவன் கைலாசத்தில்தான் வசித்துக்கொண்டிருப்பதாகவும் ஆனால் கலியுகத்திலே யாரும் அவரைச் சென்று காணமுடியாதாகை யால் இக்கல்லை அவராகப் பாவித்து ஜனங்கள் அன்புசெலுத் துகிறார்களெனவும் ஆகையால் தன் மகன் சந்தேகப்படலா காதென்றும் சொன்னார். ஆனால் தகப்பனாரின் கோபமோ பதிலோ ஒன்றும் மூலசங்கரனை திருப்தி செய்யவில்லை. அதற் குப் பதிலாக அவ்வுருவத்தின் மேல் இருந்த கொஞ்ச நம்பிக் கையையும் இழக்கச் செய்துவிட்டன.

அப்போதே இனிமேல் உருவவழிபாட்டை எப்போதும் புரிவதில்லை யெனத் தீர்மானித்துக்கொண்ட மூலசங்கரன் தனக்குப் பசி யெடுப்பதாகவும், மிகுந்த களைப்பாயிருப்பதாக

வும் சொல்லி வீட்டிற்குச் செல்ல விடை கேட்டான். தகப்பனும் தன் மகனுக்கு விடை யளித்துத் துணையாக ஓர் சிப்பாயையும் அனுப்பிவித்தார். ஆனாலுங்கூட அன்றிரவெல்லாம் ஒன்றுமே சாப்பிடாதிருக்கும்படி மூலசங்கரனுக்குச் சொல்லியனுப்பினார். ஆனால் வீட்டிற்குச் சென்றவுடனே ஆகாரத்தைக் கேட்டான் மூலசங்கரன். தாயாரும் அளித்தாள். அத்துடன் " நான் முன்பே சொல்லவில்லையா உன்னால் முழுதும் பட்டினியிருக்க முடியாதென்று " என்றும் சொன்னாள். மூலசங்கரன் சாப்பிட்டபிறகு 1 மணி சுமாருக்கு படுக்கச் சென்றான். விடியற்காலை வீட்டிற்குத் திரும்பி வந்த அம்பா சங்கார் தன் மகன் இரவு சாப்பிட்டுவிட்டதை அறிந்து பல விதமாக மகனைத் தண்டிக்கலானார்.

மூலசங்கரன் மறுபடியும் தான் கதையில் படித்த சிவன் அங்கிருக்கவில்லை என்ற நியாயத்தையே பேசிவரலானான். தகப்பனார் மற்றும் சிலநாள் கழித்துத் தன் மகனின் மனதை மாற்றிவிடலாமென்று நினைத்துப் பேசாமலிருந்துவிட்டார். அப்போதிருந்து அவன் தன் தகப்பனார் செய்துவரும் எல்லா சடங்குகளுக்கும் பூஜைகளுக்கும் காரணத்தை அறிய ஆவல் கொண்டு முயற்சித்து வந்தான். மூலசங்கரன் தன் மாமனைச் சந்தித்து அவரிடம் எல்லா சமாச்சாரங்களையும் சொல்லித் தன் தகப்பன் தன்னை விரதங்கள் அனுஷ்டிக்கும்படி தொந்திரவு செய்யாதிருக்குமாறு செய்யும்படி வேண்டிக்கொண்டான். நற்குணம் படைத்த அவர் மூலசங்கரனின் தாயின் சகாயத்தைக்கொண்டு அம்பாசங்கரை இனிமேல் மூலசங்கரனை அவரின் விரதங்களிலே சேர்த்துக்கொள்ளாமலிருக்குமாறு

வேண்டி அவரின் சம்மதத்தையும் பெற்றளித்தார். இவ்வாறுன விரத விடுதலை பெற்ற மூலசங்கரன் படிப்பிலே அதிக கவனம் செலுத்தி வெகு சீக்கிரத்தில் நிகண்டு, நிருக்தம், மீமாம்சை முதலிய நூல்களை யெல்லாம் கற்றுமுடித்தான்.

இப்போது மூலசங்கரனின் வயது 16. கல்வியிலேயே தன் முழு கவனத்தையும் செலுத்தி யிருந்தபோதிலும் 2 வருடங்களுக்குமுன் சிவராத்திரியில் தனக்கேற்பட்டசம்பவத்தை மாத்திரம் அவன் மறக்கவே இல்லை. இதே சமயத்தில் மற்ருேர் எதிர்பாரா சம்பவம் மூலசங்கரனின் மனதைக் கலக்கலாயிற்று. அவனுக்கு இரண்டு சகோதரர்களும் இரண்டு சகோதரிகளுமிருந்தனர். அவர்களில் தனக்கும் மற்றெல்லோருக்கும் சிறிய பெண்ணை மூலசங்கரன் மிகுந்த அன்புடன் நேசித்து வந்தான். ஓர் நாள் எல்லோருக்கும் சிறியவள் வியாதிவாய்ப்பட்டாள். தன் இரண்டு குமாரர்களுடனே ஓர் நண்பரின் வீட்டில் நடந்துகொண்டிருந்த ஓர் நடனத்தைப் பார்த்துக்கொண்டிருந்த அம்பாசங்கருக்கு இச்சமாச்சாரம் எட்டியது. எல்லோரும் உடனே வேகமாக வீட்டிற்சென்று பார்த்தபோது பெண் காலரா வியாதியால் பீடிக்கப்பட்டிருந்தாள். வைத்தியர்களெல்லாம் எவ்வளவோ முயற்சி செய்தும் சுமார் நான்குமணி நேரத்திலே அவள் உயிர் உடலைவிட்டு நீங்கிற்று. அவளின் மரணம் அம்பாசங்கரனின் வீட்டில் பெரிய துக்கத்தை உண்டுபண்ணியது. எல்லோரும் அழ ஆரம்பித்தார்கள். மூலசங்கரனின் தாய் காற்றையே தன் துக்கத்தால் துக்கமயமாக்கினுள், தன் அன்புறும் தங்கையின் பிரிவால் மிகுந்த விசனத்தை யடைந்த மூலசங்கரன் அவனின் தங்கையின் பிணத்தினருகிலேயே நின்றுகொண்டிருந்தான். ஆனல்

அவன் கண்களிலிருந்து ஒரு துளி ஜலமும் வரவில்லை. மூலசங்கரனின் தந்தையும் மற்றுமுள்ளோர்களும் "மூலசங்கரனுக்குத் தன் சகோதரியின்மேல் அன்பு இல்லை" என்று சொல்லிக்கொண்டார்கள். அவன் அழாமலிருந்ததற்காகப் பலவிதமாக அவனைத் திட்டினர். அவன் மனம் கல்லைப் போன்றதென்று சொன்னார்கள். மரியாதைக்காகிலும் தங்களுடன் சேர்ந்து விசனப்படும்படி அவனை அழைத்தனர் கண்ணீரால் அமைதியடைய முடியாத அவ்வளவு பெரிய துக்கத்தில் மூலசங்கரன் ஆழ்ந்திருந்தான். தன் எதிர் காலத்தைக் குறித்து சிந்தித்தபடி நின்றிருந்தான். தங்கள் வார்த்தைகள் வீணானதைக் கண்ட பந்துக்கள் அவனைச் சென்று தூங்குமாறு உத்திரவிட்டனர். மூலசங்கரனும் அவ்விடமிருந்து நீங்கிச் சென்று தன் படுக்கையின்மேல் படுத்தபடி தன் தங்கையின் பிரிவைக் குறித்து விசனித்திருந்தான். "இறப்பினின்றும் தப்பித்துக்கொள்ள மருந்தேதாகிலுமுண்டா?" என்று ஆலோசிக்கலானான். மறுநாள் படுக்கையை விட்டெழுந்த காலத்திலே உலகமே மூலசங்கரனுக்குச் சிற்றின்பமாகத் தோன்றலாயிற்று.

மூலசங்கரன் மறுபடியும் தன் படிப்பைத் தொடர்ந்து வாசிக்கலானான். அடிக்கடி பிறப்பு இறப்புகளின் ரகசியத்தைக் குறித்தும் சிந்தித்துக்கொண்டிருந்தான். தங்கை இறந்து மூன்று வருடங்கள் கழிந்தன. அப்போது மறுபடியும் பெரியதோர் விசாரணையை மூலசங்கரனின் மனதில் உண்டாக்க மற்றொரு சம்பவமும் நிகழ்ந்தது. தன்னை மடியிலே வைத்து விளையாடி, சதா புத்திமதிகளைப் போதித்து, கல்வி

யில் தனக்கு உதவிசெய்துகொண்டு வந்தவரான தன் மாமனின் சாவை மூலசங்கரன் கண்டான். அவரும் பெரிய காலரா வியாதியாலேயே இறந்தார். இறந்துகிடக்கும் தன் மாமனின் முகத்தையே பார்த்தபடி நின்றிருந்தான் மூலசங்கரன். அதன் பிறகு தன் நண்பர்களையெல்லாம் அண்டி முக்தியைப்பெற ஏதாவது வழியுண்டாவென்று கேட்டுவாலானுன். யோகாப்பியாசத்தாலே மனிதர்கள் முக்தியைப் பெறலாகும் என்ற விடைகளையே அவன் பெற்றுவந்தான். கடைசியாக உண்மையில் தன் சந்தேகங்கள் விலகவேண்டுமானுல் தான் வீட்டைத் துறந்து செல்லவேண்டுமென்று மூலசங்கரன் தீர்மானித்தான். முக்தியின் சுகத்தை உணர்ந்தறிந்த மூலசங்கரனுக்கு உலக இன்பங்கள் மிகுந்த சுலபமாகத் தோன்றின. கீழ்வரும் வாக்கியங்களை அவ்வப்போது சொல்லி அதை ஆழ்ந்து சிந்தித்துவந்தான் :—

"கண்களுக்குத் தெரியும் இவ்வுலகத்தின் தத்துவத்தையும், இவ்வுலகத்தின் உற்பவக்காரணமாயிருந்த பரம்பொருளின் தத்துவத்தையும் உள்ளபடி சந்தேகமறத் தெரிந்துகொள்பவர்கள் அவ்வறிவால் மரணத்தை வென்று இகபர சுகங்களை முழுதும் பெறுவார்கள்." (யஜுர் 15-14).

வெகுசீக்கிரத்திலே மூலசங்கரனின் பந்துக்களும் மூலசங்கரனின் எண்ணத்தை அறிந்துகொண்டார்கள். அவன் வீட்டைவிட்டு நீங்கிச் செல்லாமலிருக்கவேண்டி பலவித உபாயங்களால் அவன் மனதை மாற்ற முயற்சித்துவந்தார்கள். கடைசியாக அவனுக்கு விவாகம் செய்துவைத்தால்தான் அவன் வீட்டிலேயே தங்கியிருப்பான் என்ற

தீர்மானத்தைக் கொண்டனர். இதை அறிந்துகொண்ட மூலசங்கரன் தனக்கு விவாகம் செய்து வைக்கக் கூடா தென்று வெகுவாக வேண்டிக்கொண்டான். இதனால் இனி ஒரு வருடம்வரை அவனுக்கு விவாகம் செய்துவைப்ப தில்லையென்று பந்துக்களும் சம்மதித்தனர். இவ்வொரு வருடகாலமும் மூலசங்கரன் சம்ஸ்கிருதத்தை ஊன்றி வாசித்துவரலானான். ஆனால் ஒருவருடத்திற்குப் பின்னும் தன் விவாகம் நடவாதபடி செய்யவேண்டிய வழிகளையும் ஆலோசித்துக்கொண்டுவந்தான். இச்சமயம் பெற்றோர்கள் மூலசங்கரனை அங்கேயே வைத்துக்கொண்டிருந்தால் ஒரு வரு டத்திற்குப் பிறகுங்கூட அவனுக்கு விவாகம் செய்யமுடியாது என்று கண்டு அவனை அவ்விடத்திலிருந்து வேறிடத்திற்கு மாற்றிவிட நினைத்திருந்தார்கள். தனக்குப் பிற்கால வாழ் விலே நல்ல பலனை யளிக்குமென்ற நினைவினால் கல்வியிலே நல்ல ஊக்கம்செலுத்தி வாசிக்கலானான் மூலசங்கரன்.

குறித்த வருடம் முடியப்போகின்றதென்று கண்ட மூல சங்கரன் தன் பெற்றோர்களைப் பார்த்துத் தன்னை காசிக்கு அனுப்பிவைத்தால் அங்கே தன் கல்விதாகத்தைத் தீர்த்துக் கொள்ளமுடியுமென்று கேட்டான். ஆனால் அவனின் வேண்டுகோள் நிறைவேறவில்லை. இதனால் பெற்றோர் தன் மகன் வீட்டைவிட்டுப் போவதற்காகச் செய்யும் சூழ்ச்சியே இது என்று அறிந்தனர். மூலசங்கரன் வேதத்திற் சொல்லி யுள்ள மறைமாணவ (ப்ரம்மசர்ய) த்தின் பெரிய பலன்களை எடுத்துச் சொன்னபோதுங்கூட பெற்றோர் அவனைக் காசிக்கு அனுப்ப மறுத்து அவன் சீக்கிரம் விவாகம் செய்துகொள்ள

வேண்டுமெனவும் வற்புறுத்தினர். இனிமேல் தன்னைக்காசிக்கு அனுப்பமாட்டார்களென்று மூலசங்கரன் நன்கு தெரிந்து கொண்டான். அதன் பிறகு தன் ஊரிலேயிருந்து சிலமைல்கள் தூரத்திலே யுள்ள தன் முன்னோர் நிலம் இருக்கும்படியான கிராமத்திற்காவது தன்னை அனுப்பினால் தான் அங்கேயாவது ஓர் பெரியாரிடம் கல்வி கற்று வருவதாகத் தெரிவித்தான். அங்கிருக்கும் நிலத்தையும் பாதுகாத்துகொள்வதாயின் மூல சங்கரனை அங்குசெல்ல அனுமதிப்பதாகத் தந்தை சொன்னார். மூலசங்கரனும் அதற்குச் சம்மதித்தான்.

புதிய உபாத்தியாயர் தன் புதுமாணவனின் கல்வித்திற னைக்கண்டு மிகுந்த சந்தோஷங்கொண்டு வந்தார். ஒருநாள் மாணவனும் உபாத்தியாயரும் வாதம் செய்துகொண்டிருக் கும்போது மாணவன் தான் கடைசிவரை மணம் செய்து கொள்ளாமலேயே இருக்கப்போவதாகச் சொன்னான். இதை உபாத்தியாயர் மூலசங்கரனின் பெற்றோர்களுக்குத் தெரிவிக்க அவர்கள் மறுபடியும் மூலசங்கரனைத் தங்கள் ஊருக்கழைத்துச் சென்று விவாகத்திற்கு வேண்டிய ஏற் பாடுகளைச் செய்துகொண்டிருந்தனர்.

இன்னும் ஒரு மாதத்திலே தன் விவாகம் கட்டாயம் நடைபெற்றுவிடுமென்று கண்ட மூலசங்கரன் தன் நண்பர்க ளின் உதவியை நாடினான். ஆனால் அவர்களும் மூலசங்கரன் விவாகம் செய்துகொள்ளவே வேண்டுமென்று வற்புறுத்தி னர். இதன்மேல் தான் வீட்டைவிட்டுச் சென்றுவிட்டால் மாத்திரம் விவாகமெனும் பந்தத்திலேயிருந்து தப்பமுடியு

மென்று மூலசங்கரன் தீர்மானித்தான். இன்னும் விவா
திற்காகக் குறிப்பிட்ட நாள் ஒருவாரம் இருக்கும்போது மூ
சங்கரன் ஒருநாள் மாலை தன் பெற்றோர்களுக்கும், தன் வீ
டிற்கும், கிராமத்திற்கும் ரகசிய வந்தனங்களைச் செலு
வீட்டைவிட்டு வெளிப்பட்டுச் சென்றுவிட்டான். தன்ன
முடியுமானல் இனியெப்போதும் அவ்விடத்திற்குத் திரு
வருவதில்லை என்ற தீர்மானத்துடன் மூலசங்கரன் த
வீட்டைவிட்டு நடக்கலானன்.



## அத்தியாயம் 3.

## முக்தியை நாடி அலைதல்.



இவ்வாருக (விக்ரம ஆண்டு) 1902-ல். மூலசங்கரன் தன் 21-வது வயதில் வீட்டைத் துறந்தான். அவன் கால்கள் வீட்டைவிட்டுச் செல்வதினும் அவன் மனது சென்றுகொண்டிருந்த வேகத்தை எழுதத் தரமன்று. தன் தகப்பனின் வேலையாட்கள் தன்னைக் கண்டுவிடக்கூடுமென்ற பயத்தால் பெரிய வீதிகளிலே செல்லாமல் மூலசங்கரன் சிறிய சிறிய சந்துக்களின் வழியாகவே நடந்து சென்முன். முதல்நாள் இரவைத்தன் கிராமத்திலேயிருந்து 8 மைல் தூரத்திலுள்ள கிராமத்தில் கழித்து பொழுதுவிடியும் தருணத்தில் மறுபடி அங்கிருந்து நடக்கலாஞன். சூரியன் மறையுங்காலம்வரை நடந்துகொண்டேயிருந்தான். இவ்வாருகக்களைப்பையடைந்து 25-வது மைலில் உள்ள மற்ருேரிடத்தில் அன்று மாலை தங்கிஞன். அக்கிராமத்திற்கு வெளியிலே யிருந்த ஓர் "அனுமான்" கோவிலிலே அன்றிரவைக் கழித்தான். அக்கிராமத்திற்குத் தன்னைத்தேடிக்கொண்டு குதிரையின்மேல் வந்த தன் தகப்பனின் வேலையாளின் கண்பார்வையிலிருந்து தப்பித்துக் கொண்டு அங்கிருந்து செல்லலாஞன். வழியிலே சில சாதுக்களைச் சந்தித்து அவர்களுடன் கலந்துகொண்டான். ஆஞல் அவர்கள் மூலசங்கரன் மேலிருந்த உலக ஆசைக்குக் காரண

மான ஆபரணங்களை அபகரித்துக்கொண்டு அவனை நீக்கிவிட்டனர். பிறகு மூலசங்கரன் அங்கிருந்து நீங்கி சிறிது தூரத்திலே வாத்வான்மோர்வீ (Wadhwan morvi) ரயில்வேலயனில் உள்ள சயேலி (Sayle) எனும் ஸ்டேஷனுக்குச் சென்றுகொண்டிருந்த வேறு சில சாதுக்களின் கூட்டத்திலே சென்று கலந்துகொண்டான். அவர்களுடன் சென்று லாலா பாகத் என்பவரின் வீட்டிலே அனேக சாதுக்கள் கூடியிருப்பதைக் கண்டான். அவ்விடத்திலே ஓர் ப்ரம்மசாரியிடமிருந்து காவியாடைகளையும் ஓர் கமண்டலத்தையும் சுத்தசைதன்யர் என்ற பெயரையும் பெற்றான்.

சயேலியிலிருந்து நீங்கி அஹமதாபாத்துக்கருகிலேயுள்ள கொன்த கங்காட் எனும் ஊரை அடைந்தான். அங்கே சில பைராகிகள் ஓர் ராணியை கொள்ளையிட்டுக் கொண்டிருப்பதைக் கண்டான். அவர்கள் சுத்தசைதன்யரையும் சூழ்ந்துகொண்டு அவரணிந்திருந்த பட்டாடைகளை அவிழ்த்துக் கொடுத்துவிட்டு பஞ்சாடையை அணிந்து செல்லுமாறு உத்திரவிட்டார்கள்.

அங்கிருந்து சுத்தசைதன்யர் சரஸ்வதி நதிக்கரையில் அமைந்திருக்கும் சித்தபூரில் நடக்கும் திருவிழாவிலே தான் ஓர் சாதுவைக் கண்டுபிடித்து அவரிடம் தன் சந்தேகங்களை விலக்கிக்கொள்ளலாமென்று நினைத்து அங்கே சென்றார். வழியிலே ஓர் பைராகியைச் சந்தித்தார். அப்பைராகி சுத்தசைதன்யர் வீட்டைவிட்டு வந்துவிட்ட காரணத்தை வினவினார். சைதன்யர் எல்லா விஷயங்களையும் சொன்னார். பிறகு

சித்தபூரையடைந்து நீலகண்ட மகாதேவன் கோவிலிலே தங்கியிருந்தார். அங்கே அனேக கல்வியாளர்களைச் சந்தித்தார். இச்சமயத்தில் சைதன்யரைக் கண்டுகொண்ட அப்பையாகி அவரின் பெற்றோர்களுக்குச் சைதன்யரின் இருப்பிடத்தைக் குறித்து கடிதம் எழுதிவிட்டான்.

கடிதம் வரப்பெற்ற அம்பாசங்கார் சில சிப்பாய்களுடன் சித்தபூரை வந்து அடைந்தார். பலவிடங்களிலும் ஊன்றித் தேடியபின் கோவிலுக்குள் மூலசங்கரனைக் கண்டுபிடித்தார். தந்தையும் மகனும் சந்தித்த காலத்திலே தந்தைக்கு கோபம் பொங்கிவழியத் தன் மகனை நோக்கி பலவித ஆபாச மொழிகளால் (தன் குலத்தைக் கெடுக்கவந்த கோடாலிக்காம்பெனவும், தன் வமிசத்திற்கே அவமானம் உண்டாகிவிட்டதென்றும்) திட்டலானார். தந்தையின் கோபத்திற்கஞ்சிய மூலசங்கரன் தந்தையின் பாதங்களிலே விழுந்து வணங்கி தன்னை மன்னிக்கவேண்டுமெனவும் தான் இம்மாதிரி ஓடிவந்துவிடத் தூண்டுதல் செய்தது சில வஞ்சனைக்காரர்களென்றும், ஆகையால் தன்மேல் சிறிதுங் குற்றமில்லாமையினாலே தன்னை மன்னிக்கவேண்டுமெனவும் மன்றாடினான். உடனே தந்தை மகன் அணிந்திருந்த காவி ஆடைகளைக் கிழித்தெறிந்துவிட்டு வெண்மையான ஆடைகளை அணிவித்து இரவில் மறுபடியும் ஓடிவிடாமல் பார்த்துக்கொள்ள ஓர் சிப்பாயியையும் காவலாக நியமித்தார்.

இரவும் வந்தது. தன் காவலாளன் கொஞ்சம் ஏமாந்தாலும் மூலசங்கரன் அங்கிருந்து ஓடிவிடத் தீர்மானித்திருந்

தான். முன்பு தன் தந்தையின் கோபத்தைத் தணிக்கவே மன்னிப்புக் கேட்டுக்கொண்டானே யன்றி மறுபடி இல்லம் செல்லும் எண்ணத்துடனல்ல. இவ்வாறு தான் வெளிச் செல்லும் வழியைத் தேடிக்கொண்டிருந்த மூலசங்கரன் தனக்குக் காவலாயிருந்தவன் மெதுவாகத் தூங்கிவிழுவதைக் கண்டான். உடனே அங்கிருந்து மெதுவாக அடிமேலடிவைத்து கொஞ்சதூரம் நடந்துவந்த பிறகு தன் கால்கள் எவ்வளவு வேகமாகச் செல்லுமோ அவ்வளவு வேகமாக ஓட்டம்பிடித்தான். இவ்வாறு ½ மைல் தூரம் விடாமல் ஓடியபின் தன் எதிரிலே ஓர் மரத்தின் கிளைகளால் மூடப்பட்டுள்ள ஓர் கோவிலைக் கண்டான். மெதுவாக யாருங் காணாதவண்ணம் அம் மரத்தின்மேல் ஏறினான்.

இஃதிவ்வாறிருக்க சிறிது நேரத்திலே துயில் கலைந்த காவலாளன் தன்வசமிருந்த பறவை பறந்துபோய்விட்டதைக் கண்டான். வேகமாக அச்சமாச்சாரத்தை எல்லோருக்கும் தெரிவிக்க உடனே சில குதிரை வீரர்கள் நாற்புறங்களிலும் குதிரைமீதமர்ந்து தேடச்சென்றனர். அவர்களில் சிலர் மூலசங்கரன் ஒளிந்திருக்கும் மரத்தின் கீழ் உள்ள கோவிலுக்கும் வந்தனர். ஆனால் மரத்தின் மேலிருக்கும் மூலசங்கரனைக் கவனிக்காமல் வந்தவழியே திரும்பிச் சென்றுவிட்டனர். ஆனால் மூலசங்கரன் மாத்திரம் இக்காட்சியை பார்த்துக் கொண்டேயிருந்தான். இவ்வாறு அம்மரத்தின் மேலேயே அன்றிரவைக் கழித்தான். காலையிலும் கீழிறங்க அஞ்சி அன்றுபகலெல்லாங்கூட ஆகாரமின்றி அம்மரத்தின்மேலேயே இருந்தான். ஆனால் சிலமுறை தன் கையிலிருந்த லோடாத்

தண்ணீரில் சிறிது சிறிது பருகிவந்தான். மறுபடி இரவுவந்த பின் மெதுவாக ஊர்ந்து மரத்தை விட்டிறங்கி மேலும் நடக்கலானான். இவ்வாறு நான்கு மைல்தூரம் விடாமல் சென்று ஓர் கிராமத்தில் தங்கினான். இவ்வாறே நடந்து பரோடா (Baroda) எனும் ஊரைச்சேர்ந்து அங்கே அத்வைதிக சாதுக்களுடன் சேர்ந்து ஓர் வேதாந்தியாயினான்.

சிலநாள் அங்கு தங்கியிருந்து மறுபடி அவ்விடம் விட்டு நீங்கி நர்மதாவின் கரையில் உள்ள மற்றோர் ஊருக்குச் சென்றான். அவ்விடத்திலே இன்னும் அனேக சாதுக்களைச் சந்திக்கலாமென்பது அவனின் கருத்து. நர்மதையின் கரைகளில் சுற்றிச் சுற்றி அனேக சாதுக்களையெல்லாம் சந்தித்தான். அத்துடன் தனக்கு வேதாந்தசாரம், ஹரிமேதத்ரோதகம், ஆர்ய ஹரிஹர த்ரோதகம் முதலியவைகளைக் கற்பித்தவரான பரம ஹம்ச பரமானந்தரையும் பன்முறை சந்தித்தான். மூலசங்கரன் மறைமாணவனு (ப்ரம்மசாரியா)ய் இருந்ததாலே சமையல் தானே சமைத்துக்கொள்ள வேண்டியிருந்தது. இது அவனின் படிப்புக்குச் சிறிது தடையா யிருந்துவந்தது. ஆகையால் தான் ஓர் சன்னியாசியாகி மற்றோர் பெயரையும் வைத்துக்கொள்ள வேண்டுமென்று நினைத்திருந்தான். இதை சிதாஸ்ரம் எனும் ஓர் சாதுவினிடத்தில் தெரிவிக்க அவர் இவரின் பால்யவயதைக்கண்டு இவருக்குச் சன்னியாசம் அளிக்க மறுத்துவிட்டார். இதனால் வருத்தமடையாத மூலசங்கரன் மற்றோர் நாளில் எவ்வாறாயினும் தான் துறவு பூணலாமென நிச்சயித்திருந்தான். சீக்கிரத்திலே தென்னாட்டைச் சேர்ந்த ஓர் மறைமாணவரையும், மற்றோர் ஸ்வாமி "பூர்ணனந்த்"

யெனும் தண்டிசன்னியாசியையும் சந்தித்தார். அவர்கள் மூலசங்கரனின் கல்வித்திறமையைக் கண்டு மிக மகிழ்ந்தார்கள். மூலசங்கரனும் அவர்களின் வித்வத்தன்மைக்கு ஆச்சரியப்பட்டான். இவர்களுக்குள் பெரிய வாக்குவாதம் நடந்த பிறகு அம்மறைமாணவர் பூர்ணானந்தரை மூலசங்கரனுக்குத் துறவு அளிக்கும்படி வேண்ட அவரும் சம்மதித்து மூலசங்கரனுக்குச் சன்யாசம் பூணுவித்து "தயானந்த்" எனும் நாமத்தையும் அளித்தார். இவ்வாறாக மூலசங்கரனெனும் மறைமாணவன் "தயானந்த்" யெனும் சன்னியாசியானான்.

இவ்வாறாக மூலசங்கரன் பிற்காலத்தில் "சுத்தசைதன்யர்" எனும் பெயரையும், அதன்பிறகு தற்காலம் உலகமெலாம் விளங்கிவரும் "தயானந்த்" என்ற பெயரையும் துறவறத்தையும் தன் 24-வது வயதில் அடைந்தார்.



அத்தியாயம் 4.

## அலையும் துறவியார்

துறவியாக இருக்கும் தயானந்தர் இப்போது தன் கல்விக்காகவும், யோகாப்பியாசத்துக்காகவும் தன் நேரத்தைச் செலவழிக்க பூர்ண சுதந்திரவாளியானார். பெரிய யோகியாராகப் புகழ்பெற்றிருந்த "ஸ்வாமி யோகானந்த"ரைக் குறித்துக் கேள்விப்பட்டார் தயானந்தர். அவரையடுத்து அனேக வித்தைகளைத் தயானந்தர் கற்றுக்கொண்டார். அங்கிருந்து சித்தூரை யடைந்து கிருஷ்ணசாஸ்த்திரி யென்பவரிடம் சம்ஸ்கிருத இலக்கணம் கற்றுக்கொண்டார். அங்கிருந்து மற்றோர் ஊருக்குச் சென்று மற்றோர் பண்டிதரிடம் வேதங்களைக் கற்றுக்கொண்டார். ஜ்வாலானந்த்பூரி, சிவானந்த்கிரி யெனு மிரண்டு யோகிகளைச் சந்தித்தார். அவர்கள் தயானந்தருக்குச் சில யோகாப்பியாசங்களைக் கற்றுக்கொடுத்து தாங்கள் ஆமதாபாத் செல்வதாகவும் கூடுமானால் தயானந்தரும் அங்கு வந்து வேண்டியபோது தங்களுடன் கலந்துகொள்ளலாமென்றும் சொல்லிவிட்டுச் சென்றனர். ஒருமாதத்திற்குப்பிறகு தயானந்தரும் ஆமதாபாத்தையடைந்து அவ்விரு யோகிகளுடனும் சேர்ந்துகொண்டார். அவர்களும் சந்தோஷித்து தயானந்தருக்கு எல்லா யோகரகசியங்களையும் கற்பித்தார்கள். இதன் பலனைப் பிற்காலத்தில் தயானந்தர் நன்குணர்ந்து இதைத் தனக்கு கற்பித்த அவ்யோகிகளுக்கு மனதில் அநேக வந்தனைகள் புரிந்தார். பிறகு கோ அபுயெனுமிடத்திற்குச் சென்றால்

அனேக யோகிகளை தரிசிக்கலாமென்று நினைத்து அங்கு சென்றார். அங்கும் பல யோகிகளைச்சேர்ந்து இன்னும் அனேக யோகவித்தையின் ரகசியங்களைக் கற்றுக்கொண்டார். இவ்வாறே வழிநெடுக அனேக யோகிகளைச் சேர்ந்து யோகத்தின் ரகசியங்களைக் கற்றுக்கொண்டவராக இமய மலையை நோக்கிச் சென்றுகொண்டிருந்தார். இவ்வாருக 1912 (விக்ரம)ல் ஹரித்துவாரத்தில் நடந்த "கும்பமேளா" உற்சவத்தில் சென்று கலந்துகொண்டார். இப்போது இவரின் வயது 30. இதற்குள் எல்லா யோகரகசியங்களையும் கற்றிருந்தார். ஹரித்துவாரில் யோகாப்பியாசம் செய்துகொண்டும், அனேக யோகிகளிடமிருந்து தன் கொள்கைகளில் அனேகத்தை மாற்றிக்கொண்டுமிருந்தார்.

"கும்பமேளா" உற்சவம் முடிந்தபிறகு அங்கிருந்து ரிஷிகேசத்தை அடைந்து மன அமைதியைப்பெற யோகாப்பியாசத்தைப் புரிந்துவந்தார். இங்கே இரண்டு சாதுக்களையும் ஓர் ப்ரம்மசாரியையும் சந்தித்து அவர்களுடன் தேரியெனும் ஊருக்குச் சென்ருர். ஒருநாள் புதிய நண்பர்கள் தயானந்தரை விருந்துக்கழைத்தார்கள். குறித்த வேளையில் விருந்துக்குச் சென்ற தயானந்தர் தனக்காக மாமிசம் சமைத்திருப்பதைக்கண்டு ஸ்தம்பித்துவிட்டார். சாப்பிடும் நேரமான போது தான் அங்கு சாப்பிடமுடியாதென்று மறுத்து வெளிச் சென்றுவிட்டார். ஒருநாள் தயானந்தர் சாதுக்கள் தினமும் பாடிவரும் புகழ் நூல்களில் சிலதை தனக்களிக்குமாறு சாதுக்களை வேண்டினர். புத்தகங்களும் (தந்திரங்கள்) தயானந்தருக்கு அளிக்கப்பட்டன. அவைகளைத் திறந்து வாசித்த

போது எல்லாம் சுத்த அனுசார ஆபாசங்களாக இருப்பதைக் கண்டார். ஒன்றைவிட ஒன்று மிகுந்த ஆபாசமாக இருப்பதை யறிந்து ஆர்யாவர்த்தத்தின் நாசத்திற்கு இம்மாதிரியான படிப்பினைகளும் காரணமாயிருந்திருக்க வேண்டுமெனத் தீர்மானித்தார். இவ்வாறுக விடாமல் அவைகளை வாசித்து எரிந்துவிட்டு சிந்தனையில் ஆழ்ந்து "இம்மாதிரியான கல்வி சமூகத்திற்கு எப்பேர்ப்பட்ட நாசத்தைத்தான் உண்டாக்கி இருக்கும்!" என்று ஆலோசிக்கலானார்.

அங்கிருந்து புறப்பட்டுச்சென்று தயானந்தர் ஸ்ரீநகரை யடைந்து ஓர் கோவிலிலே தங்கினார். அங்கே பண்டிதர்களுடன் மதசம்பந்தமானவும், சாஸ்த்திர சம்பந்தமானவுமான வாக்குவாதங்களைப் புரிந்துகொண்டு தந்திரம்போன்ற கொடிய நூல்களைக் கண்டித்துவந்தார். அங்குள்ள எல்லா பண்டிதர்களிலும் கங்காகிரி யென்பவரை தயானந்தர் மிகவும் பாராட்டி அவருடனேயே இரண்டு மாதங்கள் வசித்திருந்தார். பிறகு ருத்ரப்ரயாகை, அகஸ்த்திய முனிவர் ஸ்தூபம் முதலாகிய அனேக இடங்களைச் சுற்றிவந்தார். சிவபுரியில் நான்கு மாதங்கள் தங்கியிருந்து கேதாரநாத நாட்டுக்குச் சென்றார். அங்குள்ள அனேக பனிமலைகளுக்குச் சென்று சந்தோஷித்த போதிலும் தான் கேள்விப்பட்டவாறு அவ்விடங்களில் சாதுக்களைக் காணுமையால் வருத்த மடைந்தார். இருபது நாட்கள் மலைகளின்மேல் சுற்றித்திரிந்தபோது அனேக கஷ்டங்களுக்குள்ளானார். ஆனாலும் அம்மலைகளின் சீதோஷ்ண ஸ்திதிக்காக சந்தோஷப்பட்ட தயானந்தர் துங்கநாதமலையின் உச்சியில் ஏறி அங்குள்ள கோவிலைப் பார்க்கவேண்டுமெனத்

தீர்மானித்தார். அக்கோவிலை யடைந்து அனேக விக்கிரகங் களையும் அவற்றை வழிபடும் பக்தர்களையுங் கண்டார். ஆனு லும் அவ்விடம் அவருக்குப் பிடிக்காமையால் அப்போதே இறங்கிவர ஆரம்பித்தார். வழியிலே ஓர் பெரிய மரங்கள டர்ந்த காட்டுக்குள் நுழைந்துவிட்டார். இருளும் வேகமாக சூழத்தொடங்கியது. வழிநெடுக கற்களும் முட்புதர்களுமே நெருங்கியிருந்தன. இவ்வழியாகவே இருளில் மெதுவாக இறங்கிவரலானுர். அங்குள்ள ஓர் பெரிய மரத்தின்மேலே அன்றிரவைக்கழித்து மறுநாள் காலையில் ஒகிமாத்தை நோக்கி நடக்கலானுர். அங்குள்ள அனேக குகைகளில் அறி வில்லா, கல்வியில்லாத மோசக்காரர்கள் நிறைந்திருப்பதைக் கண்டார்.

ஆனுலும் அங்குள்ள ஓர் மஹந்த் தயானந்தரைச்சந்தித்து தன்னுடன் மாணவனுயிருந்து தன் செல்வத்தை பங்கிட்டுக் கொண்டு சுகமனுபவிக்கும்படி வேண்டினுர். செல்வத்திலே விருப்பம் கொண்டாராயினும் தான் எடுத்த காரியத்தைக் கை விட அவருக்கு மனந்துணியவில்லை. ஆகையாலே மஹந்தின் வெகுமதி மறுக்கப்பட்டது. மறுநாள் ஜோஷிமடத்தை யடைந்து அங்குள்ள அனேக சாதுக்களையண்டி இன்னும் சில யோகாகசியங்களைக் கற்றுக்கொண்டார்.

அங்கிருந்து இன்னும் பெரிய யோகிகளை சந்திக்கலா மென்ற எண்ணத்துடன் பத்ரிநாராயணத்தை யடைந்தார். ஆனுல் அங்கு சென்றபோது கல்விச்செல்வம் படைத்தவர் ஒருவரும் அங்கில்லாமைகண்டு ஏமாற்றமடைந்தார். ஆனுல்

அவ்விடத்தின் மஹந்தாகிய ராவல்ஜீ என்பவரின் கல்விக்கு வியந்த தயானந்தர் அவருடன் "வேதமும் சாஸ்த்திரங் களும்" என்ற விஷயத்தைக்குறித்துத் தர்க்கிக்கலானார். சுற் றிலுமுள்ள மலைக்காட்சிகள் இன்பந்தரவல்லனவாயிருந்ததால் அங்கெல்லாம் சென்றுவரவேண்டுமென தயானந்தர் விரும்பி னார். ஒருநாள் காலை புறப்பட்டு அம்மலைகளின்மேல் சென்று அளகாநந்தா யெனும் நதிக்கரையை அடைந்தார். அந்நதியோர மாகவே கொஞ்சதூரம் சென்று எல்லா மலைகளும் பனியால் மூடப்பட்டிருந்த விடத்தை அடைந்தார். எதிரில் வழி காணப் படாமையால் மிகுந்த வருத்தமடைந்தார். வேண்டுமளவு ஆடையும் இல்லை. குளிரோ அதிகம். இரவோ வெகு வேக மாக வந்துகொண்டிருக்கிறது. அத்துடன் பசிகொடுமையைச் சகிக்காமல் அங்குள்ள பனிக்கட்டிகளை அருந்த ஆரம்பித்தார். ஆனாலும் அந்நதியைக்கடந்து அக்கரைக்குச் சென்றால் ஏதாவ தோர் வழி கிடைக்குமென நினைத்தார். சில இடங்களில் மிகுந்த ஆழத்தைப் பெற்றிருந்த அந்நதியில் இறங்கினார். பனிக்கட்டிகளும் சிறு கற்களும் நதியின் வேகத்தில் அடித் துக்கொண்டுவந்து தயானந்தரின் நடையைத் தடைப்படுத் தின. அவரின் கால்களிலிருந்து ரத்தம் வெளிப்பட அத் துடன் குளிரும் நடுக்கிற்று. எவ்விதமாகவோ அக்கரையை அடைந்த தயானந்தர் மூர்ச்சித்து விழுந்துவிட்டார். மூர்ச்சை தெளிந்தபோது தன் கால்களை அசைக்கவும் முடியாமலிருப் பதை அறிந்தார். முன்பே கிழிந்துள்ள தன் ஆடையால் கால்களைக் கட்டிக்கொண்டு நடக்கமுயன்றும் வீணாயிற்று. இச்சமயம் தனக்கு யாராவது உதவி செய்யாவிடின் தான் அவ்விடமே தன் எண்ணங்களெல்லாம் வீணாகிப்போக

அழிந்துவிடுவது நிச்சயமென்று உணர்ந்தார். இவ்வாறு சிந்தித்திருக்கும்போது அவரை நோக்கி இரண்டு மலைவாசிகள் வரலாயினர். அருகில் நெருங்கிவந்த அவர்கள் தயானந்தரைத் தங்கள் வீட்டிற்கு அழைத்துச் செல்வதாகச் சொன்னார்கள். ஆனால் தயானந்தர் இதை மறுத்து சித்தபாத தீர்த்தத்திற்கு அழைத்துச் செல்வதாயின் அவர்களுடன் வருவதாகச் சொன்னார். ஆனாலும் தானாக நடந்து செல்ல முடியாதென்பதையும் கண்டார். ஆகையால் தன்னைப் பேசாமல் விட்டு விட்டுச் செல்லும்படி அவர்களை வேண்ட அவர்களும் விட்டுச் சென்றனர். கொஞ்சநேரத்திற்குப் பிறகு சமாளித்தெழுந்த தயானந்தர் சுமார் இரவு 8 மணிக்கு பத்ரீநாராயணத்தை யடைந்தார். இதுகாறும் தயானந்தரைக்காணாது வருத்தப்பட்டுக்கொண்டிருந்த ராவல்ஜீ அவரைக்கண்டு சந்தோஷமடைந்தார்.

மறுநாள் தயானந்தர் ராவல்ஜீயினிடம் விடைபெற்றுக் கொண்டு ராமாபுரத்தை நோக்கி நடந்தார். வழியிலே ஓர் யோகியைச் சந்தித்து அவருடன் ஒரு இரவைக்கழித்து ராமாபுரத்தையடைந்துத் தன் ஒழுக்கத்தால் பெரிய மரியாதைக் கிருப்பிடமாயிருந்த ராமகிரி யெனும் சாதுவின் வீட்டிலே தங்கினார். இரவிலே அனேகதூரம் போய்வருபவரான ராமகிரியின் மாணவர்களை நோக்கி அவர் அவ்வாறு இரவில் போய் வருவதன் காரணத்தை வினவ அது அவர்கள் குருவின் பழக்கமென்று சொன்னார்கள். அவருடன் வாதம் செய்த தயானந்தர் இன்னும் அவர் யோகாப்பியாசத்தின் ரகசியங்கள் முழுவதையும் தெரிந்துகொள்ளவில்லை என்றறிந்தார்.

அங்கிருந்து காஜீப்பூரையடைந்து பிறகு திரோணசாகர் என்றவிடத்தில் தங்கியிருந்தார். ஒருநாள் தான் ஹிமயமலையின் மேல்சென்று தன் உயிரை மாய்த்துக்கொள்ளவேண்டுமென்று நினைத்தார். ஆனால் அவ்வாறு செய்வது கோழைத்தனமென்றும் "மனிதனானவன் தனக்கு வேண்டியதைப் பெறத்தன் வாழ்நாள்முடிய சண்டையிட்டுப் பெற்றே தீரவேண்டும்" என்ற முடிவுக்கு வந்தார். இச்சம்பவத்திலிருந்து எப்பேர்ப்பட்டவர்களும் சில சமயம் கோழையாகிவிடுவதுண்டு என்று நாம் அறிகின்றோம். உடனே "வேலை செய்யவேண்டியது உன் கடமை. ஆனால் பலனை ஈவது கடவுளின் பாரம்" என்ற சாஸ்த்திர போதத்தை மனதிற்கொண்டு தேறுதலடைந்தார்.

பிறகு திரோணசாகரைவிட்டு மோராதாபாத், காம்பால், கார்முக்தேஸர் முதலிய இடங்களைத்தாண்டிக் கங்கை நதிக்கரையை அடைந்தார். இங்கே ஒருநாள் தண்ணீரிலே ஓர் பிணம் மிதந்துகொண்டுவருவதைக் கண்டார். சரீரவித்தையைக் கற்றிருந்தபோதிலும் பரீட்சை செய்தறியாதிருந்த தயானந்தர் உடனே நீரில் குதித்து அப்பிணத்தை இழுத்துவந்து கரைசேர்த்து ஓர் கூர்மையான கத்தியால் அதை அறுத்து மனித சரீரத்தின் உள்பாகங்களை நன்றாகப் பரீட்சை செய்ய ஆரம்பித்தார். அப்போது இருதயத்தைக் குறித்துப் புத்தகங்களில் தான் படித்ததற்கும் இப்போது பார்ப்பதற்கும் மிகுந்த வித்யாசமிருப்பதை அறிந்தார். ஆகையால் கையிலிருந்த அப்புத்தகத்தை யெறிந்துவிட்டு பிணத்தை சோதித்துக் கூடியவரை கற்றுக்கொண்டார்.

கங்கை நதிக்கரையிலே சில நாள் தங்கியிருந்து பருகாபாத்தை யடைந்து அங்கிருந்து இன்னும் கிழக்குத்திசையில் நடக்கலானார். கான்பூர், அலகாபாத் முதலிய இடங்களைத் தாண்டி காசிக்கருகில் உள்ள விந்தியாசல அஸ்வன்ஜீ சாமியின் கோவிலில் ஒரு மாதம் தங்கியிருந்தார். இங்கே அநேக ஸம்ஸ்கிருத பண்டிதர்களைச் சந்தித்தார். அங்கிருந்து கான்டான்கார் யெனுமிடம் வந்து துர்க்கா கோயிலில் தங்கினார். எல்லா நேரத்தையும் தரம்பதிலேயும் யோகாப்பியாசம் செய்வதிலேயுமே கழித்தார். இவ்வப்பியாசத்திலிருக்கும் காலத்திலே பெரிய கெட்ட பழக்கமாகிய பங்கியடித்தலையும் பழகிக்கொண்டார். ஓர்நாள் மிகுந்த அதிகமாகப் பங்கியடித்து மயங்கியிருந்தபோது பார்வதியும் பரமசிவனும் தன்னைக் குறித்துப் பேசிக்கொள்வதைப்போன்ற தோற்றத்தை யடைந்தார். மறுபடி தான் சம்சாரஜீவிதமாயிருப்பதாகவும் உணர்ந்தார். ஆனால் தன் மயக்கம் தெளிந்து பார்த்தபோது தான் கண்டது கனவென்றறிந்தார். அப்போது அவரின் பார்வை எதிரில் இருந்த ஓர் பெரிய மகாதேவனின் வாகனமாகிய நந்தியின் உருவத்தின்மேல் சென்றது. விழித்தெழுந்த தயானந்தர் தன் ஆடைகளையும் புத்தகங்களையும் எடுத்து அந்நந்தியின் வாயினுள் போட்டுவிட்டார். ஆனால் எதிர் பாரா விதமாக அதன் உள்பாகத்திலே ஓர் மனிதஉரு உட்கார்ந்திருப்பதைக் கண்டார். தயானந்தர் சடக்கென்று கையை இழுத்துக்கொண்டபோது அம்மனித உருவம் நந்தியின் வாயிலிருந்து வெளிப்பட்டு தன் கிராமத்தை நோக்கி ஓடிற்று. அவ்வுருவமிருந்த இடத்தை அடைந்து தயானந்தர் அன்றிரவைக் கழித்தார். மறுநாள் காலை ஓர் பெண்பிள்ளை அவ்வுருவத்தை

வழிபட வந்து அங்கே வெண்ணெயும் தயிரும் வைத்துச்சென்றாள். அவள் சென்றபின் தயானந்தர் அவ்வெண்ணெயையும் பாலையும் அருந்தி களித்தார். அப்போதிருந்து இனிமேல் பங்கிசாப்பிடுவதில்லையென்று தீர்மானித்துக்கொண்டார்.

(விக்ரம ஆண்டு) 1814-ல் நர்மதா நதிக்கரையில் சாதுக்களைத் தேடி அலைந்துகொண்டிருந்தார். அவ்வாறே அந்நதிக்கரையில் சென்று ஓர் அடர்ந்த காட்டினுள் நுழைந்து அதன் மத்தியில் சில குடிசைகள் இருப்பதைக் கண்டார். இப்போதெல்லாம் அவர் பாலும் பழங்களுமே உண்டுவந்தார். ஒரு நாள் பெரிய கோரைப்புற்களும் புதர்களும் அடர்ந்திருந்த ஓர் காட்டின் வழியாக மிகுந்த கஷ்டத்துடன் நடந்துகொண்டிருந்தார். அக்காட்டைக் கடந்துசெல்லும்போது எதிரில் ஓர் கரடி இவரை நோக்கி வந்துகொண்டிருப்பதைக் கண்டார். சிறிதுநேரம் சும்மாயிருந்த தயானந்தர் அக்கரடி அருகில்வந்தவுடனே தன் கைத்தடியால் அதன் முகத்தை நோக்கி பலமாக அடித்தார். அவ்வடியை பொறுக்காத அக்கரடி திரும்பி ஓடிவிட்டது. அக்கரடியின் கூச்சலைக்கேட்ட சுற்றுக் கிராமத்தார்கள் ஆயுதங்களுடனும் வேட்டைநாய்களுடனுமவ்விடத்திற்கு வந்தபோது ஓர் சாது அங்கே நிற்பதைக்கண்டு ஆச்சரியப்படலானார்கள். அவருக்கு வந்தனம் செய்துகொண்ட அக்கிராமத்தார்கள் அக்காட்டிலே அநேக புலிகள், யானைகள், கரடிகள், இன்னும் அநேக கொடிய மிருகங்கள் இருப்பதால் இன்னும் மேல் நடந்துபோகக்கூடாதென்று தயானந்தரை வேண்டிக்கொண்டார்கள். அதற்காக அவர்களுக்கு வந்தனமளித்த தயானந்தர் தான் எப்படியும் அக்காட்டைக் கடந்து போகவே வேண்டுமெனச் சொன்னார். ஓர் தடியை

தயானந்தருக் களித்து அதனால் தன்னைக் காப்பாற்றிக்கொள்ளக்கூடுமென்று சொல்லிவிட்டு அவர்கள் சென்றுவிட்டார்கள். கொஞ்சதூரம் சென்று அவ்வீட்டியை எறிந்துவிட்டுக் கடவுளின் உதவியுடனேயே நடந்து சென்றார் தயானந்தர்.

சூரியன் மறையும்வரை நடந்துகொண்டே யிருந்தார். இரவும் ஆகியது. வழியும் தெரியவில்லை. என்றாலும் தயானந்தர் நடந்துகொண்டே யிருந்தார். அனேக இடங்களில் மரங்களால் மோதப்பட்டு விழுந்தார். யானைகளால் எறியப்பட்டும் விழுந்தார். அவ்வாறே நடந்தவர் கூர்மையான முட்களையுடைய புதர்களின் மத்தியிலே சென்றார். என்ன செய்வதென்றறியாது சிறிதுநேரம் திகைத்து நின்றார். பின் திரும்பிச்செல்ல மனமில்லாது மண்டியிட்டு ஊர்ந்துசென்று கொஞ்சதூரத்திலிருந்த ஓர் மைதானத்தை யடைந்தார். உடைகளெல்லாம் கிழிந்துவிட்டன. உடலில் எங்கும் ரத்தம் வெளிப்பட்டுக்கொண்டிருந்தது. அந்த கோரமான இருளையும் தன்னிலையையும் நோக்கிச் சிறிதுவருந்தினரெனினும் தன் தைரியத்தைக் கைவிடாது கூடுமான வேகத்துடன் முன்னடந்து சென்றார். எதிரிலே ஓர் நதியையும் அதன் கரையில் ஓர் பெரிய மரத்தையும் அதனடியில் ஓர் பெரிய குடிசைவீட்டையும் அதன் அருகிலே ஆடுமாடுகள் புல் மேய்ந்துகொண்டிருப்பதையுங் கண்டார். அக்குடிசையினுள் சென்று இரவைக் கழிக்க நினைத்தாரேனும் அக்குடிசையில் உள்ளவர்களுக்குத் துன்பம் உண்டாகுமென்று நினைத்து அம்மரத்தின்மேல் ஏறிச்சென்றார். விடியற்காலமானவுடன் மரத்தைவிட்டிறங்கி நீரோடைக்குச் சென்று தன் ஆடைகளைச் சுத்திசெய்துகொண்டு பிரார்த்தனை செய்ய ஆரம்பித்தார். அப்போது அவ்வழியே சில கிராமத்

தார்கள் கொஞ்ச தூரத்திலே உள்ள கோவிலில் நடக்கும் உற்சவத்தைப் பார்ப்பதற்காகத் தங்களின் ஆடுமாடுகளுடன் வந்துகொண்டிருந்தனர். அத்தனிப்பட்ட இடத்திலே ஓர் சாது அமர்ந்திருக்கக்கண்டு வியப்படைந்தனர். அவரை யாரென்றும் எதற்காக அக்காட்டுவழியே வருகின்றுரென்றும் கேட்டார்கள். தயானந்தர் தன் விஷயங்களை யெடுத்துச்சொன்னபோது, அவர்களும் சென்றுவிட்டனர். கொஞ்ச நேரத்தில் இரண்டு வேலைக்காரர்களுடன் ஓர் பணக்காரர் அங்கு வந்து தயானந்தருக்கு ஓர் பாத்திரத்தில் பாலைக் கொடுத்து அருந்தும்படிச்செய்து அவரைச் சுற்றி மிருகங்கள் வாராதபடி நெருப்பைமூட்டித் தன்னிரண்டு வேலைக்காரர்களையும் துறவியாருக்கு வழியுதவி செய்யுமாறு உத்திரவிட்டு அங்கேயே விட்டுச் சென்றுர்.

செல்வவானுல் உதவப்பட்ட வேலையாட்களின் விழிப்புக்காவலினுல் தயானந்தர் அயர்ந்து தூங்கி அன்றிரவைக் கழித்தார். மறுநாள் காலை சந்த்யாவை முடித்துக்கொண்டு வழி நடக்கலானுர்.

இவ்வாறு மூன்று வருடங்கள்வரை நர்மதாநதிக்கரைகளில் சுற்றித் திரிந்து அனேக சாதுக்களிடமிருந்து வித்தையைக் கற்றுக்கொண்டிருந்தார். இக்காலத்திலேயே மதுராவிலிருக்கும் குருட்டுத் துறவியாராம் விரஜானந்த சரஸ்வதியாரைக் குறித்துக் கேள்விப்பட்டார். அவரே தன் சந்தேகங்களை முற்றும் விலக்கக்கூடியவரென்று தீர்மானித்த தயானந்தர் மதுரையை நோக்கி நடக்கலானுர்.



## அத்தியாயம் 5.

## குருநாதனின் சேவை

சத்தியக் கல்வியினாலே புகழ்பெற்றிருந்தவரான ஸ்வாமி விரஜானந்தரை மதுரை வந்தடைந்த தயானந்தர் சீக்கிரத்தில் கஷ்டமில்லாமல் கண்டுபிடித்தார். இப்போதே தயானந்தர் தன் உண்மைக் குருநாதனைக் கண்டார். ஏனென்றால் ஸ்வாமி விரஜானந்தராலேயே தயானந்தர் உண்மையான தயையின் ஆனந்தத்தை அறிபவரானார். இப்போது ஸ்வாமி விரஜானந்தரின் வாழ்க்கையை சுருக்கமாக ஆராய்வோம் :—

விக்ரம 1854-ல் பஞ்சாப்தேசத்திலே கர்த்தார்பூர் எனுமிடத்திலே ஸ்வாமி விரஜானந்தர் பிறந்தார். சீக்கியத் தலைவராகிய குரு நானக்கும் இவ்விடத்திலேயேதான் இறந்தது. விரஜானந்தர் பிறக்கும் காலத்திலே பஞ்சாப்பின் சிம்மாதனத்திலே மஹாராஜா ரஞ்ஜீட்சிங் என்பவர் அமர்ந்திருந்தார். ப்ராம்மணரான நாராயணதத்தர் என்பவர் விரஜானந்தரின் தந்தையாகும். விரஜானந்தர் ஆறு (6) வயது குழந்தையாயிருக்குங்காலத்திலே அம்மைவார்த்து அவரின் இரண்டு கண்களையும் குருடாக்கிவிட்டது. குழந்தையின் குருட்டுத்தனத்தைக்கண்டு பெற்றோர் மிகுந்த துக்கமடைந்ததுடன் தங்கள் மகனின் எதிர்காலவாழ்வைக்குறித்து விசனப்படலாயினர். இவ்வுதவியில்லா நிலையால் தந்தை தன் மகனைப் பன்மடங்கு அதிக கவலையுடன் வளர்த்து வந்தார். குழந்தை

யின் அறிவைக்கண்டு சந்தோஷமடைந்த தந்தையும் தன் மகனை ஆத்மவித்தையில் வல்லவனாகச் செய்ய எண்ணங் கொண்டார்.

விரஜானந்தர் பதினொரு வயதையடைந்தபோது அவரின் தந்தை காலகதியடைந்தார். தந்தையில்லாக் குழந்தையை விரஜானந்தரின் மூத்த சகோதரன் பாதுகாத்துவந்தான். விரஜானந்தரை அவரின் சகோதரன் மிகுந்த அன்புடன் காப்பாற்றி வந்தபோதிலும் சகோதரனின் மனைவி மாத்திரம் தன் மைத்துனன்மேல் வெறுப்பையே கொண்டிருந்தனள். விரஜானந்தரை வீட்டைவிட்டு அனுப்பிவிடும்படியும் சொல்லிவந்தாள். விரஜானந்தரை அவரின் சகோதரன் எவ்வளவு அன்பாக நேசித்துவந்தபோதிலும் தன் மனைவியின் வார்த்தையை மீறி நடக்க அவனால் முடியவில்லை.

தன் அண்ணனும் அவனின் மனைவியின் வார்த்தைகளுக்கு அடிமைப்பட்டுக் கிடப்பதால் இனி அங்கு தனக்கு ஒருவித சுகமும் கிடைக்காதென்று கண்ட விரஜானந்தர் வீட்டைத் துறந்து ஹரித்துவாரத்தை நோக்கிச் செல்லலானார். உதவி யாதும் கிடைக்காமையால் வழியிலே பலவித துன்பங்களுக்கும் ஆளானார். அனேக வாரங்கள், மாதங்கள்வரை நடந்துசென்று குறித்த இடத்தை அடைந்தார். அப்போது அவர் பன்னிரண்டு வயதினரேயாதலால் அவரின் துன்பங்களை ஊகித்துக்கொள்வதுதான் நல்லது. அவர் ரிஷிகேசத்தை யடைந்தபோது அவரின் வயது பதினைந்து. அங்கே தன் நேரங்களைக் கல்வியிலே செலுத்தலானார். "அடிக்கடி கங்கைநதிக்கரைக்குச் சென்றமர்ந்து காயத்ரீ முதலான

வேதமந்திரங்களைச் சொல்லி பரம்பொருளின் தத்துவங்களைச் சிந்தித்துக்கொண்டிருப்பார்." மூன்று வருடங்கள் ரிஷி கேசத்திலே கல்வி கற்பதில் செலுத்திவந்தார்.

பதினெட்டாவது வயதில் ஹரித்துவாரத்தை யடைந்து ஸ்வாமி பரமானந்தரிடம் சன்னியாசத்தையும் ஸ்வாமி விரஜானந்தர் என்ற பெயரையும் பெற்றார். சீக்கிரத்திலே சம்ஸ்கிருதத்தில் பாண்டித்திய மடைந்து தான் சுயமாகவே கவிகளை இயற்றும் திறமையை அடைந்தார். ஹரித்துவாரத்திலுள்ள ப்ராம்மணர்கள் விரஜானந்தரின் கல்விக்காக வேண்டிய உதவிகளையெல்லாம் செய்துவந்தனர். சில காலத்திற்குள் மாணவர்களுக்கு மாத்யகௌமுதியைத் தானுகவே கற்பிக்கலானார். பிறகு கங்கையை யடைந்து சித்தாந்த கௌமுதியைக் கற்றுக்கொண்டார். பிறகு அங்கிருந்து கங்கைக் கரையின் ஓரமாகவே சென்று காசியை அடைந்தார். அங்கே வேதாந்தத்தை நன்ருகக் கற்றுக்கொண்டு புகழ்ச்சியை அடைந்தார். அவருடைய கல்வித்திறனைக் கண்ட ஜனங்களெல்லாம் அவரை "ப்ரக்ஞசக்ஷுஸ்வாமி" (அறிவுக் கண்படைத்த ஸ்வாமியார்)என்று அழைக்கத்தலைப்பட்டனர். இருபத்திரண்டு வயதை யடைந்தபோது காசியைவிட்டுக் கயாவுக்குச்சென்ருர்.வழியில் அவர் கையிலிருந்த கொஞ்சம் பணத்தையும் கொள்ளைக்காரர்கள் பிடுங்கிச்சென்று விட்டனர். அங்கும் வேதாந்த சாஸ்திரத்தைக் கற்றுக்கொண்டு கல்கத்தாவிலுள்ள ஸ்வோன் எனுமிடத்தை யடைந்தார். ஒருநாள் விரஜானந்தர் தனியாக அமர்ந்து விஷ்ணுஸ்தோத்திரத்தை இனிய குரலில் பாடிக்கொண்டிருக்க அவ்வழியே வந்துகொண்டிருந்த ஆள்வாரைச் சேர்ந்த மஹாராஜா வினயசிங்கன்

அதைக்கேட்டு சந்தோஷமடைந்து அவருடன் வார்த்தையாடலானான். ஸ்வாமியுடன் வார்த்தையாடியதிலிருந்து அவனுக்கு விரஜாநந்தரின் கல்வித்திறம் வெளிப்பட்டது. உடனே விரஜானந்தரைத் தன்னுடன் வந்திருந்து தனக்குத் தினமும் மூன்றுமணி நேரம்வரை கல்வி கற்றீயும்படியும் வேண்டிக்கொண்டான். ஒரு நாளாயினும் அவ்வரசன் கல்வியைக் கற்க மறந்துவிட்டால் உடனே ஸ்வாமியார் சென்றுவிடலாமென்ற நிபந்தனையுடன் விரஜானந்தரும் அவனின் வேண்டுகோளை அங்கீகரித்தார்.

மூன்று வருடங்கள்வரை மஹாராஜ் வினயசிங்கன் விரஜானந்தரிடம் கல்வி கற்றுக்கொண்டான். ஒருநாள் அரசன் மிகுந்த காலதாமதமாக வந்து தன் குருவினிடம் அதற்காக மன்னிப்பு வேண்டினான். ஆனாலும் விரஜானந்தர் அதை மறுத்து அவ்வூரைவிட்டுப் புறப்பட்டு பாதபுரிக்குச் செல்லலானார். பாதபுரியில் மகாராஜ பல்வன்த்சிங்கால் விரஜானந்தர் பாராட்டப்பட்டார். அங்கிருந்து நீங்கி மூர்கானையடைந்து மஹாராஜ் டிகாம்சிங்கின் விருந்தாளியானார். மறுபடி ஸ்வேரன் வந்தபோது பெரிய வியாதிக்குட்பட்டார். அங்கிருந்து நீங்கி விக்ரம 1893 வருடம் விரஜானந்தர் மதுரையை அடைந்தார். இங்கே ஓர் கோவிலில் அமர்ந்து பிள்ளைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கலானார்.

இங்கே விரஜானந்தர் கல்வித்திறத்தால் பெரிய ஆதரவைப் பெற்றுக்கொண்டதால் இவ்விடத்தையே தனக்கு நிலையுள்ள வாசஸ்தலமாக ஏற்படுத்திக்கொண்டார். அங்குள்ள அனேக பண்டிதர்களுடன் வாதம் புரிந்து வென்றுத் தன் கல்வித்திறத்தை வெளியாக்கினார்.

ஆகையால்தான் தயானந்தர் மதுரையை அடைந்த போது விரஜானந்தரைச் சுலபத்தில் கண்டுபிடித்தார். தயானந்தர் விரஜானந்தரின் சிறிய வீட்டையடைந்து கதவைத் தட்டினார். கதவைத்திறந்து உள்ளே அனுமதித்து வந்த காரணத்தை வினவ தான் குருட்டுச் சன்னியாசியாரிடம் கல்வி கற்றுக்கொள்ள விரும்புவதாகத் தெரிவித்தார். தயானந்தரை பரீட்சை செய்த விரஜானந்தர் தயானந்தர் இனிமேல் ஆர்யர்களல்லாதவர்களால் எழுதப்பட்ட புத்தகங்களை நம்பக்கூடாதென்றும் ஆர்யர்களால் எழுதப்பட்டவைகளையே நம்பவேண்டும் என்றும் தெரிவித்தார். அதற்குச் சம்மதித்த தயானந்தர் தன் பழைய புத்தகங்களை மூட்டையாகக்கட்டி யமுனா நதியிலே விட்டெறிந்துவிட்டு வந்தார். ஆனாலும் தயானந்தர் துறவியாயிருப்பதாலே எப்படி தன் படிப்பை விருத்தி செய்துகொள்ளமுடியும் என்று விரஜானந்தர் சிந்திக்கலானார். இதை யறிந்த தயானந்தர் தான் எப்படியாவது தனக்கு வேண்டியவைகளைச் சம்பாதித்துக்கொள்ள முடியுமென்றும், தனக்கு வேண்டியது கல்வியே யொழிய ஆகாரமல்லவென்றும் சொன்னார். விரஜானந்தர் இதை மறுக்க முடியாமலும், தயானந்தரின் உண்மையான கல்வித் தாகத்தைக்கண்டு அடைந்த சந்தோஷத்தாலும் அவரைத்தன் மாணவனாக ஏற்றுக்கொண்டார்.

சில பணத்தைத் தண்டி தயானந்தருக்கென்று சில புத்தகங்களை முக்யமாக மஹாபாஷ்யத்தை விரஜானந்தர் வாங்கியளித்தார். பெரியோர்கள் உதவியைக்கொண்டு தயானந்தர் தன் குருநாதனிடம் கல்விகற்க ஆரம்பித்தார். அனேக நாள் சென்றது. நீடென்று மதுரையிலும் அதைச்சுற்றி

யுள்ள ஊர்களிலும் பஞ்சம் உண்டாயிற்று. தருமம் செய்து கொண்டிருந்தவர்களெல்லாம் தங்கள் கையைச் சுருக்க ஆரம்பிக்க மாணவர்கள் ஆகாரத்திற்காக மிகுந்த கஷ்டப்படலாயினர். இத்துன்பங்களெல்லாம் தயானந்தரை அவரின் கருத்திலேயிருந்து மாற்றவில்லை. ஆகாரத்தின் கவலையில்லாமல் தயானந்தர் முன்போலவே கற்றுவந்தார். சில சமயம் ஆஹாரமில்லாமலே சென்றுவிடுவார். சில சமயம் பரோபகாரியான தூர்க்கக்ஷத்ரீ அவர்கள் வீட்டிலே கிடைக்கும் கொஞ்சம் தானியத்தைப் புசித்துச் சென்றுவிடுவார். உண்மைத் துறவியாக இருந்து அத்துன்பநாட்களை எதிர்த்தார். பண்டிட் அமிர்தலால் எனும் ஓர் பெரியார் தயானந்தரின் கல்வித் தாகத்தைக் கண்டு களித்து அவர் படித்து முடிக்கும் காலம்வரை அவருக்கு வேண்டிய ஆகாரங்களையும் புத்தகங்களையும் அளிப்பதாக ஒப்புக்கொண்டார். இவ்வுதவியைப் பெற்ற தயானந்தர் தன் முழு பலத்தையும் அறிவையும் கல்வியிலேயே செலுத்தினார். பிற்காலத்திலுங்கூட அமிர்தலாலின் உதவியை தயானந்தர் மறக்கவே இல்லை. தயானந்தர் தினமும் பாலருந்துவதற்காக மாதம் இரண்டு ரூபாய் தருவதாக மற்றொருவர் ஒப்புக்கொண்டார். மற்றொருவர் விளக்கிற்கு எண்ணெய்க்காக மாதம் நாலணா கொடுத்துவருவதாக ஒப்புக்கொண்டார்.

விடாமுயற்சியுடன் கல்வி கற்றுவந்ததுடனல்லாமல் அவ்வப்போது மாணவர்களுடன் தர்க்கம் செய்வதும், ப்ராம்மணர்களை சந்த்யா விடாமல் செய்யச் சொல்லிவருவதுமாகக் காலம் கழித்துவந்தார். அவரின் கல்வி தாகத்திற்குத் தகவே அவரின் முயற்சியும் இருந்ததாலே மற்ற மாணவர்கள்

எல்லாரினும் தலைமை ஸ்தானமாக மதிக்கப்பட்டுவந்தார். கல்வி அதிகமாக அதிகமாகத் தன் குருவிற்குச் செலுத்தும் மரியாதையும் அன்பும் அதிகமாகிக்கொண்டே வந்தன. தண்ணீர் கொண்டுவரல், வீட்டைப் பெருக்குதல், காலைப்பிடித்தல் முதலாகிய வேலைகளையும் அன்புடன் செய்துவந்தார்.

மற்ற மாணவர்களைக் காட்டிலும் தயானந்தரே பெரிய யோகியாவார் என்று விரஜானந்தரும் அறிந்து கொள்ளாமலில்லை. சில சமயங்களில் தயானந்தரை வெளியில் போகும்படியும் விரஜானந்தர் கட்டளை இடுவார். தான்செய்த தப்பிதத்தை ஒப்புக்கொண்டால் மாத்திரமே அக்கட்டளை நிராகரிக்கப்படும். சில சமயத்தில் மதுரையிலுள்ள பெரிய மனிதர்களையும் தன் குருவினிடம் மன்னிப்புக்காக சிபார்சு செய்யும்படி வேண்டுவார். விரஜானந்தர் எவ்விதமான தண்டனையை அளித்தாலும் தயானந்தர் அதைப் பொறுத்துக்கொள்வார். ஒருநாள் விரஜானந்தர் தயானந்தரைத் தடிகொண்டு அடிக்க தயானந்தரின் கையில் தாக்கிய அவ்வடி அக்கையிலிருந்தும் ரத்தப்ரவாகத்தை உண்டாக்கிற்று. அப்போது தயானந்தர் கருணை ததும்பிய குரலில் "ஞானக்கண்செல்வ! எனக்காக நீர் இவ்வளவு கஷ்டம் எடுத்துக்கொள்ளக்கூடாது. என் சரீரம் இரும்பைப்போல் இருப்பதாலே தங்களின் தடி ஆதை ஒன்றும் செய்யாது. ஆனால் அதிர்ச்சியால் தங்களுக்குண்டாகக்கூடிய வருத்தமே எனக்கு வியாதியை அளிக்கின்றது" என்று சொன்னார். பிற்கால வாழ்வில் அத்தழும்பைக்காணும் போதெல்லாம் அவர் தன் குருநாதனின் நினைவை அடைந்து வந்ததாகச் சொல்லப்படுகிறது. இவ்வாறு $2\frac{1}{2}$ இரண்டரை வருடங்கள் கழிந்தன. இதற்குள்ளாக தயானந்தர் சம்ஸ்

கிருத இலக்கணத்திலும், வேதசம்பந்தமான நூல்களிலும் பூர்ண பாண்டித்யமடைந்தார். கல்வி முடிந்துவிட்டது. இனி தன் குருவை விட்டுப் பிரியவேண்டும். பிரிவுச் சடங்கு நடைபெற்றது. எவ்வளவோ மாணவர்கள் தங்களின் வாழ் நாளில் இச்சடங்கைக் காணுமலே இருந்தார்கள். இதே மாதிரி நம் தற்காலப் பள்ளிக்கூடங்களில் எவ்வளவோ உதா ரணங்களைக் காண்கின்றோம். ஆனாலும் தயானந்தர் தன் குருவை விட்டுப்பிரிந்த அந்நிலையை மாத்திரம் நாம் மறந்து விடுவதற்கில்லை. தயானந்தர் பாதிவரை லவங்கத்தால் நிறைந்த ஓர் தட்டைக்கொண்டு விரஜானந்தரின் எதிரிலமர்ந்து அன்பும் கருணையும் ததும்ப கண்ணீர்வடியும் முகத்துடன் “புண்ய குருநாதா! இதோ என்னால் கூடுமான இதைத் தாங் கள் தக்ஷிணையாக ஏற்றுக்கொள்ள வேண்டுகின்றேன்” என்று மன்றுடினார். உடனே விரஜானந்தர் “உன்னிடம் இல்லாத ஒன்றை நான் கேட்பேனென்று நினைத்தாயா”? என்று வினவ, தயானந்தர் “நாதா! மற்று என்னிடமிருப் பது எதைக் கேட்பினும் நான் அளிக்கத் தயாராயிருக் கிறேன்” என்று விடை பகர, விரஜானந்தர்

“அன்புள்ள மகனே! நான் கேட்பது உன்னிடமிருக் கிறது. அது உண்மையறிவு. நீ எனக்கு தக்ஷிணை கொடுக்க விரும்பினுல் இவ்வுண்மையறிவை என் தாய் நாட்டுக்களி. பாரதவர்ஷம் அனேக காலமாக வேதம் கற்றலை மறந்திருக்கிறது. சென்று அதற்கு வேதத்தைக் கற்பி. உண்மைச் சாஸ்திரங்களை அதற்குக் கற்பி. கடவுள் ஒன்று என்பதை மறந்து பிறப்பிலிருந்து அந்தகாரத்தையே கொண்டிருக்கும் பாரதநாட்டிலே ஞானமெனும் விளக்கை

யேற்றி அவ்விருளை நீக்கு. ஆதிகால ரிஷி முனிவர்களைப் போல் இப்போதைய மக்களை ஆக்கு. தற்காலமனிதர்களின் கற்பனைகளை நீக்கி ஆதிகால ரிஷிகளின் போதனைகளைப் பரப்பு. இதுவே நீ எனக்களிக்கும் தக்ஷிணையாகும்" என்று பகர்ந்தார்.

தயானந்தர் அப்படியே செய்வதாக சத்திய மளித்துச் செல்ல ஆரம்பித்தார். குருட்டுநாதன் தன் மாணவனை ஆசீர்வதித்தனுப்பினார். தயானந்தர் தன் குருநாதனின் கட்டளையை எவ்வளவுவரை நிறைவேற்றினார் என்பதை இனி வரும் பக்கங்களில் ஆராய்வோம். தற்காலத்தில் நமது படிப்பாளிகள் பேசும்போது மாத்திரம் உபாத்தியாயரின் வார்த்தைகளைக் கேட்டு வெளிவந்தவுடன் மறந்துவிடுவதைப் போலல்லாமல் தயானந்தர் தன் முழு வாழ்நாளையும் தன் குருநாதனின் உத்திரவை நிறைவேற்றுவதிலேயே கழித்துவந்தார். அதில் நல்ல பலனையும் அடைந்தார்.

---

## அத்தியாயம் 6.

# தயானந்தர் கண்ட இந்தியா.

முக்தியை அடைவதற்காக தயானந்தர் தன் இல்லத்தையும், பெற்றோர்களையும் துறந்துவந்தார். அனேக மலைகளிலெல்லாம் சுற்றினார். அனேக நாட்கள் பட்டினியிருந்தார். அனேக துன்பங்களுக்குள்ளானார். யோகாப்பியாசத்தின் ரகசியங்களைக் கற்றறிந்து அதைப் பழக்கம் செய்து அதனால் முக்தியைப் பெறவேண்டுமென்பதே தயானந்தரின் முதற் கருத்தாகும். ஒருமுறை ஹிமயமலைமேல் சென்று தன் உயிரை மாய்த்துக்கொள்ள நினைத்தார் என்றும் முன்பே நாம் சொல்லியிருக்கிறோம். ஆனால் தான் பிற்காலத்தில் முக்திக்காக உழைப்பதைவிட்டு உலகத்திற்காக உழைக்கவேண்டுமென்பதைச் சிறிதும் அறியாதிருந்தார். ஆனாலும் கடவுள், தயானந்தர் உலகத்திற்கு உழைப்பதையே விரும்பினார் போலும்! ஸ்வாமி விரஜானந்தரால் தயானந்தரின் எண்ணம் மாற்றப்பட்டு தன் தாய்நாட்டின் சீர்திருத்தத்தை தயானந்தர் கைக்கொண்டார்.

தயானந்தர் சரியாக வேலையில் இறங்குவதற்குமுன் அக்காலத்தில் இந்தியாவின் அரசாங்க-சமூக-மத நிலைகள் எவ்வாறு இருந்தன என்று ஆராய்வோம்.

### அரசாங்கம்.

தயானந்தர் 1824-ல் பிறந்தார். லார்ட் ஹேஸ்டிங்க்ஸ் தன் இந்திய ராஜப்ரதிநிதிப் பதவியை ராஜீனமா செய்துவிட்

டுச் செல்ல அவருக்குப் பிறகு ஆர்மர்ஷ்ட் என்பார் அப்பதவியை ஏற்ருர். இந்தியா ஒருகாலத்தில் அரசாங்கத்தில் தலைச் சிறந்து விளங்கியிருந்தது. மஹாராஷ்ட்டிரர்களின் ஆட்சி அழிய, இந்தூரின் ஹோல்காரும், நாகப்பூரின் பான்ஸ்லேயும்கூட கிழக்கிந்திய கம்பெனியாரின் வல்லமையால் சூழப்பட்டார்கள். இன்னும்கூட சில சிற்றரசர்கள் இந்தியாவில் சிறிய பாகங்களை ஆண்டுகொண்டிருந்தபோதிலும் கிழக்கிந்திய கம்பெனியைத் தங்கள் தலைவனுக ஏற்றுக்கொள்ளும்படி பலவந்தம் செய்யப்பட்டனர். டெல்லியில் இன்னும் முகலாய சக்ரவர்த்தி வசித்துக்கொண்டு தானிருந்தார். அரசாங்க சம்பந்தமான ஓர் பயங்கொள்ளியாகவு மிருந்தார். 1814–16 ல் ஏற்பட்ட கூர்கா சண்டையில் நேபாளின் கூர்காள் விடுவிக்கப்பட்டு தங்கள் மலை நகரங்களுக்குச் சென்று இன்பமனுபவித்தனர். இப்போதுங்கூட ரஞ்ஜிட் சிங்கின் தலைமையில் சீக்கியமதம் மேலானநிலையில் இருந்ததால் கம்பெனியார் அவர்களுடன் விரோதம் புரிய அஞ்சி நட்புக்கொள்ளலாயினர். ஔத்தின் நவாப் சுற்றிலும் ஆங்கிலேயத் துருப்புகளால் சூழப்பட்டார்.

இவ்வாறு இந்தியா அன்னியர் வசப்பட்டது. அதுவும் தன்னிடம் வியாபாரம் செய்யவந்தவர்களின் வசப்பட்டது. வெல்லெஸ்லி (1798—1805) என்பவரின் கொடூர கட்டளையாலும் ஹேஸ்டிங்க்ஸ் (1813—1823) என்பவரின் அநியாய உத்திரவினுலும் அனேக சுதேச அரசர்கள் மறைந்து விட்டார்கள். மறையாமல் இருந்தவர்களும் ஆங்கிலேயர்களுக்குட்பட்டு கேவலம் யந்திரம்போல் ஆடிவந்தனர். ஆனுலும் ரஞ்

ஜிட் சிங்கும், பஞ்ஜாபும் மாத்திரம் இவர்களின் கோபத்திற் காளாகவில்லை.

சென்றகாலத்திலே உலகத்திற்கே பெரிய அரசாங்கமாய் விளங்கியிருந்த இந்தியா இப்போது கொஞ்சம் கொஞ்சமாய் அன்னியர் கைவசமாகியது. முகலாய அரசாங்கமும் தன் உட்சண்டைகளாலேயே அழிந்ததெனலாம். தன் எஜமான ஞன சிராஜ்ஜுட்தௌலாவை மோசம்செய்த மிர் ஜாபர், கிளைவ் அவர்களால் கொண்டுவரப்பட்ட சைன்யத்தால் முதன் முதலாகத் தாக்கப்பட்டு இறந்தார். இதுவே இந்தியா வின் அழிவின் ஆரம்பமாகும். தயானந்தர் விரஜானந்தரை விட்டுப் பிரியுங்காலத்திலே (1862) இந்தியா முழுவதும் சீக் கியப் பஞ்சாப் (தன் தலைவஞன ரஞ்ஜீட்சிங்கை இழந்ததிஞல்) உட்பட ஆங்கிலேயர்கள் வசமாயிற்று. 1857-ல் நடந்த சிப்பாய் கலகத்தால் வடஇந்தியா முழுவதுமே பெருக்கப் பட்டது. இவ்வாருக கம்பெனியின் ஆட்சியும் முடிந்தது. விக்டோரியா மஹாராணியார் இந்தியாவின் ரத்னமாய் விளங்கினர். இந்தியாவைக் காப்பாற்றும் பொருப்பை ஆங்கி லேய அரசாங்கசபை ஏற்றுக்கொண்டது. வெலெஸ்லி, ஹேஸ்டிங்க்ஸ் முதலியவர்களால் ஆளப்பட்டுவந்த கொடூர விதியும் லார்ட் டால்ஹௌசி காலத்தில் முற்றுப்பெற்றது. 1862-ம் வருடத்தின் இந்திய அரசாங்கப்படம் இப்போத யதைப்போலவேதானிருந்தது. 1858-ம் ஆண்டில் விக்டோ ரியா மஹாராணியார் இந்திய சிற்றரசர்களின் கொள்கை களுக்கு இனிமேல் விரோதம் காட்டுவதில்லையென்று வாக் களித்தார். இதைவிட இந்திய அரசாங்கத்தின் சீர்கேடு

வேறுண்டா? இந்தியா ஒரு காலத்தில் தன்னைச் சுற்றிலு மிருந்த நாடுகளை ஆட்சி செய்துகொண்டிருந்தது. இதனின் வேகம் கோளத்தின் மறுபக்கம்வரை சென்றிருந்தது. ஆனால் தயானந்தர் தன் வேலையை ஆரம்பிக்கும்போது இந்தியா அன்னியர் வசத்திலேயே இருந்தது.

சமூக நிலை.

ஜெயசந்தனின் மோசமே இந்தியாவில் முகம்மதிய ஆட்சி பரவக் காரணமாயிருந்ததைப் போலவே, மிர்ஜாபரினு டையவும், அவரைப்போன்ற மனிதர்களினுடையவும் மோசமே இந்தியாவில் ஆங்கில (கிருஸ்தவ) ஆட்சி பரவக் காரணமாயிருந்தது. ஆனால் முகம்மதியர் காலத்தில் இந்தியா வின் அரசாங்கம் மிகுந்த கேவலமாக அழிக்கப்பட்டது. ஆனால் ஆங்கிலேயர்கள் தங்கள் நாட்டை ஆட்சி புரிந்து கொண்டு வருவதுடன் இந்தியாவைத் தன் வியாபாரஸ்தல மாக வைத்துக்கொண்டனர்.

அரசாங்கநிலை இப்படிமிருந்தபோதிலும் சமூகநிலை இன் னும் மிகத் தாழ்வாக ஆகி இருந்தது. மக்களைக் கெடுக்க அன் னிய ஆட்சியும் ஒரு காரணமாயிருந்ததுதான். ஆனாலும் இன்னும் அநேக காரணங்களுமிருந்தன. இவ்வாறான பல வித காரணங்களால் இந்தியாவின் சமூகநிலை மிகுந்த கேவல மாக மாறிவிட்டது.

வேதவிதிப்படி இந்து சமூகம் நான்கு வருணங்களின் மேல் கட்டப்பட்டதாகும். ப்ராம்மணர்கள் கல்வி-மத-சம்பந்த மான வேலைகளைச்செய்து வரவேண்டும். க்ஷத்திரியர்கள்

தங்கள் நாட்டை எதிர்க்கும் விரோதிகளிடமிருந்து காப்பாற்றும் வேலைகளைச் செய்துவரவேண்டும். வைஸ்யர்கள் பயிர்த் தொழிலையும் வியாபாரத்தையும் செய்து வரவேண்டும். சூத்திரர்கள் மற்ற சில்லரை வேலைகளைச் செய்துவரவேண்டும். இந்நான்கில் உயர்வு தாழ்வு கொஞ்சமும் கிடையாது. எல்லோரும் சேர்ந்ததே இந்து சமூகமாகும். அனேககாலமாய் இவ் விதி அனுபவத்திலிருந்து வந்தது. ஆனால் முகம்மதிய அரசாங்கம் பரவிய காலத்திலிருந்து இவ்விதி கொஞ்சங்கொஞ்சமாகக் குறைந்துகொண்டே வரலாயிற்று. அதைத்தடுத்து மறுபடி மூன்மாதிரியாக்கவே தயானந்தர் வேலைசெய்தார். ப்ராம்மணர்கள் முழுவதும் கெட்டுவிட்டார்கள். தங்களின் கடமையாகிய கற்றல் கற்பித்தலை முழுதும் மறந்துவிட்டனர். கொஞ்சம் படித்தவர்களும் சாஸ்திர விரோதமான விஷயங்களை எழுதிவைக்க ஆரம்பித்தனர். அவர்களின் கல்வி ஓர் குறித்த எல்லைவரையில்தான் சென்றுகொண்டிருந்தது. பணத்திற்காகத் தங்கள் கல்வியை விற்கவும் தலைப்பட்டனர். ஆதி காலத்தில் இந்தியாவில் ப்ராம்மணர்கள் தங்கள் கல்விக்காக மிகுந்த புகழ்ச்சியை அடைந்துவந்தார்கள். ஆனால் ஒன்பதாம் நூற்றாண்டில் ப்ராம்மணர்கள் மூடர்களாயிருந்தார்கள். சாஸ்திரங்களை மறந்துவிட்டனர். மிகத் தாழ்ந்த வேலைகளையும் செய்துவரலாயினர். கொஞ்சம் செல்வம் படைத்தவர்கள் கர்வமடைந்து மற்றவர்களுக்குத் தங்கள் கல்வியைக் கற்பிக்க முடியாதென்று மறுத்துவந்தனர். இவ் வாறு ப்ராம்மணர்கள் கர்விகளாயும், மாறினவர்களாயும், நியாயமில்லாதவர்களாயு மிருந்தனர்.

இனி க்ஷத்ரியர்களோ அடியுடன் நாசமடைந்தனர். மகம்மதியர்களின் படையெடுப்பினால் துன்பமடைந்தனர். அன்றி க்ஷத்திரிய அரசர்கள் அவரவர்களுக்குள்ளேயுங்கூட சண்டையிட்டுக்கொண்டிருந்தார்கள். ஏழு நூற்றாண்டுகளாக பரிபாலனத்தில் இருந்த முகம்மதிய அரசாட்சி அவர்களை மாற்றிவிட்டது. மரியாதை இல்லாத வேலைகளையும் ஏற்றுக் கொள்ளலானார்கள். 19-வது நூற்றாண்டுக்குள் சுதந்திரம் பெற்ற க்ஷத்திரியர் ஒருவருமில்லாமல் அழிந்துவிட்டார்கள். ப்ராம்மணர்களைப் போலவே இவர்களும் பல்வேறு ஜாதிகளாக வகுத்துக்கொண்டனர். இஜ்ஜாதி பாகுபாடுங்கூட இவர் களுக்குள்ளேயே சண்டையை உண்டாக்கக் காரணமாயிருந் தது.

வைஸ்யர்கள் தங்களின் வியாபாரத்தை மறந்துவிட்ட னர். எல்லோரும் வெளிநாட்டின் வியாபார ஏஜெண்டுகளாய் விட்டனர். அதிலும் சிலர் வியாபாரத்தைக் கைவிட்டு உத்தி யோகம் செய்வதிலிறங்கிவிட்டனர். ஆகவே இந்நாட்டுச் செல்வநிலை மற்றநாடுகளை அலங்கரிக்கச் சென்றுவிட்டது.

சூத்திரர்கள் மிகக் கெட்டுவிட்டனர். கொஞ்சம் கல்வி யையும் கற்காதொழிந்தனர். சமூகத்திற்கு அவர்கள் இன்றி யமையாத ஓர் பகுதியினரென்பதொழிந்து அவர்கள் இந்து மதத்திற்கு அனாவசியமானவர்களென்றேற்பட்டது. ப்ராம் மணர்கள் இவர்களை கவனிக்காமல் விட்டுவிட்டனர். வைஸ் யர்களும், க்ஷத்திரியர்களுங்கூட இவர்களை கவனிக்காதொ ழிந்தனர். சூத்திரர்கள் தீண்டத்தகாதவர்களென்று நினைக் கப்பட்டதாலே அவர்கள் அசுத்தமானவர்களென்றும் நினைக்

கப்பட்டனர். அவர்களுக்கு மிகக் கடினமான வேலைகள் கொடுக்கப்பட்டதேயன்றி அதற்குத் தகுந்த கூலியும் கொடுக்கப்படவில்லை. அமெரிக்கா முதலிய நாடுகளின் அடிமைகளைப்போல நடத்தப்பட்டனர். அவர்களின் நாசத்தின் அறிகுறியாக மற்றும் அவர்களுக்குள்ளேயே சிறிய ஜாதிகளும் தோன்றலாயின. அவர்களைச் சீர்திருத்தவோ, கவனிக்கவோ ஒருவரும் கவலைகொள்ளவில்லை. அதற்குப் பதிலாக இன்னும் அவர்களை நாசஞ்செய்யவே மனிதர்கள் உண்டாயினர்.

நான்கு வருணங்களைக் கொண்டிருந்த சமூகம் நூற்றுக் கணக்கான ஜாதிகளாக பிளவுண்டது. அது மாத்திரமன்றி அரசாங்க நிலையிலும் அது ஒற்றுமையை நாடிநின்றது. இப் பல்வேறு பிரிவுகளின் காரணமாக அன்னியர்களின் ஆட்சி இங்கு தோன்றலாயிற்று.

பெண்களும்கூட இத்தாழ்வுமையைப் பங்கிட்டுக்கொண்டனர். அவரவர்கள் பிறந்த ஜாதியிலேயே அவரவர்கள் எண்ணப்பட்டனர். ப்ராம்மணர்கள் பெண்களுக்கு கல்வியை யீய மறுத்தனர். வேதங்கள் "புருடனைப்போலவே பெண்களும் எல்லா விஷயங்களிலேயும் சமவுரிமைபெற்றவர்கள்" என்று சொல்லியிருந்தும் சுயநலமிகளால் எழுதப்பட்ட புத்தகங்களில் பெண்களின் உரிமைகள் விலக்கப்பட்டிருந்தன. மனைவியென்றால் வீட்டின் வேலைக்காரியென்று பொருள் கொள்ளப்பட்டது. புருடன் சொல்வதைப்போல் செய்வது ஒன்று தான் பெண்ணின் கடமை என்று நினைக்கப்பட்டுவந்தது. அன்றி விதவைகள் கேவலம் கொடிய சாபங்களாக நினைக்கப்பட்டனர். அவர்களைத் தொடவும் பார்க்கவும் மற்றவர்கள்

அஞ்சினர். கிழிந்த ஆடைகளும், கொஞ்ச ஆகாரமும், சிறிய இடமுமே அவர்களுக்கு அளிக்கப்பட்டன. 7-8 வயது களிலே (இன்னும் 12 மாதங்களுக்குக் குறைந்த வயதிலே) கல்யாணம் செய்ய ஆரம்பித்தனர். அதனால் 4-5-10 வயது களிலும்கூட விதவைகள் உண்டாயினர். அவர்களின் நிலைமை எப்படியிருக்குமென்று சொல்லமுடியுமா? அவர்கள் விருப் பத்திற்குமாறாக அவர்களின் புருடர்களுடனே வைத்துக் கொளுத்தப்பட்டனர். வீட்டு அரசிகளின் விதி இவ்வா றிருந்தது. மனித சமூக உற்பவத்திற்கே காரணமாயிருக்கும் பெண்கள் சமூகத்தை மிகுந்த மரியாதையுடன் பாதுகாக்க வேண்டுமென வேதம் சொல்கின்றது. அவர்களின் சந் தோஷமே மதத்தின் சந்தோஷமுமாகும். "யத்ர நார்யஸ்து பூஜ்யந்தே ரமந்தே தத்ர தேவதா." பெண்கள் மரியாதையை யும், வழிபாட்டையும் பெறும் இல்லங்களிலேயே தேவர்கள் வசிக்கிறார்கள் என்பது இதன் பொருள். இதுவே வேதத் தின் கருத்தாகும். வேதமதம் பரவியிருந்த காலத்திலே இவ் வாறேதான் மக்கள் அனுசரித்துவந்தனர். ஆனால் தற்காலம் இப்பேர்ப்பட்ட வேத போதனைகளை சிந்திப்பாரும் இல்லாமற் போய்விட்டனர்.

பழங்காலத்தில் இந்துமதத்தின் பெயர் வேதமதமாகும் அக்காலமதம் 75 வயதை யடைந்த எல்லோரும் சன்னியா சம் பூண்டுகொள்ளவேண்டுமென்று சொல்கின்றது. சரியான படி அனுசரித்தால் சன்னியாசம் சமூகத்திற்கே ஓர் பெரிய நன்மையை அளிக்கும். அனேக மாறுதல்களுக்கிடையில் இதுவும் மாறாமலிருக்க முடியவில்லை. கஷ்டமில்லாமல் சாப் பிட நினைத்தவர்களெல்லாம் சன்னியாசம் பூண ஆரம்பித்து

விட்டார்கள். நாளாவட்டத்தில் இக்கபட சன்னியாசிகளின் தொகை அதிகரிக்கலாயிற்று. 5-6 வயதிலேயிருந்து 70-80 வயதுவரை யுள்ளவர்களும் இக்கூட்டத்தைச் சேர ஆரம்பித்தனர். மத்தியிலே சில அறிவாளிகளும் யோகாப்பியாசத்தைப் பழக்கம் செய்வதற்காகவென்று சன்னியாசம் பூண்டாலும் அவர்களைக் காப்பாற்றுவாரில்லாமற் போய்விட்டதாலே அவர்களும் பிச்சைக்காரர்களாய் மாறிவிட்டனர். அவர்களிற் சிலர் ஆகாரமில்லாமையால் வருந்தி கொள்ளையடிக்கவும் துணிந்துவிட்டனர்.

## நாகரீகமும் மத நிலையும்.

பழங்காலத்திலே இந்தியாவின் முன்னேற்றத்திற்குக் காரணமாயிருந்த வேதமதம் கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து வர ஆரம்பித்தது. இதற்குக் காரணமாயிருந்த குற்றம் பிராம்மணர்களுடையதேயாகும். வேதங்களையும் சாஸ்திரங்களையும் கற்றலைக் கைவிட்டு தாறுக புத்தகங்களை எழுதலாயினர். இதன் காரணமே இந்தியாவில் சரியான வேதமே கிடைக்காமற் போய்விட்டது. 19-வது நூற்றூண்டிலுங்கூட காசி சம்ஸ்கிருதப்படிப்பு-ஸ்தானமாக இருந்தது. ஆனால் குருமார்கள் பொறுமைக்காரர்களாய் விட்டார்கள். மாணவர்கள் அதற்குமேல் துஷ்டர்களாய்விட்டார்கள். சத்தியத்தைத் தேடுவார் யாருமில்லை. சிற்றறிவு படைத்தவர்களால் எழுதப்பட்ட நூல்களெல்லாம் பெரிய மதிப்பைப் பெற்றுவந்தன. வேதங்களுக்குப் பதிலாக புராணங்கள் தோன்றின. பழங்கால இலக்கண நூல்களை மறைத்து சாதாரண நூல்கள் வெளிவரலாயின. சம்ஸ்கிருதப் படிப்பு இனேஇனே குறைந்து

கொண்டுவரலாயிற்று. இதற்கு முக்கியமான காரணங்களுள் ஒன்று அன்னியர் ஆட்சியாகும். 11-வது நூற்றுண்டிலிருந்து 18-வது நூற்றுண்டுவரை ஆட்சிசெய்துவந்த முகம்மதிய அரசாங்கம் பார்சீ பாஷையை அரசாங்க பாஷையாகச் செய்திருந்தது. "அரசன்வழி குடிகள்" என்றபடி அக்காலத்தில் இந்துக்கள் எல்லோரும் சம்ஸ்கிருதத்தை மறந்து பார்சீ பாஷையைக் கற்றுவரலாயினர். சம்ஸ்கிருதப் பாடசாலைகள் எல்லாம் மக்தாப்கள் ஆயின. ஆங்கில அரசாட்சி பரவிய பின் கொஞ்சம் கொஞ்சமாக மக்களிடை ஆங்கிலம் பரவிவரலாயிற்று. இப்போது சம்ஸ்கிருதம் மிக மிகத் தூரத்தில் சென்று மறைந்துகொண்டிருக்கிறது. கிழக்கிந்தியக் கம்பெனி சம்ஸ்கிருதப் பள்ளிக்கூடமொன்றை நிருமாணித்தது உண்மைதான். ஆனால் அது காட்சிச்சாலையாக இருந்து வேலைசெய்துவந்தது.

மூடத்தனமும், தரித்திரமும் அதிகரித்தபோது மக்கள் எவ்வழியிலாயினும் தங்கள் ஜீவனத்தை நடத்தத் துணிந்து விடுகிறார்கள். முகம்மது கஜினிபோன்ற அரசர்கள் எவ்வாறு இந்துக்களின் கோவில்களைத் தரைமட்டமாக்கி, புத்தகசாலைகளை நெருப்புக் கிரையாக்கி, இந்துக்களை மகம்மதியராகும்படி வற்புறுத்தினார்கள் என்பதை தேச சரித்திரத்தை வாசிக்கும் எல்லோரும் அறிந்துகொள்வார்கள்.

"புபுக்ஷித: கிம் ந கரோதி பாபம்"

(பொ-ள்.) பசியால் வருந்துபவன் என்ன பாவத்தைத் தான் செய்யத் துணியமாட்டான்?

மகம்மதிய ஆட்சி இந்துக்களின் சுதந்திரங்களை நாச மாக்கி அவர்களை அடிமைகளாகச் செய்ததெனலாம். ஆனாலும் கூட மகம்மதிய ஆட்சி இந்துக்களின் மதத் தத்துவங்களை மாத் திரம் மாற்ற முடியவில்லை. இந்துக்களின் கல்வி, நடத்தை களை மாத்திரமே அது நாசமாக்கியது. முகம்மதியப் படை யெடுப்பாளர்களில் அனேகர் இந்தியாவில் பலவந்தமாக மகம் மதிய மதத்தைப் பரவச் செய்யவேண்டுமென்ற எண்ணத்து டனேயே வந்தனர். முகம்மதியாராக ஆகாத வரை (ஜெஜியா) வரிகொடுக்க வேண்டுமென இந்துக்கள் வற்புறுத்தப்பட்ட னர். தங்களின் சொந்தமான பழைய மதத்தை அனுசரிப்ப தற்காக வரிகொடுக்க நேர்ந்த இந்நிலையைத் தவிர இந்துக் களுக்குத் தாழ்ந்தநிலை வேறேதாவதுண்டா? ஆனால் அக்பரைப் போன்ற சில முகம்மதியர்கள் இந்துக்களிடை விரோதபாவனை யில்லாதவாறே ஆட்சிபுரிந்து வந்தனர். ஆனால் பொறுமைக் காரர்களினுட்சியே இந்துக்களை நாசமாக்கிவிட்டது.

சில இந்து க்ஷத்ரியர்கள் (வீரர்கள்)இவ்வாறான கொடிய ஆட்சியை எதிர்த்தே வந்தார்கள். அலாவுத்தின், அக்பர் காலங்களிலுங்கூட மீவாரின் ராணுக்கள் தங்களின் குடும்ப கௌரவதையைக்காப்பாற்றியே வந்தார்கள். ஆனாலும் பொது வாக இச்சிறிய பாதுகாப்பு மாத்திரம் போதாமலிருந்ததென லாம். இந்துக்களில் வீரங்குன்றியவர்கள் அனேகராக இருந் தனர். ஆனதினாலேயே இச்சிறிய பாதுகாப்பு பலத்துடன் எதிர்க்க முடியாமல் போய்விட்டது. சிவாஜீயும் இந்துக்களைக் காப்பாற்றத் தகுந்த ஓர் சாதனத்தையே கையாண்டார். தன் னரசாங்கத்தையே நிருவி இந்துக்களை வீரர்களாகும்படி வற்

புறுத்தினர். இதற்காகவே சிவாஜியை "ஹிந்துபதி" இந்துக்களின் ரக்ஷகர் என்று அழைத்துவந்தார்கள். ஆனால் அவருக்குப்பின் மறுபடியும் இந்துக்கள் கோழைகளாக மாற ஆரம்பித்துவிட்டனர்.

இவ்வாறான மகம்மதிய ஆட்சியில் கொஞ்சம் கொஞ்சமாக ஆங்கில ஆட்சி வந்து குடியேறியது. போர்ச்சுகல் என்ற இடத்திலேயே முதன்முதலாக இந்தியாவில் கிருஸ்தவ மதப்ரசாரம் நடந்தது. அதைப் பரப்ப அப்போது கவர்னராயிருந்த ஒருவர் செய்துவந்த கொடுமைகளை இப்போதும் அத்தேச சரித்திரத்தில் வாசிக்கலாம்.

சுலபத்தில் இந்துக்கள் கிருஸ்தவ ப்ரசாரகர்களுக்கு இடந்தரவில்லை. ஆனால் ப்ராம்மணர்களாலே தீண்டத்தகாதவர்களென்று விலக்கிவைக்கப்பட்டிருந்தவர்கள் எல்லாம் கிருஸ்தவர்களின் அன்பான நட்பைக்கண்டு மயங்கி கிருஸ்தவர்களாகத் தொடங்கினார்கள். தென்னிந்தியாவில் தாழ்த்தப்பட்டோர் அதிகமாக இருந்தனராதலால் அங்கேயே சுலபத்தில் கிருஸ்தவமதம் பரவியது. இக்காலத்தில் ஆங்கிலப் படிப்பும் நுழைந்தது. கிருஸ்தவ மதத்தின் முக்கிய எண்ணம் இந்துக்களின் மதப்பற்றை ஒழிக்கவேண்டுமென்பதே யாகும். கிருஸ்தவமத ப்ரசாரத்தை கேட்கும் ஒவ்வோர் இந்துவும் தன் மதத்தில் ஏதோ தப்பிதமிருப்பதாக நினைக்கும் நிலையுண்டாயிற்று. ஆங்கிலக் கல்வியானது இன்னும் அதிகமாக இந்துக்களின் மதப்பற்றை ஒழித்தது. ஆங்கிலக் கல்வி கற்கும் மாணவர்களின் உள்ளம் தங்களின் மதத்தத்துவங்களை அடியுடன் மறந்து அன்னியர்களின் மதத்தில் சந்தோஷங்கொள்ள ஆரம்

பித்தது. இவ்வாறு இந்துக்களின் உள்ளம் தாங்கள் புதிய ஓர் வெளிச்சத்தைக் கண்டுபிடித்துவிட்டதாக நினைக்க ஆரம்பித்துவிட்டது. சாகப்போகும் நிலையிலிருந்தவர்களும் இறந்த பின்பு எங்கே தங்களுக்கு நல்லகதி இல்லாமற் போய்விடுமோ என்ற பயத்துடனேயே இருந்து இறந்தார்கள். இவ்வாறு ஆங்கில ஆட்சியானது இந்து சமூகத்தை ஓர் புதிய தினுசாக பூர்ணமாக மாற்றிவிட்டது.

நூற்றுக்கணக்காகவும், ஆயிரக்கணக்காகவுமே இந்தியாவிற்கு வந்து சேர்ந்துகொண்டிருந்த முகம்மதியர்கள் பலவந்தமாக முகம்மதிய மதம் இந்தியாவில் பரவுகின்றதெனக் கண்டபோது லட்சக் கணக்காக வர ஆரம்பித்தனர். இவ்வாறே முன்பே மாறிவிட்டுக் கிடக்கும் இந்துக்களை வெகு சுலபமாக தம்மதத்திற்கு மாற்றிவிடலாமென்று கிருஸ்தவர்களும் நினைத்தனர். அரசாங்கமும் இந்துக்களின்மேல் உண்மை ப்ரீதியில்லாமலிருந்ததினாலே வெகு தீவிரமாகப் பாதிரிமார்கள் வேலை செய்து வரலாயினர். வறுமையினாலும், மயக்கத்தினாலும், ஆசையினாலுமே இந்துக்கள் அதிகமாக கிருஸ்தவமதத்தைத் தழுவலாயினர். சிலர் பலவந்தத்தினாலும் கிருஸ்தவர்களாக மாறினார்கள்.

இந்து சமூகத்திலே அப்போது ஓர் கெட்டபழக்கம் இருந்துவந்தது. மகம்மதியனாகவோ கிருஸ்தவனாகவோ மாறிவிட்ட இந்து தன் குற்றங்களை யறிந்து அதற்காக என்ன தவம் செய்தபோதிலும் மறுபடி இந்து சமூகத்திற் சேர்த்துக்கொள்ளப்படுவதில்லை. கழுதை எவ்வளவுமுறை கங்கா ஸ்நானம் செய்தாலும் பசுவாகாது. அதுபோலவே மகம்மதியனே,

கிருஸ்தவனே ஒருபோதும் இந்துவாக முடியாதென்று ப்ராம் மணர்கள் வாதித்துவந்தனர். ப்ராம்மணர்களை எதிர்க்க பயந்து கொண்டிருந்த இந்துக்கள் இவ்வாதத்தை ஒப்புக்கொண்டனர். "கழுதை பசுவாக முடியாதென்றால் பசு கழுதையாக முடியுமா?" என்று யாருமே கேட்கத் துணியவில்லை. மகம்மதிய னிடமிருந்தோ, கிருஸ்தவனிடமிருந்தோ தெரியாமல் எந்த இந்துவாகிலும் ஏதாவது வாங்கி அருந்திவிட்டால் அவன் உடனே இந்து சமூகத்திலிருந்து விலக்கப்படவேண்டும். அவ்வாறு விலக்கப்பட்ட அவன் சுலபத்தில் அன்னியமதத் தைத்தழுவிக்கொள்கின்றான். அவனுடன் அன்பைச்செலுத்தி வரும் அவன் மனைவியும் குழந்தைகளுங்கூட அவனுடனேயே அன்னிய மதத்திற்குச் சென்றுவிடுகின்றனர். இக்காரணங் களால் இந்து மதத்தின் ஜனத்தொகை தினே தினே குறைந்துகொண்டேவந்தது. இதைத் தடுக்கத் தகுந்த மருந் தொன்றும் கிடைக்கவில்லை.

தங்கள் மதத்தை அபிமானிக்கும் இந்துவே இருக்க வில்லை. மதத்திற்காகச் செலவிடவேண்டிய பணத்தைக் கொண்டு கோவில்களையும், சத்திரங்களையும் கட்டுவிக்கத் தொடங்கினர். இக்கோவில்களினதிகாரங்களை யேற்றுக் கொண்ட புரோகிதர்கள் மற்ற எல்லா வேலைகளையும் கைவிட்டு விட்டு கஷ்டமில்லாமல் வரும் பணத்தைக்கொண்டே வாழ் நாளைத் தலைமுறை தலைமுறையாகக் கழிக்கத் தீர்மானித்துக் கொண்டனர். தாழ்த்தப்பட்டவர்கள் கோவிலில் உள்ள விக்ரகத்தை ஒரு முறை தரிசிக்கவும் அனுமதிக்கப்பட்டார்கள் இல்லை. உண்மைச் சாஸ்திரங்களைத் தொடுவாருமில்லை. ராம,

கிருஷ்ணர்களை வழிபடத் தொடங்கிவிட்டவர்கள் மற்ற தங்கள் கடமைகளை முற்றும் மறந்து கோவிலே சதமெனத் தீர்மானித்துக்கொண்டனர். சாதுக்களும், சன்னியாசிகளும் சுகமாக சுகங்களைச் சுகிக்க மனங்கொண்டனர். ஹிந்துமதத்தின் சிறப்புகளைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்று விரும்பியவர்களுக்குங்கூட கற்பிப்போரில்லாமற் போய்விட்டனர். தன்னலத்தையே கவனித்துக்கொண்டு பிறநலத்தைக் கொஞ்சமும் கவனியாதவர்களாய் இந்துக்கள் மாறிவிட்டனர்.

பத்தொன்பதாவது நூற்றாண்டில் இந்தியா மேற்சொன்ன நிலைமையில் இருந்தது. உண்மையான மதப்பற்றுடைய எந்த இந்துவும் இதற்காக வருத்தப்படாமலிருக்கமாட்டான். மூடத்தனமான தன்னலமேகங்கள் இந்தியாவின் அறிவுச்சூர்யனின் ப்ரகாசத்தை மறைத்துக்கொண்டன. எல்லா பக்கங்களிலும் இருளே சூழ்ந்திருந்தது. இவ்விருளை முற்றும் தொலைக்கப் பாடுபட்டவர் தயானந்தர் ஒருவரேயாகும். அவர் காலத்தில் இந்துக்கள் அனேக உற்சவங்களைக் கொண்டாடுபவர்களாய் இருந்தனர். ப்ராம்மணர்கள் இன்னும் தங்கள் சுயநலத்தைக் கைவிடவில்லை. இந்நிலையில் இந்தியா வேண்டிக்கொண்டிருந்தது எதை? வீரஹ்ருதயம் ஒன்றை. இக்குறையைத் தீர்க்க வந்தவர் சுவாமி தயானந்தரேயாகும். அவர் இந்தியநாட்டின் சீர்திருத்தம் எல்லாவற்றையும் தன் மேற்கொண்டு முழுபலத்துடன் வேலைசெய்துவந்தார். இனி வரும் பக்கங்களில் அவருடைய வேலையைக் குறித்து சிறிது ஆராய்வோம்.



## அத்தியாயம் 7

# சத்ய ஒளி ப்ரசாரகர்

ஸ்வாமி விரஜானந்தரை விட்டுப் பிரிந்தவுடன் தயானந்தர் முன்பக்கங்களில் கண்ட நிலையில் இந்தியா இருப்பதை யறிந் தார். அவருக்கு முன்னால் செய்யப்பட வேண்டிய காரியங் கள் எவ்வளவோ இருந்தபோதிலும் அவர் அதற்காக அஞ்சி னாரில்லை. தன் குருநாதன் தனக்குச் செய்யும்படி அளித்த வேலையின் திறமை இவ்வளவுதான் இருக்குமென்று இதற்கு முன் அவர் அறியார். சன்னியாசியாகவும், ப்ரம்மசாரியாக வும் இருக்கும் அவர் இஷ்டப்பட்டால் ஓர் மடத்திலே தங்கி யிருந்து சுகமாக உண்டு உடுத்து காலந்தள்ளிக்கொண்டு வர லாம். அன்றி தான் வீட்டைவிட்டுப் புறப்பட்டதின் கருத் தையும் முடித்துக்கொண்டிருக்கலாம். ஆனாலும் சுயநலத் தைக் கவனித்து வாழ அவர் விரும்பவில்லை. தன் மதத் தின் சீர்திருத்தத்தை நாடி பிறர்க்காக வாழ்வதே தன் கடமை யாகக் கொண்டார்.

சரியாக வேலையில் இறங்குவதற்குமுன் சிலவருட காலங் களை அக்கால நிலைமையைக் கற்றுக்கொள்வதில் செலவிட்டார். வைத்தியனைப்போன்று இந்தியாவின் வியாதியை அறிய முயற்சித்தார். ஏனெனில் இந்தியா அக்காலத்தில் உண்மை யாகவே ஆசியாகண்டத்தின் வியாதியாளனாயிருந்தது. இவ் வழியிலே ஐந்து வருடங்களைச் செலவிட்டார். ஆனால் அது

வில்லை. அவ்வைந்துவருட அனுபவமே அவரை சத்திய மனோவாக்கு காயப்பலவானாக்கி வேலையில் ஊக்கக் குறைவின்மையை அளித்ததெனலாம்.

மத்ராவை நீங்கியவர் நேராக ஆக்ராவுக்குச் சென்று ஓர் நந்தவனத்தில் அமர்ந்தார். அங்கே தன் காலத்தை வாசிப்பிலேயும் அப்யாசத்திலேயும் அதிகமாகக் கழித்து வந்தார். எதிர்பாராவிதமாக அதே வனத்தில் கைலாச பார்பத் எனும் ஓர் துறவியார் அனேக பொது ஜனங்களின் மத்தியில் கீதா உபன்யாசம் செய்துகொண்டிருந்தார். ஓர் நாள் அவருக்குச் சரியாக விளக்கிச் சொல்லமுடியாத ஓர் பாகத்தை வாசிக்க நேர்ந்தது. அச்சமயம் தயானந்தரை அறிந்திருந்த ஒருவர் தயானந்தரிடம் சென்று அதை விளக்கிச் சொல்லுமாறு வேண்டினார். தயானந்தரும் அதற்குச் சம்மதித்து வெகு அழகாக அதை எல்லோரும் சுலபத்தில் அறியும்வண்ணமும், கைலாச பார்பத்தரும் களிப்படையும் வண்ணமும் விளக்கிச் சொன்னார். இதனால் களிப்படைந்த பொது ஜனங்கள் "பஞ்சதசி" எனும் நூலை வ்யாக்யானம் செய்யும்படி தயானந்தரை வேண்டிக்கொண்டனர். அதை அவ்வாறே தயானந்தர் விளக்கிச் சொல்லிக்கொண்டு வரும்போது மத்தியிலே "கடவுளும் மாய்கையின் வசப்படுவார்" எனும் பொருள் தரக்கூடிய ஓர் பாகத்தைக் கண்டார். "கடவுள் எல்லாவற்றினும் உயர்ந்தவர்" எனும் கொள்கையைக் கடைப்பிடித்துவந்த தயானந்தருக்கு இது தாங்கக்கூடாததாய் இருந்தது. இப்பேர்ப்பட்ட ஆபாசமும் பொய்யும் நிறைந்த புஸ்தகத்தைத் தான் வாசிக்கமுடியாதென்று சொல்லி அதை எறிந்துவிட்டார்.

சந்த்யாவைக்குறித்த வேதமந்திரங்களை யெல்லாம் சேர்த்து அச்சிட்டு சுமார் முப்பதாயிரம் ப்ரதிகள்வரை சந்த்யாவைக் கற்றுக்கொள்ளப் பிரியமுள்ளவர்களுக்கு வெகுமதியாக அளித்தார். அன்றி ஆக்ராவில் தங்கியிருந்தகாலம்வரை வேதசம்பந்தமான நூற்களை கற்பதும் தனக்கு சந்தேகமேற்பட்ட காலங்களிலே தன் குருநாதனிடம் சென்று தன் சந்தேகங்களை விலக்கிக்கொள்வதுமாக இருந்துவந்தார். தபால் மூலமாகவும் தன் குருநாதனிடமிருந்து தன் சந்தேகங்களுக்கு விடைகளைப் பெற்றுவந்தார். இவ்வாறு இரண்டு வருடங்கள் ஆக்ராவிலேயே கழித்தார்.

இப்போது வேதங்களைக் கற்க மிகுந்த ஆவல்கொண்டவராய் தயானந்தர் த்வால்பூருக்கும், லஸ்கருக்கும் சென்றார். அக்காலத்தில் லஸ்கரின் மஹாராஜாவானவர் நானூறு பண்டிதர்களைக் கொண்ட ஓர் சபையை நிருவி அதில் பாகவத ப்ரசங்கம் செய்யுமாறு ஏற்பாடு செய்திருந்தார். தயானந்தரும் இச்சபைக்குச் சென்று பாகவதம் ஓர் நல்ல புஸ்தகம் அல்லவென்று வாதிக்கலானார். தயானந்தரின் இவ்வாதத்தைக் கேட்டும் மகாராஜாவானவர் தன் கதாப்ரசங்கத்தை நிறுத்திவிடவில்லை. எதிர்பாராவிதமாக அக்கதை முடிவுற்ற அதே இரவில் மஹாராணியார் ஓர் இறந்த குழந்தையைப் பெற்றாள். அன்றி ஒரு மாதத்திற்குப்பின் அவ்வூரில் காலரா உண்டாக அரசனின் மகனுக்கும் அது பற்றிக்கொண்டது. இச்சம்பவங்களுக்கும் தயானந்தர் பாகவதத்தை குற்றமென்று சொன்னதற்கும் ஒருவித சம்பந்தமுமில்லாதிருந்தபோதிலும் இச்சம்பவங்களெல்லாம் பாகவத ப்ரசங்கத்தில் ஏற்பட்ட குற்றத்

தாலேயே உண்டாயினவென்று தீர்மானிக்கப்பட்டன. இதனால் அக்காலத்தில் பெரியபண்டிதர்களாக மதிக்கப்பட்டு வந்த ரங்காசார்ய, கோபாலாசார்ய முதலிய எல்லா பண்டிதர்களும் தயானந்தரின்மேல் வெறுப்புக்கொள்ளத் தொடங்கினர். ஆனால் தயானந்தர் தன்னுடன் வாதம் புரிய வரும்படி வெளிப்படையாகச் சொல்லியும் யாரும் அதற்குச் சம்மதித்து வரவில்லை.

இதன் பிறகு தயானந்தர் கமாலி, ஜெயப்பூர் முதலிய இடங்களுக்குச் சென்றார். ஜெயப்பூரில் 2-3 சாஸ்த்திர வாதங்கள் செய்து வென்று தன் சித்தாந்தங்களை நிலைநாட்டினர். தாகூர் ரஞ்ஜிட்சிங்கின் வரவேற்பை அங்கீகரித்து பீகானேர் சென்றார். அங்கு செய்த அவரின் மத முன்னேற்ற ப்ரசாரத்திற்குச் சம்மதித்த தாகூர் விக்ரக வழிபாட்டை ஒழித்துவிட்டு தயானந்தரிடமே மனுஸ்மிருதியையும் உபநிஷத்துக்களையும் கற்றுக்கொள்ளலானார். மற்றும் அவரின் ப்ரசங்கத்தைக் கேட்டவர்களுள் அனேகம் பேர்கள் தங்கள் கெட்ட பழக்கங்களைக் கைவிட்டுவிட்டு சன்மார்க்கர்களானர்கள்.

விக்ரம 1922-ம் வருட ஆரம்பத்திலே தயானந்தர் பெரியதோர் உற்சவம் நடைபெறும் தருணமாயிருந்த புஷ்காத்திற்குச் சென்றார். அங்கே யிருந்த பண்டிதர்களை தன்னுடன் வாதம் புரியவரும்படி அழைத்தார். சில பண்டிதர்கள் பாய்க்குந்த் சாஸ்த்திரியாரை தயானந்தருடன் தர்க்கம் புரியச்செல்லும்படித் தூண்டினர்கள். அவரும் அதற்கு சம்மதித்தபோதிலும் குறித்தகாலத்திலே அங்கு அவர் செல்லாம

விருந்துவிட தயானந்தரோ அவ்விடத்திற்குச்சென்றார். பாகவத புராணத்தைக்குறித்து இருவரும் வாதஞ்செய்தனர். தயானந்தர் பாகவதத்தின் படிப்பினையை குற்றமென்றும் மற்றவர் சரியென்றும் வாதம் புரிந்தனர். கடைசியாக பாய்க்குந்தரின் குருவினிடம் இவ்விஷயம் சென்றபோது அவர் தயானந்தர் சொல்வதே சரியானதென்று தன் சம்மதத்தைத் தெரிவித்தார். அதன் பிறகு அச்சாஸ்திரியார் தயானந்தரை வணங்கி தனக்கு கல்விகற்பிக்குமாறு வேண்டிக்கொண்டார். ருத்ராக்ஷமாலைகள் தரிப்பது பலனில்லாதது என்று தயானந்தர் சொல்லிக்கொண்டுவருவது சில பிராம்மணர்களுக்கு விரோதமாயிருந்தது.

1866-மே மாதத்தில் தயானந்தர் அஜ்மீருக்குச்சென்றார். அங்கேயும் பாகவதத்தைக்குறித்தும், விக்ரஹாராதனையைக் குறித்தும், கோவில்களைக்குறித்தும் கண்டித்துக்கொண்டு வந்தார். இதனால் அவ்வூர் பிராம்மணர்கள் தயானந்தரை விரோதிக்கத் தலைப்பட்டனர். ரெவரெண்ட் க்ரே (Rev-Grey), ரெவரெண்ட் ராபின்சன் (Rev. Robinson), ரெவரெண்ட் ஸ்கூல்ப்ரெட் (Rev. Schoolbred) முதலிய கிருஸ்தவப் பாதிரிமார்களுடனும் தயானந்தர் வாதம் புரிந்தார். வாதம்புரிய எடுத்துக்கொண்ட விஷயம் "கடவுள், ஆத்மா, இயற்கை, வேதம்" என்பவையாகும். மூன்றுநாள் வரை வாதம் தொடர்ந்து நடந்துவந்தது. அதன்பிறகு தயானந்தரின் வாதத்தை யெதிர்க்கமுடியாது என்று மற்றவர்கள் தீர்மானித்துக்கொண்டனர். தயானந்தரின் யுக்திவாதத்தைக்குறித்து எல்லோரும் ஆச்சரியப்பட்டனர். தயானந்தரின் மதச்சேவையைக்குறித்து ரெவரெண்ட் ராபின்சன்,

என்பார் ப்ரமித்து விட்டார். அத்துடன் தான் இதுவரை இப்பேர்ப்பட்ட கல்வியாளர் ஒருவரையும் சந்தித்ததே இல்லையென்றும், தயானந்தர் உண்மைக்கல்வியாளர் என்பதைத் தான் ஒப்புக்கொள்வதாகவும் ஓர் நற்சாக்ஷிப்பத்திரமும் எழுதிக்கொடுத்தார். அங்கு வந்திருந்த எல்லோரையும் தயானந்தருக்கு மரியாதை செலுத்துமாறும் வேண்டிக்கொண்டார். ராஜபுதனத்தின் ராஜப்ரதிநிதி (Governor General) யின் கார்யத்தலைவர் உட்பட அனேக ஐரோப்பியர்களை தயானந்தர் சந்தித்தார். பசுவதையைத் தடுக்கவேண்டிய முயற்சி எடுத்துக்கொள்ளுமாறு தயானந்தர் கண்யத்தலைவரை வேண்டிக்கொள்ள தயானந்தரின் ப்ரசங்கத்தால் சந்தோஷமடைந்திருந்த அவரும் அதை ஏற்றுக்கொண்டார். தயானந்தர் அஜ்மீருக்கு வந்திருப்பதாகக் கேள்விப்பட்ட அவ்வூர் பெண்மணிகளெல்லாம் அவரின் ஆஸ்ரமத்திற்கு வந்து தயானந்தரை தரிசிக்க வேண்டுமென்று விரும்பினார்கள். தயானந்தர் தன்னிடத்திற்கு பெண்களை வரவழைக்ககூடாதென்று தீர்மானித்திருந்தாராதலால் அப்பெண்மணிகளுக்கு தங்கள் புருடர்களை அனுப்பிவைக்குமாறு ஓர் ஆளைவிட்டு சொல்லச்சொன்னார்.

1866-நவம்பர்மாதம் ஆக்ராவில் ஓர் தர்பார் நடைபெறப் போகின்றது என்று கேள்விப்பட்ட தயானந்தர் அங்கு சென்று தன் ப்ரசாரத்தைச்செய்ய ஆரம்பித்தார். பாகவதத்தின் ஆபாசத்தை விளக்கி ஓர் சிறிய வியாசத்தை எழுதி அச்சிட்டு எல்லோருக்கும் அளித்தார். ரங்காச்சாரியாருடன் வாதம் புரிவதற்காக ஜெயப்பூர் வரவேண்டுமென்று வேண்டிக்கொண்டிருந்த ஜெயப்பூர் அரசனின் கடிதம் ஒன்றை தயானந்தர் வரப்பெற்றார். அதற்கு சம்மதித்து அங்கே

செல்வதன் முன் தன் குருநாதனை சந்திக்க விருப்பங்கொண்டு மதுராவுக்குச்சென்றார். ஒரு பீஸ் மஸ்லினையும், இரண்டு பொன் மோஹராக்களையும், பாகவதத்தைக் குறித்து வெளி யிட்டுள்ள அச்சுப்பிரதி ஒன்றையும் தன்குருநாதருக்குச்சமர்ப் பித்தார். சத்தியவேதமதத்தை ப்ரசாரம் செய்வதில் தன் வாக்கியத்தை முற்றிலும் பரிபாலித்துவரும் தன் மாணவ னின் குருபக்தியைக்குறித்து விரஜானந்தர் கரையிலா ஆனந்த மடைந்தார். இதற்கு இரண்டு வருடங்களுக்குப் பிறகு விரஜானந்தர் இறந்துவிட இருந்தாராதலால் இதுவே அவர் களின் கடைசி சந்திப்பாயிருந்தது.

தன் குருநாதனின் ஆசீர்வாதத்தைப்பெற்ற தயானந்தர் ஜெயப்பூரை அடைந்தார். அரசர் தன்னைப்பார்க்க விரும்பு கிறாரென்றறிந்து அரண்மனைக்குச்சென்றார். இதற்கு முன்பே சிலர் "ஸ்வாமி தயானந்தர் விக்ரஹ ஆராதனையையும் சைவ மதத்தையும் தூஷிப்பவர்" என்று அரசனிடம் புகார்செய் திருந்தனர். இதை 'அரசன் பொறுக்கமுடியாதவனாயிருந் தான். அதனால் தயானந்தரைத்தான் தரிசிக்கக்கூடாதென்று தீர்மானித்துக்கொண்டிருந்த அரசன் தான் வெளியில் சென் றிருப்பதாகச் சொல்லிவரும்படி தயானந்தர் வந்த வேளையில் காவலாளனை ஏவினார். உண்மைக்காரணத்தை ஊகித்துக் கொண்ட தயானந்தர் தன்னிடத்திற்குச் சென்றுவிட்டார்.

பன்னிரண்டு வருடங்களுக்கொரு முறை நடைபெறும் கும்பமேளா உற்சவம் (மே-1867-ல்) நடைபெறப்போகின்ற தென்று கேள்விப்பட்ட தயானந்தர் ஹரித்துவாரத்திற்குச்

சென்றார். லட்சக்கணக்கான ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் அன்றையதினம் கங்கையில் குளிப்பதால் தங்கள் பாபங்களெல்லாம் விலகிவிடுமென்ற எண்ணத்துடன் அங்கு சென்றுகொண்டிருந்தனர்.

இப்பேர்ப்பட்ட ஓர் நல்ல சந்தர்ப்பத்தில் தான் அங்கு சென்று தீர்த்தம் என்பதின் உண்மையை எல்லோருக்கும் எடுத்துச்சொல்ல வேண்டுமென்ற எண்ணத்துடன் தயானந்தர் உற்சவம் ஆரம்பமாவதற்கு ஒரு மாதத்திற்கு முன்பே ஹரித்துவாரத்தைச் சென்றடைந்தார். அப்போதே அங்கு அனேகர் வந்து சேர்ந்திருப்பதைக் கண்டு ஆச்சரியமடைந்தார். ஹரித்துவாரத்துக்கு மூன்று மைலுக்கப்பால் ரிஷிகேசத்திற்குச்செல்லும் பாட்டையில் தயானந்தர் தன்னிடத்தை ஸ்தாபித்துக்கொண்டார். ஒரு சிறிய குடிசையையும் அங்கு தனக்காக அமைத்துக்கொண்டார். அதற்கு பொய்மையைக்கண்டித்தல் என்று பொருள்தரும் "பாகண்ட கண்டினி" என்ற பெயரையிட்டார். அங்கே உபநிஷத்தை வாசித்துச்சொல்ல ஆரம்பித்து அதைகேட்கக்கூடுபவர்களுக்கெல்லாம் "நல்லநடத்தையில்லாமல் கங்கையில் ஒருமுழுக்குப் போட்டுவிடுவதால் ஒன்றும் ஆய்விடாது" என்று சொல்லிவந்தார். பாகவதத்தைக்குறித்து வெளியிட்டிருந்த பிரதிகளில் அனேகத்தையும் அங்கு விநியோகித்தார். போலித்துறவிகளும் சாதுக்களும் தயானந்தரின் ப்ரசங்கத்தைக் கேட்டு தங்கள் பிழைப்பில் மண்விழுந்து விடுமென்று பயந்து தயானந்தரை பலவிதமாகத்திட்ட ஆரம்பித்தனர். ஆனால் தயானந்தரின் ப்ரசங்கத்திற்கு சந்தோஷப்பட்டவர்களெல்லாம் அவரிடமே வாசம்செய்ய ஆரம்பித்தார்கள். எவ்வளவு

தூரம் கெட்ட வார்த்தைகளைச் சொல்லமுடியுமோ அவ்வளவு தூரம் சொல்லி தயானந்தரின் விரோதிகள் அவரைத்திட்ட ஆரம்பித்தனர்.

எல்லோருக்கும் தயானந்தர் தர்மத்தின் உண்மைத் தத்துவங்களை விளக்கிச் சொல்லிவந்தார். கெட்ட பழக்கங்களை விட்டு நல்ல பழக்கங்களைச் செய்துவருமாறும் ஜனங்களுக்கு எடுத்துச்சொல்லிவந்தார். கும்பமேளா உற்சவ காலத்திலேயே இந்துக்கள் விக்ரஹ ஆராதனையில் ஆழ்ந்திருக்கும் நிலையையும், பலவித ஆபாசங்களைப் புரியும் கொடுமையையுங்கண்டு வருத்தப்பட்டார். இரவில் சமுத்திரம் போன்று ஜனங்கள் தூங்கிக்கொண்டிருக்கும் காட்சியை தயானந்தர் கண்டு சொல்லமுடியாத துன்பத்தை அனுபவித்தார். வேத மதத்தில் கூடாதென்று சொல்லியிருப்பதையெல்லாம் செய்து கொண்டும், செய்யவேண்டுமென்று சொல்லியிருப்பதை யெல்லாம் கைவிட்டுமிருக்கும் நிலையை அப்போதே தயானந்தர் கண்டு துயரப்பட்டார்.

தன் குருநாதனின் கட்டளையை சிரமேற்கொண்டு நிறைவேற்றத்துணிந்த தயானந்தர் கெடுதல்களுடன் சண்டையிட்டு நல்லவைகளுடன் நட்புகொண்டு சத்தியமதமாம் வேத மதத்தைப் பிரசாரம் செய்துவந்தார். லட்சக்கணக்கான குருட்டுநம்பிக்கைகளைக்கொண்ட மனிதர்களிடை மற்ற யார்தான் உண்மைப்ரசாரம் செய்யத்துணிவார்கள் ? ஹிந்து மதத்திற்தோன்றி மக்களைப் பிடித்தாட்டிவரும் மூடப்பேயை ஒழிக்க முன்வந்து வேலைசெய்தவர் ஸ்வாமி தயானந்தரைத் தவிர மற்ற யார்? இப்படி மக்களின் உள்ளத்திலே ஊன்றிப்

போயிருக்கும் மூடத்தனத்தை நம்மால் விலக்கத்தான் முடியுமா என்று ஒரே சமயத்தில் தயானந்தர் நினைத்ததுண்டு. ஆனாலும் மறுநிமிடம் தான் எப்படியாவது நீக்கியே தீரவேண்டும் என்று நினைத்து முன்னெழுந்த எண்ணத்தை அடியுடன் கைவிட்டார்.

மஹாத்மா காந்தியார் இக்காலத்திலே பெரும் த்யாகம் செய்து—தன் சபர்மதி ஆஸ்ரமத்தையும் மூடிவிட்டு—தன் சட்டமறுப்பு இயக்கத்தை ஆரம்பித்தது போலவே அக்காலத்தில் தயானந்தர் தன்சொத்து எல்லாவற்றையும் தியாகம்செய்துவிட்டு, தன் பணத்தில் 35 ரூபாய்களை தனக்கோர் "மஹாபாஷ்யம்" வாங்கி அனுப்பும்படி தன் குருநாதனுக்கு அனுப்பிவிட்டு, மற்றவைகளையெல்லாம் ஏழைகளுக்குப் பகிர்ந்தளித்துவிட்டு, தான் ஓர் கௌபீனத்தையும், ஓர் கமண்டலத்தையும் மாத்திரம் வைத்துக்கொண்டு வேலைசெய்யத் துடங்கினார். "இவ்வாறு எல்லாவற்றையும் நீக்கிவிட்டதற்கு என்ன காரணம்?" என்று தயானந்தரை வினவியபோது "தான் பூர்ண சுதந்திரவானாகவும் பந்தனம் உண்டாக்காத சிறியவாழ்வையே கொண்டிருப்பவனாகவும் இருக்கவேண்டும்" என்று பதிலளித்தார்.

இவ்வாறு தன்னை விடுவித்துக்கொண்டவரான தயானந்தர் பாகவதத்தைக்குறித்து கண்டனம் செய்யத்துடங்கினார். தன் பாஷாபிவிருத்தியை நாடி சதா சம்ஸ்கிருதத்திலேயே வார்த்தையாடிவந்தார். ஹரித்துவாரிலிருந்து ரிஷிகேசம் சென்றார். அங்கிருந்து கங்காவுக்கும் லண்டோராவுக்கும் சென்றார். மூன்று நாட்கள் ஆகாரமில்லாமல் பசியுடனே

வேலை செய்துவந்தார். ஒருநாள் ஒருவன் மூன்று கத்தரிக் காய்களை அளிக்க அதையருந்தி தன் பசியைத் தணித்துக் கொண்டார். இவ்வாறே அவரின் தன்னடக்கம், தன்னம் பிக்கைகள் நாளுக்குநாள் வளர்ந்துகொண்டிருந்தது சதா மணலிலாவது, கல்லின் மேலாவது, தரையின் மேலாவது படுத்துவந்தார். சதா சம்ஸ்கிருதத்திலேயே வார்த்தையாடிவந்தார். ஒரே யிடத்தில் ஒருநாள் இருந்துவிடாமல் அவ்வப்போது பல ஊர்களுக்கும் சென்றுவருவார். தயானந்தர் எங்கு சென்றபோதிலும் இவரைக்காண பல்லாயிரக்கணக்கான ஜனங்கள் வருவார்கள். அவர்களுக்கெல்லாம் தயானந்தர் காயத்ரீ மந்த்ரோபதேசம் செய்து, பூணூலையும் அணிவித்து வந்தார். அன்றி புராணங்களையும், தந்திரங்களையும் கண்டித்து ஜனங்களுக்கு சத்தியத்தை விளக்கிச் சொல்லிவந்தார்.

தயானந்தர் அனுபசஹறுக்குச்சென்றார். அங்கே "விக்ரஹ ஆராதனை"யைக்குறித்து "ஹீரா வல்லப, பார்பதி" என்னும் பண்டிதருடன் தர்க்கம் செய்தார். ஆறுமணி நேரம் வாதம் நடந்தபிறகு சாஸ்திரியார் தன் தோல்வியை ஒப்புக்கொண்டதுடனில்லாமல் தயானந்தர் சொல்வது முழுதும் சத்தியமே என்று அங்குள்ளோருக்கும் விளக்கிச்சொன்னார். பூகாராம் எனும் கோவில் அர்ச்சகர் ஒருவர் தயானந்தரின் ப்ரசங்கத்தையாராய்ந்து அசகவசரி (சத்யம்) எனத்தெரிந்து கொண்டு தனக்கும் கோவிலுக்கும் ஒருவித சம்பந்தமுமில்லாமல் செய்துகொண்டதுடன் விக்ரஹ ஆராதனையையும் மறந்துவிட்டான். உலகை உண்டாக்கியவரான ஒரே கடவுளின் நம்பிக்கையையுங்கொண்டான்.

மற்ருேர் தாகூர் மூகந்த்சிங் எனும் பெரியார் தயானந் தரின் அனுபசஹர் தர்க்கத்தால் சந்தோஷமடைந்து தன் கிராமத்திலுள்ள 30 கோவில்களேயும் மூடிவிடுவதாக தீர் மானித்துக்கொண்டார். அவ்வாறே ஊருக்குச்சென்றவுடன் எல்லா விக்கிரஹங்களேயும் காளி நதியிலே எறிந்துவிட்டார்.

அனுபசஹரிலிருந்து கார்ண்வாசுக்குச்சென்ருர். அங்கே அல்காரா கொத்தவாலான "ராவ் கான்சிங்" எனும் ஓர் பெரி யவர் வசித்திருந்தார். யாரோ ஓர் துறவி விக்ரஹ ஆராதனே யையும் சைவசமயத்தையும் கண்டித்துக்கொண்டு வருவதாகக் கேள்விப்பட்டார். ராவ் என்பவர் சைவமதத்தைச் சேர்ந் தவரன்றி ரங்காச்சாரிகளின் மாணவராவர். அவர் தயானந் தரைத் தன் விரோதியென மதித்துவந்தார். ஒருநாள் அவர் பன்னிரண்டு ஆயுதங்கள் தரித்த வீரர்களுடன் தயானந்தரின் இருப்பிடத்திற்குச்சென்ருர். தயானந்தர் அவரை அன் புடன் வரவேற்ருர். அன்றி அவர் நெற்றியிலே ஓர் பொட் டிட்டிருப்பதைக்கண்டு க்ஷத்திரியனை அவர் பிச்சைக்காரர் கள் வழக்கமாக வைக்கும்பொட்டை ஏன் வைத்திருக்கிருர் என்று கேட்டார். இதைக்கேட்ட ராவின் கோபத்திற்கு எல்லேயில்லே. கண்கள் சிவக்க தயானந்தரைப்பார்த்து அவர் இப்படி கங்கையையும், தீர்த்தங்களேயும், புண்ணிய க்ஷேத் திரங்களேயும் திட்டுவது தகாதென்றும் இனிமேலும் அப் படியே செய்தால் அவர் அனேக கஷ்டங்களுக்குட்பட வேண் டிவருமெனவும் சொன்னர். தயானந்தர் கோபமடைந்த ராவை நோக்கி அவர் சண்டைசெய்ய விரும்புவதாயின் சன்னி யாசியான தன்னிடம் வேண்டாமென்றும் ஜெயபூர், ஜ்வாலா பூர் முதலிய ஊர்களின்மேற் படையெடுத்துச்சென்று

சண்டை செய்துகொள்ளும்படியும் வேண்டிக்கொண்டார். அவ்வாறின்றி சத்தியத்தை அறிந்துகொள்ள விரும்புவதாயின் அவரின் குரு ரங்காச்சாரியாரை அழைத்து வரும்படியும் கேட்டுக்கொண்டனர். தூண்டப்பட்ட கோபத்தைகொண்டிருந்தவரான ராவ் இன்னும் தயானந்தருக்கருகில் சென்று வாளின் கைப்பிடியின்மேல் கையை வைக்க அதற்குள்ளாக தயானந்தரைக் கொன்றுவிடவேண்டுமென்று தீர்மானித்திருந்த ராவின் வேலையாள் ஒருவன் வாளையுருவி தயானந்தரை எதிர்த்துச்செல்ல தயானந்தர் திடீரென்று பாய்ந்து அவன் வாளைப்பிடுங்கிக்கொண்டு அவனை பின் தள்ளினார்.

இதைக்கண்ட தயானந்தரின் பக்தர்களெல்லாம் மிக மிகக் கோபமடைந்தனர். அவர்களுள் ராவ் கிருஷ்ணசிங் என்பார் கான்சிங்கரை யழைத்து தயானந்தரிடம் சென்று மன்னிப்புக் கேட்டுக்கொள்ளும்படியும், இன்றேல் வெட்டப்பட்ட தலையை மாத்திரந்தான் அவர் வீட்டிற்கெடுத்துச் செல்லக்கூடுமென்றும் பயமுறுத்தினார். பொது ஜனங்களும் இதை போலீஸுக்குத் தெரிவிப்பதாகச் சொன்னார்கள். ஆனால் தயானந்தர் அப்படி செய்வது சரியல்லவென்றும், அவர்கள் க்ஷத்திய தர்மத்தை மறந்துவிட்டனரேல் தாமும் தம்முடைய ப்ராம்மண தர்மத்தை மறந்துவிட முடியாதென்றும் சொன்னார்.

இவ்வாறாக ஏமாற்றமடைந்த ராவ் தன் வீட்டிற்குச் சென்றுவிட்டார். ஆனாலும் அன்றிரவு சில ஆயுதபாணிகளை அனுப்பி தயானந்தரின் உயிரை வாங்கி விட்டுவரும்படிச் சொல்லியனுப்பினார். ஆனால் அவ்வீரர்கள் சென்றபோது தெய்

லாம் தயானந்தரைக்காணவந்தவர்களையும், தயானந்தர் தங்களை எதிர்க்கத்தயாராயிருப்பதையுங்கண்டு பேசாமல் சென்று விட்டார்கள். கிருஷ்ணசிங்கர் இந் நடத்தைகள் எல்லா வற்றைக்குறித்தும் அவ்வூர் வாசிகளுக்குச் சொல்லிவைத் திருந்தார். கான் சிங்கின் மாமனுருங்கூட அவரை ஊரை விட்டுச் சில நாளைக்குச்சென்றிருந்து வரும்படியும், இன்றேல் கோபங்கொண்டிருக்கும் க்ஷத்திரியர்களால் அவருக்கே தேனும் ஆபத்து நேரிடலாமென்றும் தெரிவித்தார். இவ்வுபதேசத்தை யேற்று ராவ்கான்சிங் தன் சொந்த ஊருக்குப் போய்விட்டார். பொது ஜனங்கள் தயானந்தரை வேறிடத்திற்குச் சென்றுவிடலாமென்றழைத்தபோது:—"இல்லை. என்னை யாரும் ஒன்றும் செய்யமுடியாது. என்னை மனிதர் யாரும் காப்பாற்றமுடியாது. என்னை எல்லாவிடங்களிலும் காப்பாற்றுபவர் கடவுளேயாகும். என்னைக்குறித்து யாரும் வருத்தப்படாதிர்கள். எல்லா எதிரிகளையும் அவரவர்களின் ஆயுதங்களைக்கொண்டே விரட்டியடிக்கக்கூடிய திறமை எனக்குண்டு." என்று சொன்னார்.

எவ்வளவு இடையூறுகள் வந்தபோதிலும் தயானந்தர் பிறருக்கு கல்விகற்பித்து பொது ஜனங்களுக்கு சத்தியத்தை விளக்கிச் சொல்வதனின்றும் விலகவேயில்லை. பொது ஜனங்களுக்கு உண்மைகளை விளக்கிச்சொல்லி பூணூலை அணிவித்து வந்தார். அவரிடத்திலிருந்து பூணூலைப்பெற க்ஷத்திரியர்களே மிகமிக ஆவலாயிருந்தனர்.

குருமார்களின் வகுப்பாரெல்லாம் தயானந்தரை வெறுத்துவந்தனர். ஒருநாள் ஓர் குருசமூகத்தன் (ப்ராம்மணன்)

தயானந்தரிடம் வந்து ஓர் வெற்றிலையை அளிக்க தயானந்தரும் அதை சந்தோஷமாக வாங்கிக்கொண்டார். அதை மெல்ல ஆரம்பித்தபோதே அதில் ஏதோ குற்றமிருக்கிறது என்று கண்டார். உடனே கங்கை நதிக்கு ஓடிச்சென்று நீரிலிறங்கி "நியோலிகரண்" எனும் அப்பியாசத்தைச்செய்து வயிற்றைச் சுத்திசெய்து கொண்டார். இதனால் அவர் உயிர் பிழைத்தார்.

தயானந்தரின்மேல் அன்பு வைத்திருந்த அவ்வூர் தாசில்தார் இதைக்கேட்டு அவ்வெற்றிலையளித்த ஆளைப்பிடித்து சிறைக்கனுப்பினார். ஓர்நாள் அத்தாசில்தார் ஸ்வாமியினிடம் சென்று தான்செய்த காரியத்தைச்சொன்னார். தயானந்தர் அதற்காக சந்தோஷப்படுவதைவிட்டு துக்கத்தையே அடைந்தார். பிறகு அம்மனிதன் வேண்டுதலின்மேல் விடுவிக்கப்பட்டான்.

இவ்வாறு தேசமக்களின் அஞ்ஞானத்தைப்போக்கி ஞானத்தை ஊட்டிக்கொண்டே விரஜானந்தரை பிரிந்துவந்து போதிலிருந்து ஐந்து வருடங்களை (1862-67)க்கழித்தார். மத்தியில் ஷஹபஜ்பூரில் தயானந்தர் இருந்தபோது அவரின் குருநாதன் இறந்துவிட்டதாகக் கேள்விப்பட்டார். சொல்ல முடியாத துக்கத்தையடைந்த தயானந்தர் "பெரிய வேத இலக்கண ஆதாரம் மறைந்துவிட்டது" என்று வாய்விட்டுச் சொன்னாராம்.

இவ்வைந்து வருடங்களில் அவர் செய்த வேலைகள் ப்ரசாரத்திற்கு முதல் கற்பனையேயாகும். மனிதர்களின் ஸ்வபாவங்களை நன்கறிந்துகொண்டார், தாய்நாட்டில் அன்புற்

றுக்கொண்டிருக்கும் மக்களை நெருங்கிப்பழகி அவர்களின் துன்பங்களுக்குக் காரணங்களையும் அறிந்து கொண்டுவந்தார். எவ்வளவு ஏமாற்றங்களுக்கும் மனத்தைச் சலிக்கவிடாமல் வைத்துக்கொண்டிருந்து வேலை செய்யத்துடங்கினார். அவரின் பிற்கால வாழ்விலே ஏற்பட்ட சம்பவங்களை விளக்கிச் சொல்லாமல் அவரின் காரிய சித்திகளைக்குறித்து மாத்திரம் சொல்லிக்கொண்டு வருவோம்.



# அத்தியாயம் 8

## கல்வித்திறமையாளர்.

1868 (A. D.)க்கு மத்தியிலே ஸ்வாமி தயானந்தர் விதிப்படி வேலை செய்யவேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டவராய் பிராக்வாபாத்துக்குச்சென்றார். இந்தியாவின் நாசத்திற்குக் காரணம் இந்துக்களின் கோழைத்தனமும் மூடத்தனமுமே என்று தயானந்தர் அறிந்தார். அக்காலத்திலிருந்து எல்லா நூற்களும் குறைந்த மூளையாளர்களால் எழுதப்பட்டவையேயாகும். பழமையான வேதக்கல்வி மறைந்தே விட்டது. அதற்காகவே தயானந்தர் வேதக்கலைகளைக் கற்பிய வேதப்பள்ளிக்கூடங்களைத் திறந்து வைக்க வேண்டுமென்று தீர்மானித்துக்கொண்டார். இத்தீர்மானத்தைக்கேட்டு சந்தோஷப்பட்ட லாலா பன்னிலால் என்பார் ஓர் புதிய கட்டடத்தில் ஓர் வேத பாடசாலையைத் திறந்து வைத்தார். மற்றும் பலரின் சகாயத்தாலே மாணவர்களுக்கு ஆடைகளும் ஆகாரங்களுமளிக்கப்பட்டு வந்தன. தயானந்தரோ கல்வி கற்பிதலில் உதவி செய்துவந்தார்.

எங்கெங்கு ப்ரசங்கம் செய்தாலும் அங்கங்கு பாடசாலைகளைத் திறந்து வைக்கும்படியும் கேட்டுக்கொண்டு வந்தார். இதன் பயனாக அனேக இடங்களில் பாடசாலைகள் தோன்றின. காஸ்கஞ்ஜீ, மீர்ஜாபூர், சாலேஸ்வாம், காசி முதலியவிடங்களிலும் பாடசாலைகள் ஆரம்பமாயின. எல்லா விடங்

மாணவர்களின் ஆடையாகாராதி விஷயங்களில் கவனம் செலுத்தப்பட்டு வந்தது. இப்பாடசாலை ானந்தரால் ஏற்படுத்தப்பட்ட கீழ்வரும் விதிகள் கப்பட்டு வந்தன :—

தன் சந்த்யாவை நன்கு கற்றுக்கொண்டிருக்காத ாவனையும் சேர்த்துக்கொள்ளப்பட மாட்டாது.

அஷ்டாத்யாயி, மஹாபாஷ்யம் முதலான வேத ான நூல்களையே கற்றுக்கொடுக்கப்படும்.

ஒவ்வொரு மாணவனும் விடியற்காலையில் எழுந்து செய்யவேண்டும். இதைச்செய்ய மறந்து விட்ட அன்று ஆகாரம் கொடுக்கப்பட மாட்டாது. அன்றி நந்துங்கூட அவனுக்கு ஆகாரம் வராதபடி தடுத்து ம். மறுபடி சாயங்காலத் தொழுகை நடத்திய ர் அவனுக்கு ஆகாரமளிக்கப்படும்.

முக்கியமான—அவசியமான—சம்பவங்கள் நடை ாவதாக பூர்ணமான வரவேற்புக் கிடைக்காதவரை களை வீட்டிற்கோ ஊருக்குள்ளோ செல்ல அனுமதிக் ட்டாது.

வெளியூரிலிருந்துவரும் மாணவர்களுக்கு மாத்திரம் யிலேயே ஆகாரமளிக்கப்படுமன்றி உள்ளூர் வாசி லை.

சரியாகக் கற்கும் மாணவர்களுக்கு ஆகார சம்பந்த மற்றும் பலவிதமான வெகுமதிகள் அளிக்கப்

படும். என்ருல் பரீட்சைகளிலே அதிகமாக மார்க்கு வாங்கிய வர்களுக்கு இரண்டுபங்கு நெய் விடப்படும்.

(7) தினமும் அக்னி ஹோத்திரத்தின் போது எல்லா மாணவர்களும் வந்து கலந்து கொள்ளவேண்டும்.

இவ்வாறு ஆரம்பித்த இம்முதற் கொள்கைகள் வரவர அதிகமாகத் தொடங்கியது. இப்படியே பரவிவந்த நிலை தான் தற்கால "குருகுலம்" ஆகும். இவ்வாருன குருகுலங்கள் வட இந்தியா முழுவதும் ஸ்தாபிக்கப்பட்டு ஆர்ய சமாஜத் தாலே பாதுகாத்துவரப்படுகின்றன.

ஒவ்வொரு பெற்ருேரும் தன் மக்களுக்கு எல்லா கல் வியையும் கற்பிக்க வேண்டுமென்று தயானந்தர் ப்ரசங்கித்து வந்தார். "ஆபரணங்களும் ரத்தினக்கற்களும் ஆத்மாவை அழகுசெய்வதில்லை. திருடர் பயத்தையும் மூடத்தனத்தை யும் அது அதிகரிக்கச்செய்யும். "எவர்கள் மனது கல்வி யிலே சென்றும், நல்ல நடத்தையைப்பெற்றும் இருக்கிறதோ, எவர்கள் சத்தியத்தை அதிகமாகக் கையாள்கிருர்களோ, அவர்களே பெரிய 'பாக்கியசாலிகளாகும்" எனும் கருத்தைத் தரும் சம்ஸ்கிருத ஸ்லோகத்தை சதா உச்சரித்து வருவார். இக்கொள்கையை மேற்கொண்ட தயானந்தர் கட்டாயக்கல் வியையும் ஆதரித்து வந்தார். மனுவின் வாக்கியப்படி எல்லா பெற்ருேர்களும் தங்களின் குழந்தைகளை (5-8) வயதில் பள்ளிக்கூடத்திற்கனுப்பி அங்கேயே (பெண்களை 16-வயது வரையும், புருடனை 25 வயது வரையும், வைத்திருக்கவேண் டும். இதை யாராவது மீறினல் அவர்களை தண்டிக்கவேண்டும். ஆகையால் எந்தக் குழந்தையும் 8 வயதிற்குமேல் தாய்தகப்

பன்மார்களுடன் இருக்கக்கூடாதென்று சட்டம் இயற்ற வேண்டும். சமாவர்த்தனச்சடங்கு நடைபெறுவதற்கு முன் யாரும் விவாகம் செய்துகொள்ளக்கூடாது.

இக்கொள்கைகள் எல்லாவற்றிலிருந்தும் தயானந்தர் கட்டாயப்படிப்பையும் ஓர் சட்டமாக்க வேண்டுமென்று விரும்புகிருர் என்று தெரிகிறது. அன்றி மாணவர்களுக்கு கல்விச்சாலையிலே ஜாதிபேதம் சிறிதும் இருக்கக்கூடாது. எல்லா மாணவர்களும் கல்விச்சாலையில் சமமே. உபாத்தியாயரின் தன்மையைக்குறித்து தயானந்தர் "ப்ராம்மணர்கள் தவிர மற்றவர்களுக்கு கல்வி கற்றுக்கொடுப்பதில்லை யென்று எந்த உபாத்தியாயரும் சொல்லக்கூடாது. எல்லா வருணத்தார்களுக்கும் சமமாக கல்விகற்றீயவேண்டும். ப்ராம்மணர்கள் மாத்திரம் தான் கல்வி கற்கவேண்டுமென்ருல் அப்பிராம்மணர்களும் அவர்களின் சமூகமும் எவ்வழியிலும் சுகத்தைப் பெறமுடியாது. கல்வியில்லாத க்ஷத்திரியர்கள் ப்ராம்மணர்களைத் துன்புறுத்த ஆரம்பித்து விடுவார்கள். அவர்களைப் பார்த்து மற்றவர்களும் அதன்படியே ஆரம்பித்து விடுவார்கள். ஆனுல் எல்லோரும் கல்வி கற்றுக்கொண்டால் அவர்கள் ப்ராம்மணர்களின் அதிகமான கல்வியைக்குறித்து மகிழ்ந்து அவர்களுக்கு உதவியே செய்துவருவார்கள். எல்லோரின் ஒழுக்கமும் சரியாயிருக்கும்.

மத, கல்வி, அரசாங்க செல்வத்தின் அபிவிருத்திக்குக் காரணமாயிருப்பவர்கள் உண்மையில் க்ஷத்திரியர் முதலாகிய வர்ணத்தவர்களேயாகும். எல்லோரும் கல்வி கற்றவர்களாகவே இருந்துவிட்டால் மூடத்தனம் பாவ சிறிதும் வழியில்லாமற்போய்விடும்.

ஓர் தனிப்பட்ட கூட்டத்தார் மாத்திரம் கல்விகற்பதால் அவர்கள் தங்கள் கல்வியை பலவித ஆபாசமான வழிகளில் உபயோகப்படுத்துகின்றார்களாகையால் அவ்வாறான சட்டமிருக்கக்கூடாது எனச் சொல்லுகிறார். அவர்—"நற்காலத்திய சுயநலப்பிராமணர்கள் மற்றவர்களைத் தங்களின் கல்வித்திறத்தால் அடிமைகளாக்கிச் சிறிதும் அவர்களைக்கற்கவிடாமல் தடுத்து எல்லா விஷயங்களிலேயும் தங்களின் வலையிலேயே சிக்கவைத்துக்கொண்டார்கள். க்ஷத்திரியர்கள் முதல் மற்றவர்கள் தங்கள் வசத்திலேயே இருக்கவேண்டுமென்று நிர்மானித்து அவர்களுக்குச்சிறிதும் கல்வியை அளிக்காமலே இருந்துவந்தனர். மற்றவர்களும் கல்விகற்க ஆரம்பித்துவிட்டார்களாயின் தங்களை மதிப்பவர்கள் யாருமில்லாமற்போய்விடுவதன்றி தங்களை யாரும் மதிக்கவும் மாட்டார்களென நினைத்தனர்" என்று சொல்கின்றார்.

இப்பேர்ப்பட்ட ஆபத்துக்களை நீக்கவே அவர் அரசாள்பவரும் ஆளப்படுபவரும் எல்லாவகுப்புகளையும் சேர்ந்த (ஆண் பெண்) குழந்தைகளுக்குக் கட்டாயப் படிப்பளிக்கவேண்டுமென விரும்பினார். இதிலிருந்து இவர் கல்வி சம்பந்தமாய் எவ்வளவு ஊக்கம் கொண்டிருந்தனரென நன்கு விளங்குகின்றது.

ஸ்வாமி தயானந்தர் "சத்தியார்த்தப் பிரகாச"த்தில்—கல்வியை அதன் எல்லா கிளைகளுடனும் 20 அல்லது 22 வருடங்களுக்குள் எவ்வாறு கற்றுக்கொடுக்க முடியுமென்று விவரித்தெழுதியிருக்கிறார். அவரின் வழியாவது சிக்ஷை, இலக்கணம், நிகண்டு, நிருக்தம், ஸ்மிருதிகள், சாஸ்த்திரங்கள்,

வேதங்கள், உபவேதங்கள் என்பதாகும். அரசாங்கத்தைக் குறித்து அவர் எழுதியுள்ளதை அப்படியே வாசித்துக்கொள்ளல் தான் மிக நல்லது. இதைக்குறித்து அவர்—" அது இரண்டு வகைப்படும்—பாதுகாப்பு, தளவாடம். பாதுகாப்பு என்பது ப்ரஜைகளையும், அவர்களின் செல்வங்களையும் காப்பாற்றி அவர்களை சதா சந்தோஷமனத்தர்களாக வைத்துக் கொண்டிருத்தல். நல்லோர்களைக்காப்பாற்றி தீயோர்களைத் தண்டித்தலாகும்.

தளவாடம் என்பது :—சைன்யங்களினணி வகுப்பு, யுத்த ஆயுதங்களை வைத்திருத்தல், பலவிதங்களான தேகப் பயிற்சி முதலியவைகள். இவைகளை எல்லாம் எல்லோரும் இரண்டு வருடங்களிலே கற்றுக்கொள்ளவேண்டும்.

கற்கக்கூடிய புத்தகங்கள் இன்னதுதான் கற்கக்கூடாத புத்தகங்கள் இன்னதுதானென்றும் அவர் விளக்கிச்சொல்லி யிருக்கிறார். ஆண்களும் பெண்களும் கலந்து வாசிக்கலாம் என்பதை தயானந்தர் மிகுந்த தப்பிதமாகச் சொல்கின்றார். இன்னும் "ஆண்குழந்தைகளும் பெண்குழந்தைகளும் 8 வயதை யடைந்த காலத்தில் முறையே அவரவர்களின் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பிவைக்கவேண்டும். துர்நடத்தை யுள்ள உபாத்தியாயர்கள் வசத்தில் குழந்தைகளை ஒப்புவிக்கக் கூடாது. தங்களை முற்றிலும் சீர்திருத்திக்கொண்டவர்களே உபாத்தியாயர்களா யிருக்கவேண்டும். குருகுலங்கள் தனி யான விடங்களில் கட்டப்படவேண்டும். ஆண்பெண்களின் குருகுலங்களுக்கு மத்தியில் குறைந்தது 3 மைல் இடைவெளி யிருக்கவேண்டும். வேலைக்காரர் முதல் எல்லோரும் ஆண்

குருகுலங்களில் ஆண்களாகவும் பெண்களின் குருகுலங்களில் பெண்களாகவுமே யிருக்கவேண்டும். எதிரிடையான வகுப்பைச்சேர்ந்த ஓர் குழந்தையும் அங்கு அனுமதிக்கப்படக் கூடாது.'' என்று சொல்கின்றார். எதிரிவகுப்பாருடன் 8 விதமான சம்பந்தங்களில் ஒன்றையும் வைத்துக்கொள்ளக் கூடாது. 8 விதமாவன :—ஒருவரை யொருவர் பார்த்தல் ; ஆலிங்கனம் செய்தல் ; சேர்க்கைபுரிதல் ; சம்பாஷித்தல் ; விளையாடல் ; ஒருவரையொருவர் நினைத்தல் ; ஒருவரையொருவர் வர்ணித்தல் ; நெருங்குதல் —; ஆகும்.

நன்கு நிர்மானித்து பழங்கால நிலையின்படி தயானந்தரால் இக்காலம் அமைக்கப்பட்ட இவ்விதி புதியதொரு புரட்சியேயாகும். தயானந்தரும் சமூக, மதசம்பந்தமான புரட்சியையே செய்யவிரும்பினார். மாணவர்களுக்குச் சரியானகல்வியை அளிக்காதவரை நாடு சிறப்புறாது என்பது அவரின் துணிபாகும்.

'நூற்றுக்கணக்கான பாஷைகளுக்கு மத்தியிலே இந்திய பொதுபாஷை ஒன்றை ஸ்தாபிக்கவும் தயானந்தர் முற்பட்டார். அதற்கு "ஹிந்தி"யே தகுந்த பாஷையெனவும் கண்டார். அவர் குஜராத்தியராயிருந்தும் அவரின் எல்லா புத்தகங்களையும் ஹிந்தியிலேயே எழுதினார். அக்காலத்திய ஹிந்தி பாஷையாளர்களெல்லாம் தயானந்தருக்கு மிகுந்த மரியாதையை அளித்தார்கள். சம்ஸ்கிருதத்திலே பூர்ண பாண்டித்யம் பெற்றிருந்தார். அவரின் காலத்திலே சம்ஸ்கிருதக்கல்வி தினம்தினம் மக்களின் உபயோகத்திலேயிருந்து நீங்கிக்கொண்டுவர அது சந்தேக பாஷையென்று மக்களின்

ாங்கள் நினைக்கலாயின, ஆனால் அதில்தான் தங்களின் ளோர்களின் பொக்கிஷங்களெல்லாம் நிறைந்திருக்கின் வென்பதை ஸ்வாமி தயானந்த சாஸ்வதியாரே எடுத்துக் டி-னார். அதற்காகவே அனேக இடங்களில் சுற்றித் து சாஸ்த்திரங்களையும் (ஜெர்மனியிலிருந்து) வேதத்தை சம்பாதித்தார். அனேககாலமாக இறந்துவிட்ட பாஷை ்று கருதப்பட்டுவந்த சம்ஸ்கிருதத்தை இறக்காது றும் நிலைபெற்றுள்ள பாஷை அதுவேயென்று விளக்கிக் டி- மக்களுக்குண்மையை உணர்த்தியவர் ஸ்வாமி தயானந் யாரும்.

அக்காலத்திலிருந்தவர்களையும் இக்காலத்திலிருப்பவர்களை ிட தயானந்தர் சம்ஸ்கிருதத்திலே பெரிய அறிவாளியா ;தார். பழைய நூல்களையாராய்ந்தபோது அனேக விஷ ளை பயன் தரக்கூடியதாய்க் கண்டார். அவரின் உரை தப் ்மன்று சிலர் சொன்ன போதிலும் அவரே பூர்ண ்கிருத பண்டி-தர் என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்ளு கள். தயானந்தரின் முழு விருப்பங்களையும் கொஞ்சங் ்ஞ்சமாக குருகுலங்கள் நிறைவேற்றிக் கொண்டு வரு ்னை.

யஜுர் வேதம் முழுவதற்கு ஹிந்தி சம்ஸ்கிருதம் ஆகிய ்டு பாஷைகளிலும் உரை எழுதினார். ருக்வேதத்தில் ்டலங்களுக்கும் அவ்வாறே உரையெழுதினார். ப்ருஹ ்யக, சாந்தோக்யோபநிஷதங்களுக்கும் உரையெழுதி வேதங்களின் உரைக்கு முகவுரையாக அவர் எழுதின வேதாதி பாஷ்யபூமிகா" என்பது அவரின் முழுஎண்ணத்

தையும் தெள்ளிதின் விளக்கும் ஓர் அறிவாளியைப் போன்றதாகும். அன்றி ஒரு மனிதன் பிறந்ததிலிருந்து சாகும் பரியந்தம் உட்படவேண்டிய 16 சடங்குகளைப் புரியும் விதங்களைக் குறித்து "சம்ஸ்காரவிதி" எனும் நூலை இயற்றினார். இன்னும் "ஆர்யாபிவினயம்" "பஞ்சமகாயக்ஞ விதி" முதலிய நூல்களையும் இயற்றினார். பசுவைக் காப்பாற்ற வேண்டிய தன் காரணங்களை விளக்கி சில துண்டுப்ரசுரங்களையும் வெளியிட்டுள்ளார்.

ஆயினும் தயானந்தரால் எழுதப்பட்ட எல்லா நூல்களிலும் மிக முக்கியமானதும் உபயோகமானதுமான புத்தகம் "சத்தியார்த்தப்ரகாசம்" அல்லது "உண்மை உரை விளக்கம்" ஆகும். இதை "ஆர்யசமாஜ பைபிள்" என்றும் சொல்வதுண்டு. கடவுள், சிருஷ்டி, மனித வாழ்க்கையின் நிலைகள், கல்வி, அரசாங்கம், உண்மை மதத்தின் தத்துவங்கள், சத்யமதமல்லாதவைகளின் கண்டனம், கிருஸ்துவ, மகம்மதியமத ஆராய்ச்சி; புத்த, ஜைனமதக் குற்றங்கள் முதலிய எல்லா விஷயங்களையும் இப்புத்தகத்திலே காணலாம்.

அவர் இறந்துவிடுவதற்கு முன் அவரிடமிருந்த, எல்லா செல்வங்களையும் தகுந்தவர்களிடமளித்து தன் கொள்கைகளைப் பரப்புமாறு வேண்டிக் கொண்டார். அவ்வாறு அவர் கேட்டுக் கொண்டதன்பேரில் அதற்காகவே நியமிக்கப்பட்ட சபை "பரோபகாரிணி சபை" யாகும். இச்சபையின் ஆதரவில் "வைதிகயந்த்ராலயம்" ஒன்றும் நடைபெறுகிறது. இங்கே ஸ்வாமி தயானந்தர் எழுதிய நூல்கள் வெளியிடப்படுகின்றன.

எல்லா மதங்களைச் சேர்ந்த படிப்பாளிகளிடம் தர்க்கம் புரிந்து அதன் மூலமாகவே தயானந்தர் தன் உண்மைகளைப் பரப்பி வைத்தார். எல்லோரும் தங்கள் தங்களின் முழுக்கல் வித்திறனையுங் கொண்டு தர்க்கித்துப் பின் தயானந்தரின் உண்மைகளைக் கண்டு மகிழ்ந்தனர். அவரின் யுக்தி வாதங் களைக் கண்டு பேராச்சரியமடைந்தனர்.

தற்கால இந்தியா அவர் கல்வித்திறமையாலுண்டான பரோபகார உழைப்பிற்கு பெரிதும் கடன்பட்டிருக்கிறது. தற்காலக் கல்வியாராய்ச்சியாளர்களின் தொகையில் தயா னந்தரே தலைமை ஸ்தானம் பெற்றிருக்கிறார்.

## அத்தியாயம் 9

## சமூக சீர்திருத்தவாதி.

ராஜாராம் மோகன்ராய் ஓர் பெரிய சீர்திருத்தவாதியாக இருந்தார். ஆனால் ஸ்வாமி தயானந்தர் இன்னும் பெரிய சம்பூர்ண சமூகசீர்திருத்தவாதியாக இருந்தார். வேத சாஸ்த்திரங்களின் உண்மைகளையே தயானந்தர் ப்ரசாரம் செய்துகொண்டிருந்தார். இதற்கு விரோதமாகயிருப்பதை அவர் ஒருபோதும் ஏற்றுக்கொள்வதில்லை. வேதமாது காலத்திலிருந்ததைப் போலவே இப்போதும் எல்லா சமூகங்களையும் செய்யவேண்டுமென்பதே அவரின் முக்கியக்கருத்தாகும்.

ஓர் சமூகத்தை நான்கு பாகங்களாக்கி அவைகளுக்கு வர்ணங்கள் என்ற பெயரையளித்தார். தற்காலத்திய எல்லா ஜாதிபாகுபாடுகளையும் ஒழித்தார். இந்திய நாடு சீர்குலைந்து போவதற்கு இச்சாதிபாகுபாடும் காரணமா யிருந்ததென்று தயானந்தர் கண்டார். ஜாதிபாகுபாட்டினால் சமநலமும் பொருமையும் அபிவிருத்தியடைந்து இந்து சமூகத்தின் பலத்தைக் குறைத்துவிட்டது. ஆகையால் இச்சாதிபாகுபாட்டை மறந்துவிட்டு பழங்காலத்திய வர்ணங்களை சரியாக கையாளும்படி இந்துக்களை தயானந்தர் வேண்டிக்கொண்டார். அவ்வர்ணங்களே பாதிக்கப்பட்ட காலத்திலே பிரிந்து தீண்டத்தகாதவர் என்ற நிலைவரையில் சமூகத்தைக் கொண்டுவந்துவிட்டது. இத்தீண்டத்தகாதவர்களுக்கு தயானந்தர் ஓர் உண்மைத் தோழனுயிருந்தார். தீண்டத்தகாதவர்களின்

முன்னேற்றத்திற்காகப் பாடுபட்டவர் முதல் முதல் இந்தியாவில் ஸ்வாமி தயானந்தரேயாகும்.

சுயநலம்படைத்த பண்டிதர்கள் அவர்களைக் கேவலமாக நடத்திவந்தனர். இதற்காக அவர்கள் யஜுர்வேதத்தின் 30 அத் ; 2 வது மந்திரத்தை ஆதாரமாகக்காட்டினர். அம் மந்திரத்திற்கு அவர்கள்—“ப்ராம்மணர்கள் கடவுளின் வாயிலே இருந்தும், க்ஷத்திரியர்கள் புஜங்களிலிருந்தும், வைஸ்யர்கள் தொடைகளிலிருந்தும், சூத்திரர்கள் பாதங்களிலிருந்தும் பிறந்தார்கள்” என்று அர்த்தம் சொல்கிறார்கள். பிறகு “எப்படி வாயானது புஜமாகவோ, தொடையாகவோ, பாதமாகவோ ஆகாதோ அப்படியே ப்ராம்மணர்கள் ஒருபோதும் மற்ற வர்ணத்தவர்களாக மாட்டார்கள். தப்பித்தவறி யாராவது ஒரு ப்ராம்மணர் முகம்மதியனின் ஆகாரத்தை சாப்பிட்டு விட்டால் அவனும் முகம்மதியனாகத்தான் ஆகிவிட்டான் என்று சொல்லிவந்தார்கள். இக்கெட்ட பழக்கத்தை நீக்க யாரும் துணிந்தவரில்லை.

ஸ்வாமி தயானந்தர், அவர்கள் சொல்லும் அர்த்தம் சுத்தத் தப்பிதமானதென்று சொல்கின்றார். ஏனென்றால் கடவுள் உருவமில்லாதவரானதினாலே அவருக்கு வாய், தொடை, பாதம் முதலியவைகள் கிடையாது. ஆகையால் அதன் உண்மையான அர்த்தம்—“சமூகத்திற்கு முகம் போன்றவர்கள் (தலைவர்கள்) ப்ராம்மணர்கள், புஜங்களில் பல பராக்கிரமம் உடையவர்கள் க்ஷத்திரியர்கள் ; தொடைகளின் பலத்தால் சதா பலவிடங்களுக்கும் சென்று வியாபார விருத்தியை செய்து கொண்டிருப்போர் வைஸ்யர்கள். சாதாரண தொ

ழில்களைச் (அடிமைத்தொழில்களை) ச் செய்து கொண்டிருப்போர் சூத்திரர்கள்" என்பதேயாகும். ப்ராம்மணப் பண்டிதர்களெல்லாம் பிறப்பிலிருந்தே ஜாதியை எண்ணத்துணிந்து— "ப்ராம்மணன் வயிற்றில் பிறந்தவன் எவ்வளவு தப்பிதங்கள் செய்திருந்த போதிலும் அவன் ப்ராம்மணனேயாகும். சூத்திரன் வயிற்றில் பிறந்தவன் எவ்வளவு நன்மைகள் செய்த போதிலும் அவன் சூத்திரனேயாகும்" என்று சொல்லிவந்தனர். இக்குருட்டுத்தனத்தைத் தயானந்தர் கண்டித்து மனிதர்களின் குணகர்மஸ்வபாவங்களிலிருந்தே வர்ணங்களை நிச்சயிக்கவேண்டுமென்று நிரூபித்தார் :—"ப்ராம்மணன் வயிற்றில் பிறந்தபோதிலும் கெட்ட காரியம் செய்வானேயானால் அவன் சண்டாளன் தான். சூத்திரன் வயிற்றில் பிறந்தவனாயினும் நல்லகாரியங்களைப் புரிவானாயின் அவன் ப்ராம்மணனாகவே நினைக்கப்படவேண்டும்" என்று தயானந்தர் சொல்லிவந்தார். அவரவர்களின் குணகர்மங்களையாராய்ந்து அவரவர்களை அந்தந்தக் கூட்டங்களில் சேர்க்கவேண்டும். இவ்விதி அனுசரிக்கப்படின் எல்லோரும் நன்னடத்தையாளர்களாகவேயிருப்பார்கள். ஏனென்றால் :—"ப்ராம்மணர்கள் தங்கள் குழந்தைகள் கெட்டகாரியங்களைப் புரிந்து சூத்திரர்களாய் விடாமலிருப்பதிலேயே கவனம் செலுத்துவார்களானதினால் எல்லா ப்ராம்மணக் குழந்தைகளும் சரியானபடி தங்களின் கடமைகளைச் செய்துகொண்டுவரும். தாழ்ந்த வர்ணத்தவர்களும் முறையே தங்களைவிட மேல் வர்ணத்தையடைய முயற்சித்து சதா நல்லகாரியங்களைப் புரிவதில் ஊக்கம் செலுத்திவருவார்கள். இதுவே தயானந்தர் மனிதர்களுக்குள்ளே கண்ட பிரிவினையாகும்.

ப்ராம்மண, க்ஷத்திரிய, வைஸ்ய வர்ணத்தவர்களுக்கு சூத்திரர்களே சமையல் வேலையைச்செய்து கொடுக்கவேண்டு மென்று தயானந்தர் சொல்கின்றார். இதிலிருந்து அவர் சூத்திரர்களை தீண்டத்தகாதவர்களென்று மதிக்க வில்லை யென்று தெரிகிறது. முதல் மூன்று வர்ணத்தவர்களும் அவரவர்களின் வேலைகளைச் செய்துகொண்டிருப்பதிலேயே எல்லா நேரத்தையும் செலவிடவேண்டு மாகையினாலே அவர் களின் சமையல் வேலைகளை சூத்திரர்களே செய்து கொடுக்க வேண்டும். சூத்திரர்களால் சமைத்தீவதை மற்றவர்கள் அருந்துவதினாலே தப்பு ஒன்றும் இல்லை. ஏனென்றால் சர்க் கரை, மாவு, காய் கறிகள், வெண்ணெ, பால் பழங்கள் முதலி யவைகளை சமைக்காமலே நாம் சாப்பிடுகின்றோம். அவை கள் முகம்மதியர்களாலும், கிருஸ்தவர்களாலும், சூத்திரர் களாலுமே தயார் செய்யப்பட்டவைகளாகும். ஆகையால் இவைகளைச் சாப்பிடுபவர்கள் எல்லோருடைய கைகளாலும் திண்டிய ஆகாரத்தையே சாப்பிடுகிறார்கள். ஆகையால் சூத்திரர்களால் சமைக்கப்பட்டதையும் மற்றவர்கள் தாராள மாகச் சாப்பிடலாம் என்பது தயானந்தரின் முடிவாகும். ஒரே மதத்தவர்களின் ஒழுக்கங்கள் ஒரே விதமாக ஆகும் வரை அம்மதம் முன்னேற்ற மடையாது. ஒருவரின் சுக துக்கங்களில் மற்றவர் கலந்துகொள்ளாதவரை அவர்களுக்குள் ஒற்றுமை ஏற்படாது. ஆகையால் தயானந்தர் நான்கு வர்ணத்தவர்களுக்கும் சமமாகவே கல்வியின் உரிமை இருக்க வேண்டுமெனச் சொல்கின்றார்.

அன்றி ஆண் பெண்களுக்கும் சம உரிமை அளிக்க வேண்டுமென்று சொல்கின்றார். மத்தியகால தன்னலப்

புரோகிதர்கள் "பெண்களும் சூத்திரர்களும் கல்வியைக் கற்கக் கூடாது" என்று சொல்லிவிட்டனர். இதனால் ஏற்பட்ட துன்பங்களை சென்ற அத்தியாயத்தில் ஆராய்ந்தோம். பெண்கள் ஆண்களுக்குச் சமமாக கல்வி கற்கலாம் என்பதற்கு ஆதாரமாக மனுவின் "புருடனும் மனைவியும் ஒன்றாகச் சேர்ந்து தினமும் வேதத்தைப் படிக்கவேண்டும். அவர்கள் மாணவ வயதிலே கற்றுக்கொண்டவைகளை அனுபவத்தில் அறியட்டும்" எனும் கருத்தடங்கிய ஸ்லோகத்தை தயானந்தர் காண்பிக்கின்றார்.

எட்டு விதங்களான கலியாணங்களிலும் பெண்ணும் புருடனும் மனமொருமித்துப் பெற்றோரறிய செய்து கொள்வதே உத்தமமணம் என்று தயானந்தர் சொல்கின்றார். குழந்தை மணங்கள் புரிவது தயானந்தரின் கருத்துக்கு விரோதமாகும். இக் கொடுமையுங் கூட நம் நாட்டின் அழிவிற்கு ஓர் காரணமாயிருந்ததென்று சொல்கின்றார். வெகு சீக்கிரத்தில் கலியாணம் செய்து கொள்ள விரும்பினால் பெண்ணின் வயது 16 ஆகவும் அதற்கு மேலும், புருடனின் வயது 25 ஆகவும் அதற்கு மேலாகவுமே இருக்கவேண்டுமென்று சொல்கின்றார். இவ்விதப் படியாக மணம் புரிந்துகொண்ட தம்பதிகளின் வீடுகளிலே சந்தோஷம் குடியிருக்குமென்பது தயானந்தரின் அபிப்பிராயமாகும். இது சம்பந்தமாக தயானந்தர் மனுவின் கீழ்வரும் கருத்துடைய கவியை அடிக்கடி எடுத்துக் காண்பிப்பது வழக்கம்—"புருடன் மனைவியுடனும்; மனைவி புருடனுடனும் பூர்ணதிருப்தியைப் பெற்று வாழ்ந்துவரு மில்லங்களிலேயே செல்வமும், அதிருஷ்டமும், சந்தோஷமும் விருத்தியாகும். ஆனால் அவர்கள் அதிருப்தியுடன் வாழுமிடங்களில்

துரதிர்ஷ்டமும், விசனமும், துக்கமுமே குடி கொண்டிருக்கும்."

"புருடன் மனைவியை நன்கு களிப்பிக்கச் செய்யா விட்டால் மனைவி சதா விசனத்துடனேயே வாழ்ந்திருப்பாள். அவ்வாறு மனைவி விசனத்துடன் வாழ்ந்துவருமில்லங்களில் சதா துக்கமே குடிகொண்டிருக்கும். புருடனால் சம்பூர்ண சந்தோஷத்தைப்பெற்று களிப்புடன் இருந்துவரும் பெண் வாழும் இல்லங்களில் சதா சந்தோஷமே வாசம் செய்துவரும்."

"பெண்கள் தங்களின் புருடன், தாய், தகப்பன், மைத்துனி, மைத்துனர், மாமன், மாமி முதலியவர்களால் நன்கு ஆதரிக்கப்படவேண்டும். என்றால் குடும்பத்தில் உள்ள எல்லோரும் பெண்களுக்கு வேண்டிய ஆடைஆபரண ஆகாராதிகளை அளித்து அவர்களை சந்தோஷமாகவே சதா வைத்திருக்கவேண்டும். செல்வத்தையோ, சந்தோஷத்தையோ பெற விரும்புபவர்கள் பெண்களை துன்புறுத்தக்கூடாது."

"பெண்கள் மரியாதையைப் பெறுமில்லங்களிலேயே பெரியோர்கள் பிறக்கிறார்கள். அவர்கள் மரியாதை பெறாத இல்லங்களில் செய்யப்படும் எல்லாக்காரியங்களும் பலனற்றவைகளேயாகும். தங்கள் புருடர்கள் செய்யும் கொடுமைகளை சகிக்கமுடியாது துஷ்டகாரியங்களைப் புரியத் துணிந்துவிடும் பெண்கள் வசிக்கும் குடும்பங்கள் சீக்கிரத்தில் அழிந்துவிடும். ஆனால் புருடர்களின் உதவியால் நற்காரியங்களைப் புரிந்துவரும் பெண்கள் வாழும் குடும்பங்களின் செல்வம் அபிவிருத்தியடைந்து வரும்."

புருடன்மனைவியரின் சம்பந்தமாய் தயானந்தரின் கட்டளை இவ்வளவேயாகும். பால்யமணங்களின் காரணமாய் அதிகரித்து இருக்கும் பால்யவிதவைகளின் துக்ககரமான நிலையைக்கண்டு தயானந்தர் ஆழ்ந்து சிந்திக்கலானார். விதவைகளையும் பெண்களாகவே மதித்து அவர்களின் துக்கங்களை விலக்கமுயற்சி யெடுத்துக் கொள்ளுமாறு பொதுஜனங்களை அவர் வேண்டிக்கொண்டார். சுத்தமான நடத்தையைக் கைக்கொண்டு வாழ்நாள் முழுவதும் மணம் இன்றி ப்ரம்மசர்யத்துடனேயே இருந்துவிடுவதாய் விதவைகள் விரும்பின் அது மிகமிக நல்லதே. ஆனால் தன் வாழ்நாள் முழுவதும் அப்படியே இருந்துவிட முடியாதென்று நினைக்கும் பால்ய விதவைகள் தகுந்த ஒரு புருடனுடன் மறுமணம் செய்துகொள்ளலாம் என்பது தயானந்தரின் கருத்து. சில குறிப்பிட்ட விதிகளுக்குட்பட்டு பால்யவிதவைகளின் மறுமணத்தைத் தயானந்தர் ஒப்புக்கொள்கின்றார். மணம் இல்லாமலே விதவைகள் தங்களின் விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ளத் துணிந்துவிடுதல் மகாபாபம். சிலகுறிப்பிட்ட இன்றியமையாக்காலங்களில் (நியோகத்) தற்காப்பு மணத்தையும் ஆதரிக்கின்றார். ஆனால் எல்லா மணங்களும் சமூகத்தின் தலைவர்களின் உத்திரவைப்பெற்று நடைபெறவேண்டும். தயானந்தரின் இக்கொள்கைகளை அநேக வைதிக இந்துக்கள் வெறுக்கலாம். அவர்கள் தயானந்தரை விரோதி என்றும் சொல்லலாம். ஆனாலும் சத்தியம் சத்தியமே.

இவ்வாறு அவரின் சகல கொள்கைகளுக்கும் வேதங்களில் ஆதாரமிருப்பதைக் கண்டிருக்கின்றாராகையினால் இவைகளைச்சொல்வதில் அவர் பயப்படுவதே இல்லை. அக்காலத்திலே

பெருந்தொகையான இந்துக்கள் தயானந்தரின் கொள்கைகளை ஒப்புக்கொள்ள முடியாமல் தவித்திருந்த போதிலும் இக்காலத்தில் எல்லோரும் அவரின் கொள்கைகளை சரியென்று ஒப்புக்கொள்ள வேண்டிய நிலை ஏற்பட்டிருக்கிறது. இப்போது அவரின் கொள்கைகளை குற்றமென்று சொல்வோர் வெகு சிலரே யாரும்.

பெற்றோரில்லாக் குழந்தைகளையும், அநாதரவான விதவைகளையும் காப்பாற்றுவதற்காக அநாதாலயங்களையும், விதவைகளின் பாதுகாப்பாலயங்களையும் திறந்து வைக்குமாறு பொது ஜனங்களை வேண்டிக் கொண்டார். இன்றேல் அநாதரவானவர்கள் அன்னிய மதங்களுக்குச் சென்று விடுவார்களென்றும் சொல்லி வந்தார்.

இந்துக்களின் ஜனத்தொகை நாளுக்கு நாள் குறைந்து கொண்டு வருவதையும், அதன் காரணத்தையும் தயானந்தர் அறிந்தார். அதைத் தடுப்பதற்காக பலவந்தமாகவோ, மோசமாகவோ அன்னிய மதங்களுக்குச் சென்று விட்டவர்களை மறுபடியும் இந்து சமூகத்திற் சேர்த்துக் கொள்ளவும், கிருஸ்தவர்கள், முகம்மதியர்கள் வருவதாயின் அவர்களையும் இந்து சமூகத்தில் சேர்த்துக் கொள்ளும்படியும் பொது ஜனங்களை வேண்டிக்கொண்டார். அவர் காலத்தில் சிலரே இதை ஒப்புக் கொண்டிருந்த போதிலும் இப்போது எல்லோரும் இதை ஒப்புக் கொள்கின்றார்கள். வருடா வருடம் நூற்றுக் கணக்காகவும், ஆயிரக் கணக்காகவும் சுத்திகள் சுத்தி சபாவின் ஆதரவில் நடை பெற்றுக் கொண்டு வருகிறது.

இவ்வாறான தயானந்தரின் சீர்திருத்தக் கொள்கைகளை இப்போது எல்லோரும் ஒப்புக் கொள்கிறார்கள். இந்து மதத்தின் அழிவைத் தடுத்து அதற்குப் புத்துயிரளித்து மேன்மையாக்கிய மஹரிஷி ஸ்வாமி தயானந்தரை யாரும் எக்காலத்தும் மறக்க முடியாது.



# அத்தியாயம் 10

## ராஜீய வேதாந்தி.

இந்திய சமூக காங்கிரஸ் (Indian National Congress) சபா பிறப்பதற்கு 2-வருடங்களுக்கு முன் 1883-ம் வருடத்தில் தயானந்தர் இறந்தார். ஆகையால் இவ்வத்தியாயத்தில் விவரித்திருக்கும் அவரின் ராஜீய தத்துவங்களை கவனித்து வாசிக்கவேண்டியதாகின்றது. ராஜீய சம்பந்தமாய் தயானந்தரின் கொள்கைகளைச் சொல்வதன் முன் சில பொது விஷயங்களைக் கவனிக்கவேண்டும். முதலில், அவர் மாதாகோவிலுக்கும் அரசாங்க சபைக்கும் வித்தியாசமில்லை என்கிறார். தற்காலம் இது சரியென்று ஒப்புக்கொள்ளப்படுவதில்லை. மதத்திற்கும் அரசாங்கத்திற்கும் ஒருவித சம்பந்தமுமில்லையென்று நாம் கேள்விப்படுகிறோம். அரசாங்கம் மதத்தின் பூர்ண சுதந்திரத்தில் தலையிடக்கூடாதென்பது கட்டுப்பாடு. 1858-ம் ஆண்டின் விக்டோரியா மகாராணியாரின் சாசனம்—"ஆங்கில அரசாங்கம் மதத்தின் உரிமைகளில் எப்போதும் தலையிடக்கூடாது—" என்று சொல்கின்றது. அன்றி தயானந்தர் பழயகால ஆர்ஷக்ரந்தங்களிலும் இவ்வுரிமை இருப்பதை காண்பிக்கின்றார். தயானந்தர் புதியதாக ஒன்றை கண்டுபிடிக்கவேயில்லை. இந்தியாவின் பழங்காலப்பெரியோர்கள் அநுசரித்து வந்த கொள்கைகளையே இப்போதும் அநுசரிக்கும்படி தயானந்தர் சொல்கின்றார். ஆகையால் அவரின் "சத்தியார்த்தப்பிரகாசம்" என்னும் நூலின் 6-வது அத்தியாயத்தில் சொல்லப்பட்டுள்ள அரசாங்க

சித்தாந்தங்களெல்லாம் மனு முதலான பெரியோர்களின் நூல்களிலிருந்தும், வேதம், மகாபாரதம் முதலியவைகளி லிருந்தும் திரட்டிச்சேர்க்கப் பட்டவைகளே யாகும்.

ஆர்ய சமாஜத்தின் சமூக, மத சம்பந்தமான நடவடிக் கைகள் எல்லாம் சத்யார்த்தப்ரகாசத்தின் 6-வது அத்தியா யத்தில் சொல்லியுள்ள விதிகளின்படியே ஏற்பட்டுள்ளன. லாலா லஜ்பதிராய் போன்ற அனேக ஆர்ய சமாஜிகள் ராஜீய சம்பந்த காரியங்களிலும் தலையிட்டுக் கொண்டிருந்தனர். சிலருக்கு இது வருத்தமாகவுமிருந்திருக்கலாம். மற்றும் சமாஜம் சிறிது பெருகிய காலத்திலே "ஆர்ய சமாஜம் புரட்சி இயக்கமோ?" என்ற சந்தேகத்தைத் தீர்த்துக்கொள்ள பல விதமான ரகசிய பரிசோதனைகளும் செய்யப்பட்டன. அர சாங்க உத்தியோகஸ்தர்கள் இதில் சேர்ந்தால் வேலைபோய் விடுமோ என்ற பயத்தால் தலைவிலேயே இருந்து இதை ஆதரித்து வந்தனர். ஓர்சமயம் சமாஜம் அரசாங்கத்திற்கு வெறுப்பாகவும் தென்பட்டது. அதனால் சமாஜத்தின் ப்ரசாரவேலைகளுக்கும் சில தடைகள் ஏற்பட்டன. ஆனாலும் சில முக்யமான சமாஜிகளால் அரசாங்கத்திற்கு "ஆர்ய சமாஜம் அரசாங்கத்திற்கு விரோதமானதல்ல" என்று நிரூ பிக்கப்பட்டது. அதன்மூலம் ஆர்யசமாஜத்திற்கு இன்னும் பலம் அதிகரித்தது.

## அவரின் தேசபக்தி

தயானந்தர் ஜனங்களுக்கு சிக்கனவாழ்வையும், நன் னடத்தைகளையும் கற்பித்தார். வேத சாஸ்திரங்களின்படி ஒவ்வொரு மனிதனும் அரசாங்கத்தினிடம் எப்படி நடந்து

கொள்ளவேண்டு மென்பதை சத்தியார்த்த ப்ரகாசத்திலே எழுதி இருக்கின்றார். அதை வாசித்துப்பார்த்தால் தயானந்தர் தன் தாய் நாட்டின் சமூக, மத, அரசாங்க சம்பந்தமான நிலைகளைசீர்திருத்த ஆவல்கொண்டிருந்த ஓர் தேசபக்தர் என விளங்கும். சமூகத்தில் உள்ள ஊழல்களே இந்திய அரசாங்கத்தப்பிதத்தின் காரணமாகும். இவ்வூழல்கள் நீங்காதவரை இந்தியா தன்னரசாங்கத்தையோ ஸ்வராஜ்யத்தையோ பெற முடியாது என்று அவர் அறிந்தார். முன்காலத்தில் தனக்கு நிகரில்லையென நின்றிருந்திய இந்தியா இன்று தன்னைப்போல் அடிமை கிடையாது என்று சொல்லும்படியான நிலைமையை அறிந்து தயானந்தர் விசனமடைந்தார். அவர்—“ சீக்கிரத்திலே ஆர்யர்கள் (இந்துக்கள்) தங்களின் பழக்கவழக்கங்களை சீர்திருத்திக்கொள்ளாவிட்டால் இன்னும் அவர்கள் அழிந்து கொண்டே போவது நிச்சயம். ஜாதிப்பிரிவு, மதப்பற்றில்லாமை, சுத்தமின்மை, கல்விக்குறைவு, பால்யமணம், காதலில்லாமணம் இவைகளே அன்னிய அரசாங்கம் இந்தியாவில் நிலைத்திருப்பதற்குக் காரணங்களாகும். சகோதரர்களுக்குள்ளே சண்டை உண்டாகும் காலத்திலேயே அன்னியர்களுக்கு இடம் கிடைக்கும். சுமார் ஐயாயிரம் வருடங்களுக்குமுன் நடந்த மகாபாரத யுத்தத்தின் காரணத்தை இந்துக்கள் மறந்துவிட்டனர். அந்த யுத்தத்திலே வீரர்கள் குதிரைகளின் மேலும் ரதங்களின்மேலும் இருந்து திரிந்துகொண்டே ஆகாரதிகளை அருந்தினார்கள். அக்காலத்தில் கௌரவ பாண்டவர்களுக்குள் ஏற்பட்ட விரோதமே இன்றும் தமக்குள் இருந்துவருகிறது. நம்மை இது விட்டுத்தான் விலகுமா அன்றி இப்படியே நம்மைக்கவிழ்த்து விடுமா என்று

யார் அறிவார் ?. இன்னும் ஆர்யர்கள் தங்களின் துஷ்ட முன்னேனாகிய துர்யோதனன் வழியையே பின்பற்றிவருகிறார்கள். கடவுள் நம்மை இக்கொடுங் குளத்திலிருந்து விலக்கு வாராக" என்று சொல்கின்றார்.

புராணக்கால பௌராணிகர்கள் அன்னியநாட்டுப் பிரயாணத்தால் ஆசாரம் கெட்டுவிடுமாதலால் யாரும் அந்நிய நாட்டிற்குச் சென்றுவரக்கூடா தென்றுசொல்லி அவ்வாறே புத்தகங்களையும் உண்டாக்கினார்கள். இக்கொள்கையும் இந்தியாவின் முன்னேற்றத்திற்கு ஓர் தடையாக இருந்தது. ஆனால் தயானந்தர்—"சக்கரவர்த்தியான தருமநந்தனர் ராஜசூய யாகம் செய்தகாலத்திலே தன் தம்பிமார்கள் நால்வரிடத்திலும் வரவேற்புப் பத்திரங்களையளித்து உலகத்தின் எல்லாபாகங்களுக்கும் அனுப்பிவைத்தார். அந்நியநாட்டிற்குப் போவது குற்றமாயிருந்திருந்தால் அவர்கள் அம்மாதிரி செய்திருக்கமாட்டார்கள். அரசாங்க சம்பந்தமாகவும், வியாபார சம்பந்தமாகவும் முன்காலத்திய இந்துப்பெரியோர்களெல்லாம் உலகத்தின் எல்லா பாகங்களுக்கும் சென்று வந்து கொண்டேயிருந்தனர். எந்நாட்டுமக்கள் உலகின் எல்லா பாகங்களுக்கும் சென்று அங்கங்குள்ள ஜனங்களின் நடையுடை பாவனைகளையும், வியாபார முறைமைகளையுமறிந்து தன்னுட்டையும் சீர்திருத்திக் கொள்ளாமலிருக்கின்றனரோ அந்நாட்டு மக்கள் சீக்கிரத்தில் தங்களின் எல்லா சுகங்களையும் இழந்துவிடுவது நிச்சயம். ஆகையால் அன்னிய நாட்டுப் பிரயாணத்தால் யாருக்கும் தோஷம் உண்டாகிவிடாது' என்று சொல்கின்றார். மக்கள் தங்களின் ஆசாரங்களில் பூர்ணதிடம் பெற்றவர்களாயிருப்பின் எந்நாட்டுக்குச் சென்றாலும் என்ன ? அன்றி அன்னியநாடு

களிலும் சென்று வியாபாரத்தைச் செய்யாத நாட்டின் பொருளாதாரநிலை அதிகப்பட வழியுண்டா? தன்னுடு வரை மாத்திரம் வியாபாரத்தைச் செய்துகொண்டு திருப்தியடைந்து விடும் நாடு சீக்கிரத்தில் தரித்திர தசையை அடையு மென் பதில் என்ன சந்தேகம்?

அடுத்தபடியாக புரோகிதர்களும் நம்நாட்டின் அழி விற்கு காரணமாயிருந்தார்கள்" என்று தயானந்தர் சொல்கின் ருர்—"இம்மூடர்கள் எல்லா சுதந்திரங்களையும், சந்தோஷங் களையும், செல்வத்தையும், ராஜீய அதிகாரத்தையும், கல்வியை யும் வெகுகாலபத்தில் கைவிட்டு விட்டார்கள். இப்போது சும்மா உட்கார்ந்துகொண்டு யாராவது வந்து தங்களின் பசி யை விலக்குவார்களா வென்று எதிர் பார்த்துக்கொண்டிருக் கின்றனர். ஆனுல் இனிமேலவர்களுக்கு இம்மாதிரியான உதவி கிடைக்கப்போவதில்லை. அவர்களே ஆர்யாவர்த்தத் தைத் தங்கள் சுயநல எண்ணங்களால் பாழாக்கிவிட்டவர்க ளாகும்.

## ராஜீய வேதாந்தம்

தயானந்தரின் தேசபக்தியைக் குறித்துச்சொன்ஞேம். அவரின் ராஜீயசம்பந்தமான கொள்கைகளை ஆராய்வோம். அவைகள் எல்லாமும் வேதங்கள், மனுநீதியின் 7-8-9-வது அத்தியாயங்கள், சுக்ரநீதி, விதுரப்ரஜாகர, ராஜதர்ம, ஆபத் தர்ம, மஹாபாரதத்தின் சில அத்தியாயங்களிலிருந்தும் தொ குக்கப்பட்டவைகளாகும். முன்காலத்திய அரசாங்கநிலையை நாம் அறியவேண்டுமானுல் நாம் இந்நூல்களைப் பார்க்க வேண்டும்.

ராஜசபை; மதச்சபை; கல்விச்சபை என்று மூன்று சபைகளின் மூலம்அரசாங்கம் நடைபெறவேண்டுமென்பது தயானந்தரின் கொள்கையாகும். இச்சபைகளுக்கு ஆதாரம் அதர்வ வேதத்தில் உண்டு என்று சொல்கின்றார். இச்சபைகள் ஒன்றாகக் கலந்தே அரசாங்கத்தை நடத்தவேண்டும். "தனிப்பட்ட எந்த மனிதனுக்கும் எல்லா விதமானவைகளிலும் பூர்ண உரிமை இருக்கலாகாது. மூன்று சபைகள் ஒன்றுக் கொன்று ஆதாரவாகவும், இம்மூன்றுக்கும் தலைவாக அரசனும் இருந்து வரவேண்டும், சபைகளும், அரசனும் குடிகளின் வசத்திலிருக்கவேண்டும். குடிகள் சபைகளின் கூட்டங்களுக்குக் கட்டுப் பட்டு இருக்கவேண்டும்—" என்பது தயானந்தரின் கொள்கை. பூர்ண உரிமை பெற்ற அரசனால் எவ்வளவு கெடுதல்கள் உண்டாகக் கூடுமென்பதையும் சதபத ப்ராம்மணத்தைக்கொண்டு விளக்குகிறார்.—"புலியானது ஆட்டின் மேல் பாய்ந்து கொல்வதைப் போலவே பூர்ண உரிமைகளைப் பெற்ற அரசன் குடிகளைக் கொன்று விடுகின்றான். தனிப்பட்ட ஒருவ னின் ஆட்சி ஆட்சியாகாது. அவ்வாட்சியில் ஒருவரும் சுகத்துடன் வாழ முடியாது—" என்பது சதபத பிராமணத்தின் கருத்து.

"அரசன் என்பவன் ஓர் தலைமை நீதிபதியாகும். மின்சாரத்தைப் போன்ற சக்தி பெற்றவனும், தன்னுயிரைப் போல் மன்னுயிரை நினைப்பவனும், மற்றவர்களின் எண்ணங்களை சுலபத்தில் அறிந்து கொள்ளக்கூடியவனும், சத்திய மான நியாய பரிபாலனத்தை யுடையவனுமே அரசபதவிக்கு ஏற்றவனுவான். அவன் ஜனங்களுக்குக் கல்வியை அளிக்க வேண்டும். ஜனங்களுக்கு நியாயத்தையும், நன்னடத்தையை

யும் காண்பித்து அவர்களைத் தீயபழக்கங்களிலிருந்தும் நீக்க வேண்டும். துஷ்டர்களுக்கு நெருப்பைப் போலும், நல்லவர்களுக்குத் தென்றல்போலவு மிருந்து தன் நாட்டின் பொருளாதார நிலையைவிருத்தியடையச்செய்து, சூர்யனைப் போன்று நியாயத்தைச் செலுத்தி, குடிகளுக்கு பயம் சிறிதும் இல்லாதபடி விலக்கி, எதிரிகளால் ஜெயிக்க முடியாதபடி சேனைகளைக் கொண்டும் அரசன் ஆட்சி புரிந்து வரவேண்டும்" என்பது மனுவின் அரச லக்ஷணங்களாகும். "ஆகையால்; கல்வியும், பெரியோர் நட்பும், நன்னடத்தையும் இல்லாதவன் அரசனுயிருக்கக்கூடாது" என்று தயானந்தர் சொல்கின்றார்.

இதற்கு மேல் சட்டநியமனத்தைச் சொல்லும் போது தயானந்தர் "அரசனும் சட்டத்திற்குட்பட்டே நடக்கவேண்டும்" என்று சொல்கின்றார். மனு—: சட்டமே உண்மை அரசன். சட்டத்தை மீறுபவனே கொடுங்கோல் மன்னன். சட்டமென்பது நான்கு வருணத்தவர்களையும் அவரவர்களின் கடமைகளினின்றும் தவாமல் இருக்கச்செய்யும் ஓர் உத்திரவாகும். சட்டமே மனிதர்களைக் காப்பாற்றும் ராஜப்ரதிநிதி. சட்டமே மக்களைக் காப்பாற்றும். எல்லோரும் ஆழ்ந்து தூங்கும் போதும் சட்டம் விழித்துக்கொண்டே யிருக்கும். ஆகையால் அறிவாளிகள் சட்டத்தையே தங்களின் தர்மமாகக்காண்கிறார்கள். சட்டம் சரிவர பரிபாலிக்கப்படின் எல்லோரும் சந்தோஷமே அடைகிறார்கள். குற்றமாக பரிபாலிக்கப்படின் எல்லோரும் துக்கத்தையே அடைகிறார்கள். சட்டம் சரிவர பாலிக்கப்படாவிடின் அரசனையும் அது அழித்து விடும், நான்கு வர்ணத்தவர்களையும் கெடுத்துவிடும், எல்லா நியாயமும் முடிவையடையும், சட்டம் சரியாக பரிபாலிக்கப்

படாவிடின் எல்லாமுமே அழிவையடையும்" என்று சொல்வதை தயானந்தர் ஒப்புக்கொள்கின்றார்.

ஜனங்கள் சுகசந்தோஷமாக இருக்கவேண்டுமானால் சட்டசபையின் உத்திரவுக்குக் கீழ்ப்படிந்து நடந்துகொள்ள வேண்டும். "ரிக்வேத, யஜுர்வேத, சாமவேத அறிவாளிகள் மூவர்கூடிய சட்டசபையின் சட்டங்களை எல்லோரும் ஒப்புக்கொண்டு நடக்கவேண்டும்" என்று தயானந்தர் சொல்கின்றார். எல்லா சபைகளும் நல்லோர்களாலும், சத்தியவாதிகளாலும், மரியாதையுடையவர்களாலும், தியாகிகளாலும், சாஸ்த்திரங்களை அறிந்தவர்களாலும் பரிபாலிக்கப்படவேண்டும். "ஆகையால் முட்டாள்களை எந்தச் சபைக்கும் அங்கத்தினர்களாகச் செய்யக்கூடாது." மனு :—"முட்டாள்களாலும், வேதமறியாதவர்களாலும், உண்டாக்கப்பட்ட சட்டங்களுக்கு யாரும் கீழ்ப்படியவேண்டியதில்லை. அவைகளுக்குக் கீழ்ப்படிவோர் அனேக துன்பங்களுக் குள்ளாவார்கள்" என்று சொல்கின்றார். தயானந்தர் "வேதசாஸ்த்திரங்களை அறியாதவர்கள் எப்போதும் அரசன் மந்திரி, மற்றஎவ்வரசாங்க உத்யோகத்தையும் வகிக்கக்கூடாது அவர்களால் உண்டாக்கப்பட்ட சட்டங்களை யாரும் அனுமதிக்கக்கூடாது" என்று சொல்கின்றார்.

மனுமுதலாகிய பழங்கால சட்டநூல்களினாதாரங்கொண்டு தயானந்தர் அரசபதவியை வகிக்கத் தகுந்தவர்களுடைய லக்ஷணங்களையும் விளக்கிச் சொல்கின்றார். அவைகளின் ஆதாரங்கொண்டே தூதுவர், சேனாதிபதிகள், ந்யாயவாதிகள் முதலியவர்களின் லக்ஷணங்களையும் விளக்கிச் சொல்கின்றார்.

அரசாங்க சபையைக் குறித்துச் சொல்லும்போது மனு வின் ஆதாரங்கொண்டு—"சொந்தஊரைச் சேர்ந்தவர்கள்; நன்னடைத்தையுள்ளவர்கள்; வேதசாஸ்த்திர நிபுணர்கள், தைரிய வீரர்கள், நியாயவாதிகள், அறிவாளிகளின் குடும்பங்களிலுண்டானவர்களான ஏழு அல்லது எட்டுப்பேர்கள் மந்திரிகளுடன் அரசன் தலைவனாக இருந்து காரியங்களை நடத்த வேண்டும்" என்று சொல்கின்றார். மனு—"ஓர் காரியம் தன்வரையில் மிக எளியதேயாயினும் செய்பவனின் தனிமையால் அது கடினமானதாகத் தெரியப்படுகின்றது. ஆகையால் அரசாங்கத்தை ஓர் தனிப்பட்ட மனிதனின் வசத்தில் ஒப்புவிக்கக்கூடாது. ஒப்புவித்தால் அவ்வரசாங்கத்திற்குட்பட்ட எல்லா தேசங்களும் வெகு எளிதில் அழிக்கப்படும்" என்று சொல்கின்றார். அரசன் எல்லா காரியங்களையும் தன் மந்திரிகளுடன் கலந்தாலோசித்து அவர்களின் சம்மதியையும் பெற்றே செய்யவேண்டும். சமாதானம், சண்டை, எதிர்ப்பு, தாழ்வு, முதலிய எல்லா விஷயங்களிலும் அதிகப்படியானவர்களின் அபிப்பிராயத்தைத் தழுவியே நடந்து கொள்ள வேண்டும்.

இதன் பிறகு வரிவசூல் சம்பந்தமாய் எவ்வளவு வரியை எவ்விதமாக வசூல் செய்யவேண்டுமென்பதையும் தயானந்தர் சொல்கின்றார். மற்ற உத்தியோகஸ்தர்கள் அவரவர்களின் காரியங்களைச் சரிவரச் செய்கின்றார்களாவென்று அரசன் நம்பிக்கையான சில அந்தரங்க தூதுவர்களின் சகாயத்துடன் சதா கவனித்து வரவேண்டும். சேனைகளுக்கு எவ்வாறு பயிற்சியளிக்க வேண்டும், அன்னிய தேசங்களை எவ்வாறு ஜெயிக்கவேண்டும், சேனைகளை எவ்வாறு அணிவகுக்க

வேண்டும், எதிரிகளின் நடத்தைகளை எவ்வாறு அறிவது முத லாகிய விஷயங்களையும் தயானந்தர் தெரிவிக்கின்றார். சாக்ஷி களின் உண்மையை அறியும் வழியையும் விளக்குகின்றார்.

நியாயச் சம்பந்தமாய்—"புரட்சி, திருட்டு, கொலை, விய பசாரம் முதலிய குற்றங்களுக்கு சரியான சாக்ஷிகள் கிடைக்க மாட்டார்களாகையினால் நியாயாதிபதி நீண்ட விசாரணை இல் லாமல் இவைகளுக்குத் தீர்ப்பளித்து விடக்கூடாது". என்று சொல்கின்றார். மனு—நியாயாதிபதிகளே! உங்கள் எல் லோருக்குள்ளும் மாறா நிலையான நியாயத்தை உடைய ஒரு வன் இருந்து உங்களின் நியாயத்தீர்ப்பை கவனித்து வரு கின்றான் என்பதை உணர்ந்து சரியானபடி உங்கள் மனச் சாக்ஷிக்கு விரோதமின்றி தீர்ப்பையளிப்பீர்களாக" என்று சொல்கிறார். "நியாயம் அநியாயத்தாலும், மெய் பொய்யா லும் ஜெயிக்கப்படும் நியாயஸ்தலங்களிலுள்ள நியாயாதிபதி முதலனைவரும் இறந்தவர்களுக்குச் சமமாகும். நியாயத்தைக் கொல்பவன் அந்நியாயத்தால் கொல்லப்படுவான், நியாயத் தைக் காப்பாற்றுபவன் அந்நியாயத்தால் காப்பாற்றப்படு வான், ஆகையால் எம்மனிதனும் நியாயவிரோதத்தைச் செய் யாமலிருப்பானாக. நியாயத்தை விரோதிப்பவர்களை அறிவாளி கள் மிகவும் கடையர்களாக மதிக்கின்றார்கள். ஆகையால் ஒருவரும் நியாயத்தை விரோதிக்கக் கூடாது. இறப்பின் பிறகு மனிதனைத் தொடர்ந்து வரக்கூடியது நியாயம் ஒன்றே. மற்றெல்லாமும் சரீரத்துடனேயே நின்று விடுகிறது. நியா யம் தன்னைச் சரியாக காப்பாற்றும் மனிதனை எப்போதும் காப்பாற்றாமல் கைவிட்டு விடுவதில்லை".

யாயத்தை விரோதிக்கும் அரசனும் அரசாங்கத்தார் கூட தண்டிக்கப் படவேண்டுமோ ? அவர்களும் தண்டிக் _ால் தண்டனையின் அளவு என்ன ? என்னும் கேள்விகளுக்கு தயானந்தர் —“ மனிதர்களால் மரி யளிக்கப்படாதவரை அரசன் ஒருவனுமில்லை. அரசன் குற்றங்களுக்குத்தக்க தண்டனையை ஏற்றுக்கொள்ள யென்றால் மற்றவர்கள் ஏன் அவனின் தண்டனையை கொள்ளவேண்டும் ? அன்றி மற்ற அரசாங்கத்தார் லாம் அரசனை தண்டிக்கத்தான் வேண்டும் என்று தீர் கால் அரசன் தனியாக அத்தண்டனையிலிருந்து எப்படி றுக் கொள்ளமுடியும் ? அரசனும் அரசாங்கத்தவர் ியாயத்திற்குக்கட்டுப் படவில்லையென்றால் அவர்கள் ரும் சீக்கிரத்தில் குடிகளால் நாசமாக்கப்படுவர். கத்தார்களுக்கு அளிக்கப்படவேண்டிய தண்டனையின் க்குறித்து மனு—“ சாதாரணமனிதனுக்கு 1 அணு ம் விதிக்கும் குற்றத்திற்கு அரசனுக்கு 1000அணுக் பாதம் விதிக்கவேண்டும். என்றால் சாதாரணமனி ளிக்கப்படும் தண்டனையைப்போல் ஆயிரம் மடங்கு ான தண்டனையை அரசனுக்கும், 800மடங்கு அதிகமாக ன் மந்திரிக்கும், 700மடங்கு அதிகமாக மந்திரிக்கு உத்தியோகஸ்தனுக்கும், அதற்கும் கீழ்பட்டவர் முறையே 600 மடங்காகவும் அளிக்கப் படவேண்டும். நகரபாதுகாப்பாளனுக்குங்கூட (constable) 8மடங் _னை அளிக்கப்படவேண்டும். இவ்வாறு அளிக்கப்படா சாதாரணமனிதர்கள் அதிகமான குற்றங்களைப்புரிய ந்துவிடுவார்கள்.” என்று விடையளிக்கின்றார்.

பழங்கால ஆரியர்களின் அரசாங்கம் சரியானதாயிருந்ததா இல்லையா? தயானந்தர் இதற்கு முன்னதான விடையையே அளிக்கின்றார். மனு—"ஆட்சிபுரிவனுக்கும், புரியப்படுபவர்களுக்கும் சதா நன்மையையே பயக்கக்கூடிய சட்டங்களையே சட்டசபைகள் ஏற்படுத்தவேண்டும்" என்று சொல்வதை இங்கு எடுத்துக்காட்டுகின்றார். அரசாங்க சம்பந்தமாய் அவர் எழுதியுள்ள அத்தியாயத்தின் முடிவில் கடவுளை நோக்கி—"தங்கள் அரசாங்கமும், அரசாங்கத்தவர்களும் உன்னருளால் சுகமே வதிவோமாக, நாங்கள் எப்போதும் நியாயவரம்பினின்றும் மீறாமலிருப்போமாக—" என்று ப்ரார்த்திக்கின்றார்.

இதுவே தயானந்தரின் அரசாங்க நியாயமாகும். ஆனால் தற்காலம் தன்னலத்தையே கவனிக்குமரசாங்கங்கள் இக்கொள்கைகளில் சிலதை தப்பிதமானதாக எண்ணுகின்றது. ஆனாலும் இக்கொள்கைகளின்படி ஒழுகிவரும் அரசாங்கங்களின் நிலையைக்கண்டு இதுவே சரியான அரசாங்கம் என்று நாம் தீர்மானிக்கின்றோம். மற்ற ராஜீயவாதிகளைப் போலன்றி தயானந்தர் நம்முன்னோர்களின் அரசாங்கநிலையை நமக்கெடுத்துக் காண்பித்துவிட்டார். இதற்காக நாம் அவருக்கு நன்றி செலுத்துவோமாக.



# அத்தியாயம் 11

## மத சீர்திருத்த வாதி.

மற்ற எல்லாத் துறைகளைக்காட்டிலும் மதம் எனும் துறையிலேயே தயானந்தரின் சீர்திருத்தக் கொள்கைகள் முழுவதும் அடங்கியதென்று அனேகர் சொல்கிறார்கள். 1864 வரை அவர் ஓர் சைவராக இருந்தார். ஆனால் அனேக ஆண்டுகளுக்கு முன்பே உருவ வழிபாட்டை விட்டுவிட்டார். பிறகு அவர் மேலும் கல்வி கற்றுவரும் காலத்தில் அக்காலத்திய பழக்கத்திலிருந்துவந்த சனாதன தர்மமென்ற பொய்ப் பெயரைத் தரித்திருந்த பௌராணிக மதம் மிக மிகக் குற்ற மானதென்று கண்டார். அதை சீர்திருத்த வேண்டுமென்பதே தயானந்தரின் விருப்பமன்றி ஓர் புதிய மதத்தை ஸ்தாபிக்கவேண்டுமென்பது அவரின் விருப்பமல்ல. ஆதிகாலத்தின் வேதமதத்தையே சரியானபடி ஸ்தாபிக்க வேண்டி தயானந்தர் வேலை செய்தார். தன் குருநாதனின் உத்திரவுப்படி சத்தியமான வேதமதத்தை வேதத்தினாதாரங்கொண்டே ப்ரசாரம் செய்து வந்தார். பாகவதம், புராணங்கள், தந்திரங்கள் இவைகள் எல்லாம் பொய் நூல்களென்று விலக்கி விட்டார். உலகத்தில் உள்ள எல்லா மதங்களின் சித்தாந்தங்களையும் சோதித்து கூடியவரை அவ்வவைகளில் இருந்த குற்றங்களை எடுத்துக் காண்பித்தார்.

வேதமே கடவுளால் உண்டாக்கப்பட்டதும் மனிதசமூக சம்மதமுமான நூல் என்று கண்ட தயானந்தர் அதினின்

ஆதாரங்கொண்டு கடவுள் உருவமில்லாதவரானதாலே அவர் அவதாரம் எடுப்பதென்பது பொய். இறந்த ஆத்மாவுக்கும் பூவுலகிற்கும் சம்பந்தமில்லையாதலால் திவசம் செய்வது தப்பிதம். கடவுள், ஜீவன், ப்ரக்ருதி மூன்றும் நித்யமானவைகள். பேய்பிசாசுக்கள் பொய்த்தோற்றம். வர்ணங்கள் குணத்தாலேயே. மனிதர்களுக்குள்ளே ஜாதிபேதம் கிடையாது. பிறப்பினால் யாரும் உயர்ந்தவரில்லை என்று சொல்கின்றார்.

இக்கொள்கைகள் அக்காலத்திலிருந்த சில சுயநல பிராமணர்களுக்கு விரோதமாகக் காணப்பட அவர்கள் தயானந்தரை வாய்வந்தவாறு திட்டினர். ராவ் கான் சிங் என்பவர் தயானந்தரைக் கொல்ல முயற்சித்துத் தோல்வியடைந்து ஜயப்பூர் அரசனால் அவமானிக்கப்பட்டார். தயானந்தர் தன் கொள்கைகளைப் பரப்ப பொதுஜனங்களின் உதவியை நாடினார். வேதத்திற்கு தயானந்தர் இலக்கண விதிப்படி செய்யும் பொருளுக்கும், அவருக்கு முன்னால் இருந்த ப்ராம்மணர்கள் செய்த பொருளுக்கும் வித்தியாசமிருந்ததினாலேயே ப்ராம்மணர்கள் தயானந்தரைத் திட்ட ஆரம்பித்தனர். இந்து வென்ற பெயரை நீக்கி தயானந்தர் "ஆர்யா" என்ற பழம் பெயரை வைத்தார். ஏனென்றால் முன்னது எந்த நூல்களிலும் காணப்படவில்லை, பின்னது எல்லா நூல்களிலும் காணப்படுகிறது.

உருவ வழிபாட்டை தடுப்பதை மாத்திரம் விட்டுவிட்டால் அவருக்கு வேண்டிய உதவிகளைச் செய்வதாக அநேகர் வாக்களித்தனர். ஆனால் தயானந்தர் அதை விட்டுவிட மறுத்து

விட்டார். தயானந்தரின் கல்வியைக்குறித்து உள்ளுக்குள்ளிருந்த சந்தோஷமடைந்த பண்டிதர்களெல்லாம் மேலுக்கு மாத்திரம் தயானந்தர் உருவவழிபாட்டைக் கண்டிப்பதை வெறுப்பதாகக் காட்டி வந்தனர். அவரின் முழுக்கொள்கைகளையும் அமைத்து முதன்முதலாக பம்பாயில் 1875-ல் ஆரம்பித்த ஆர்ய சமாஜத்தின் கொள்கைகள் கீழ்வரும் 10 ஆகும் :—

1. கடவுளே எல்லா மெய்யறிவுக்கும் அறிவால் அறியப்படுகின்ற வஸ்துக்களுக்கும், மூலகாரணர்.

2. ஈஸ்வரன் ஸச்சிதானந்த ஸ்வரூபர், ரூபமற்றவர், எல்லா சக்தியும் வாய்ந்தவர், நியாயத்தைச் செய்பவர், தயாளு, பிறப்பற்றவர், இறப்பற்றவர், மாறுதலற்றவர், ஆதியற்றவர், ஒப்பற்றவர், எல்லாவற்றிற்கும் ஆதாரமாயிருப்பவர், எல்லோரையும் ஆள்பவர், எங்கும் நிறைந்தவர், எல்லாவற்றையும் அறிந்தவர், மூப்பற்றவர், அழிவில்லாதவர், பயமற்றவர், எக்காலத்துமிருப்பவர், பரிசுத்தர், உலகத்தைப் படைத்தவர். நாம் அவர் ஒருவரையே பூஜிக்கவேண்டும்.

3. வேதமே மெய்யறிவிற்கெல்லாம் நூலாகும். வேதத்தைக் கற்றலும், கற்பித்தலும், கேட்டலும், பிறருக்குச் சொல்லுதலும், ஒவ்வொரு ஆரியருடைய முக்கிய கடமை.

4. நாம் எப்பொழுதும், கண்டுகொண்டவுடன், உண்மையைக் கைக் கொள்ளவும், பொய்யை விட்டுவிடவும் தயாராக யிருக்கவேண்டும்.

5. நாம் எல்லாக் காரியங்களையும், தர்மத்திற்கு அனுகூலமாகவே செய்யவேண்டும். அதாவது, சரியா தவறு என்பதை நன்றாக ஆலோசித்தபின்பே செய்யவேண்டும்.

6. உலகத்திற்கு உபகாரம் செய்வதே இந்த சமாஜத்தின் முக்கிய கருத்து. அதாவது தேக சம்பந்தமாயும், ஆத்ம சம்பந்தமாயும், சமூக சம்பந்தமாயும் மேன்மையைச் செய்ய வேண்டும்.

7. எல்லோரிடத்திலும் அன்போடும், நியாயத்தோடும், தகுந்த மரியாதையோடும், நடந்துகொள்ளவேண்டும்.

8. அறியாமையை ஒழித்து அறிவைப்பரவச் செய்ய வேண்டும்.

9. ஒருவரும் தனது மேன்மையோடு திருப்தியடையக் கூடாது. ஆனால், எல்லோருடைய மேன்மையிலேயே தனது மேன்மையைக் கருத வேண்டும்.

10. எல்லோருடைய நன்மையைக் கருதும் சமூக சம்பந்தமான கொள்கைகளை, எல்லோரும் ஒப்புக்கொண்டு கட்டுப்பட்டு நடக்க வேண்டும். ஆனால், தனது நன்மை மாத்திரம் சம்பந்தப்பட்ட காரியங்களில், தன்னிஷ்டப்படி நடந்து கொள்ளலாம்.

யாராயிருந்தாலும் முன் சொன்ன கொள்கைகளை ஒப்புக் கொள்வதாயின் ஜாதிபேதங்களை மறந்து ஆர்யசமாஜத்தில் அங்கத்தினராக சேரலாம். பெண்களுக்காக தனிப்பட்ட சமாஜங்கள் ஸ்தாபிக்கப்பட்டன. சிறிய கிராமங்களிலே

ந்து பெரிய பட்டணங்கள்வரையுள்ள எல்லாவிடங்களி ் இப்போது ஆர்ய சமாஜம் இருக்கிறது. ஆர்ய சமாஜங் ின் தொகை வெகு அதிகம். பஞ்சாப், ஐக்யமாகாணம், ்ரா முதலியவிடங்களில் அநேகமாக ஊர் முழுவதுமே ்ய சமாஜம் என்று சொல்லவேண்டிய நிலையில் இருக்கிறது.

சமாஜத்தின் 10 கொள்கைகளும் மிகச் சுலபமானதே. ்த ஒப்புக்கொள்ளும் யாரும் இதில் அங்கத்தினராகச் ்ரலாம். இதற்கு சந்தா மாதவருமானத்தில் 100-க்கு ந பங்காகும். வருடத்திற்கொருமுறை சம்மதக்கூட்டம் ்டபெறும். அதில் 11 மாதங்களில் விடாது சந்தா செலுத் ்ய அங்கத்தினர்கள் மாத்திரம் சேர்த்துக்கொள்ளப்படுவார் ர். சமாஜத்திலே ஓர் தலைவர், ஒன்றல்லதிரண்டு உபத் ்லவர்கள், ஒரு காரியதரிசி, ஒன்றல்லதிரண்டு உபகாரிய ்சிகள், ஓர் பொக்கிஷதாரி, ஓர் பார்வையாளர், ஓர் புத்தகச் ்கத்தார் முதலியவர்கள் இருப்பார்கள். இவர்களுடன் ன்னும் அந்தரங்க சபையைச்சேர்ந்த சில அங்கத்தினர்களு னும் சமாஜவேலைகள் நடைபெற்றுவரும். ஒவ்வொரு ்யிற்றுக்கிழமையும் சமாஜத்தின் பொதுக்கூட்டம் நடை ்றும். காரியநிகழ்ச்சி :— ஹவனம், ப்ரார்த்தனை, பஜனை, பதோபதேசம், ப்ரசங்கம், தர்க்கம், சாந்திபாடம் ஆகும்.

ஒவ்வொரு கிளைசமாஜமும் அதனதன் அங்கத்தினர் ரின் தொகையில் 20 பேர்களுக்கொருவராக ப்ரதிநிதிகளைத் தர்ந்தெடுத்து ப்ராந்திக் ஆர்ய ப்ரதிநிதி சபாவுக்கு அனுப்பு றது. இச்சபை வருடத்திற்கொருமுறையும், இன்றியமை ்த சந்தர்ப்பங்களேற்படின் வருடத்தில் 2 - 3 முறையும்

கூடுகிறது. இச்சபையில் ஒரு தலைவரும், ஒன்றல்லதிரண்டு உபதலைவர்களும், ஒரு காரியதரிசியும், இரண்டல்லது அதிகமான உபக் காரியதரிசிகளும், ஓர் பொக்கிஷதாரியும், ஓர் நிர்வாகஸ்தரும், ஓர் தொழிற்கவனிப்பாளரும், மற்றும் ப்ரசாரகர்த்தருமிருப்பார்கள்.

இம்மாதிரியான சபைகளுக்கெல்லாம் மேலாக சார்வதேசிக சபா என்ற சபையுண்டு. இதில் எல்லா மாகாணப் பிரதிநிதிகளும் அங்கத்தினர்களாக இருப்பார்கள்.

ஆர்ய சமாஜத்தின் வேலை மத-சமூக-சீர்திருத்தம். அரசாங்கத்தில் இது கொஞ்சமும் கலந்து கொள்வதில்லை. ஆர்யர்களின் அரசாங்கத்தைக் குறித்து சத்தியார்த்தப்பிரகாசம் ஆறுவது அத்தியாயத்தில் விளக்கி இருக்கின்றது.

மதசம்பந்தமாய் ஆர்ய சமாஜம் பழங்கால சம்ஸ்கிருத நூல்களாகிய வேதம், சாஸ்திரம், உபநிஷத்து முதலியவைகளின் கல்வியை அபிவிருத்தி செய்கிறது. இம்முறையான வேலைக்கு "வேதப்பிரசாரம்" என்ற பெயரிருந்த போதிலும் ஆர்யர்களில் சிலரே முழு வேதத்தையும் அறிந்திருக்கின்றனர். ஆர்ய சமாஜத்தின் 10 கொள்கைகளில் "ஒவ்வொரு ஆர்யரும் தினமும் வேதத்தை வாசிக்க வேண்டும்" என்பதும் ஒன்றாகும். தயானந்தர் கண்டளித்த வேதம் எனும் அஸ்திவாரத்தின் மேலேயே சமாஜமெனும் கட்டடம் கட்டப் பட்டிருக்கிறது. அநேக ஆர்யர்கள் முழு வேதத்தையும் கற்கமுடியாதென்றறிந்து "சத்தியார்த்தப் பிரகாசம்" ஒன்றே போதும் என்று அதையே நித்தமும் கற்கின்றனர். உலக ஸ்ருஷ்டி-

யின்ஆரம்பத்திலே கடவுள் தன் ஞானத்தை நான்கு வேதங்களாக அக்னி, வாயு, ஆதித்யர், அங்கிராயெனும் நான்கு ரிஷிகளுக்குக் கொடுக்க அதைப்பெற்ற அவர்கள் முறையே ரிக், யஜுர், சாம, அதர்வ வேதங்களை உண்டாக்கினார்கள். ஸ்வாமி தயானந்தர் வேதமே தெய்வீக சம்பந்தத்தாலுண்டான நூல், மனிதசமூக ஆதார அறிக்கை என்று சொன்னதை சிலர் ஆக்ஷேபித்து வந்தார்கள். ஆயினுங்கூட அவர்களும் வேதத்திலேயே முக்கிய மான படிப்பினைகளெல்லாம் அடங்கியிருக்கின்றதென ஒப்புக் கொள்கின்றனர்.

வேதத்திற்குப் பிறகு தயானந்தர் உருவமிலா ஒரே கடவுளின் வழிபாட்டைக் குறித்துச் சொல்கின்றார். அவதாரங்கள் என்பது கட்டுக்கதையென்று தயானந்தர் விளக்கி உருவ வழிபாட்டைக் கண்டித்துவந்தார். இக்கண்டனைகளால் சில சமயங்களில் சில இந்து அரசர்களின் கோபத்திற்கும் உள்ளாகியிருக்கின்றார். ஆனாலும் அஞ்சாது தன் வேலைகளைத் தொடர்ந்து செய்துகொண்டே போனார். ஆர்யசமாஜமும் தயானந்தரின் கொள்கைகளை இந்துக்களுக்கு எடுத்துச் சொல்லி சந்தேகங்களை விலக்கிக் கொண்டுவருகின்றது. ஆரியர்களுக்குள்ளே மிகுந்த ஒற்றுமையும், அன்பும் மலிந்துகிடப்பதை நாம் காண்கின்றோம். அவர்களின் முயற்சி, தாராளகுணம் மெச்சத்தகுந்ததேயாகும்.

இந்துக்களை வேதமதத்தைச் சரியானபடி தழுவச்செய்ய வேண்டுமென்பதே தயானந்தரின் விருப்பமாகும். ஆனாலும் அவர் முழுவெற்றியை அடைவதன் முன் உயிர் துறந்துவிட்டார். தயானந்தர் தன் வேலைகளை ஆரம்பித்த சில மாதங்களி

லேயே அவரின் கொள்கைகளைத் தழுவி சுத்தியடைந்தவர்கள் அனேகம் பேர். உலக மனித சமூகத்தில் வேதமதத்தை ஊன்றச் செய்து உலகமுழுவதும் வேதமதத்தையே நிலைக்கச்செய்யவேண்டுமென்பதே இவர்களின் கருத்தாகும். தயானந்தர் இறந்த பிறகுங்கூட ஆர்யர்கள் அவரைப்போலவே விடாமுயற்சிகொண்டு உழைத்துவரலாயினர். தயானந்தரின் கொள்கைகளை தற்காலம் கோடிக் கணக்கானவர்கள் தழுவியிருப்பதின் காரணம் ஆர்யர்களின் விடாமுயற்சியும், களைப்படையாத உழைப்புமேயாகும். சரியாக சமாஜத்தின் கொள்கைகளைத் தழுவாதவர்கள் வசத்திலும் ஆர்யசமாஜம் சென்றது. சமாஜம் செய்து முடிக்கவேண்டிய வேலைகள் இன்னும் எவ்வளவோ உண்டு.

சமூகத்துறையிலும் சமாஜம் நல்ல பலனைப்பெற்றிருக்கிறது. ஜாதிமதப்பாகுபாட்டை அடியுடன் அழித்துவிட்டது ஆர்யசமாஜம். பெண்மக்கட் சமூகத்தின் உரிமைகளை வாங்கி அவர்களுக்களித்தது. நூறுவருடங்களாக இருந்துவந்த படுதாஇடல், பெண்களுக்குக் கல்வியில்லாமை, பால்யமணம், விதவைகளின் அடிமைத்தனம் முதலியவைகளை சமாஜம் வெகு சீக்கிரத்தில் நீக்கிவிட்டது. எந்த ஆர்யனும் தன் பெண்குழந்தை 16வயதடைவதன் முன் மணம் செய்யமாட்டான், பெற்றோர் இலாக்குழைகள் இனிமேல் பெற்றோரிலார் அல்லர். அவர்களைக் காப்பாற்ற அனேக கலாசாலைகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இதற்கு எல்லா இந்துக்களும் உதவிசெய்கிறார்கள். சமாஜத்தின் கொள்கைகளின் சித்தாந்தங்களை விளக்கி கிருஸ்தவ முகம்மதியர்களையும் ஆர்யசமாஜம் தங்கள் மதத்திற்

சேர்த்துக் கொள்கின்றது. அன்னியமதங்களுக்குச் சென்று கொண்டிருந்த இந்துக்களை சமாஜமே நிறுத்திற்று. ஆர்யர்களின் சுத்திச்சபையும், முகம்மதியர்களின் தப்ளி சபையுந் தான் இந்தியாவில் மதச் சண்டைகளுக்குக் காரணமாயிருந்து அரசாங்க முன்னேற்றத்தையும் தடுத்து வந்தன. இவ்விரண்டு கூட்டத்தார்களின் மதப்பற்றை மாற்ற ஒருவராலும் முடியவில்லை.

தாழ்த்தப் பட்டவர்களை முன்னுக்குக் கொண்டு வருவது சமாஜத்தின் மற்றோர்பெரியவேலையாகும். இவ்வேலையை இந்தியாவில் முதன் முதலில் ஆரம்பித்தது ஆரிய சமாஜமேயாகும். இவ்விஷயத்தில் சமாஜத்திற்கு மேல்ஜாதி இந்துக்கள் என்று சொல்லிக்கொள்வோர்களால் எவ்வளவோ எதிர்ப்புகள் உண்டாயிருந்த போதிலும் தற்காலம் மகாத்மா காந்தியாரும் இவ்விஷயத்தில் சமாஜத்தின் கொள்கையை ஒப்புக்கொண்டமையால் அவ்வெதிர்ப்பு கொஞ்சம் குறையலாயிற்று. மற்றும் பால்யமணத்தடுப்பு, பால்யவிதவைமண ஏற்பு, பெண்கல்வி, சமூக ஒற்றுமை, ஜாதியை ஒழித்தல் இவைகளே சமாஜத்தின் முன்னணி வேலைகளாகும்.

கல்வித்துறையிலும் சமாஜம் அதிக வேலை செய்கிறது. ஆர்யர்களின் தொகை கொஞ்சமாயிருந்த போதிலும் அனேக கல்விச்சாலைகளைத் திறப்பதில் அவர்கள் வெற்றியடைந்து விட்டார்கள். தயானந்தர் பழங்காலத்திய கல்விச்சாலைகளைப் போலவே தற்காலத்தையடையும் நடத்தவேண்டிய உபகரணங்களையெல்லாம் தயாரித்துக் கொடுத்திருக்கிறார். அம்மாதிரியான விதிப்படி நடத்தப் பெறுபவைகளே குருகுலங்கள்

ஆகும். இந்தியாவில் மொத்தம் 20 குருகுலங்கள் இருக்கின்றன. அவைகளில் மிக முக்யமானது காங்கரி, பிருந்தாவன் குருகுலங்களாகும். முன்னது பஞ்சாப் சமாஜத்தாலும், பின்னது ஐக்யமாகாண சமாஜத்தாலும் நடத்தப்படுகிறது. இப்பள்ளிகளில் வேதம், சாஸ்திரங்களை சம்ஸ்கிருதத்தில் கற்பீவதே முக்கியப்பாடம். அன்றி கணிதம், தேசசரித்திரம், விக்ஞானம், வேதாந்தம், ராமாயணம், பூகோளம் முதலியவைகளும் கற்பிக்கப்படுகின்றன. இப்பள்ளிக் கூடங்களுக்கு அரசாங்கத்தின் சம்பந்தம் சிறிதுமில்லை. வேலைக்காக அவர்கள் சட்டகலாசாலைப் பரீட்சைகளில் சென்று தேர்ச்சி பெறுகிருர்கள்.

குருகுலங்களைத் தவிர மற்றும் அனேக பெரிய பள்ளிக் கூடங்களையும் ஆர்யசமாஜம் நடத்திவருகிறது. அனேக பெண்களின் பள்ளிக்கூடங்களையும் நடத்திவருகிறது. பஞ்ஜாப்பில் சமாஜப் பள்ளிக்கூடம் இல்லாத ஒரு ஊரையும் காண முடியாது. அனேக மேல்வகுப்புக் பள்ளிக்கூடங்க (colleg-es) களில் இண்டர்மீடியட் (intermediate) வரை கற்பிக்கிருர்கள். இவ்வகைகளில் இந்தியாவிலேயே மிகப் பெரிய கலாசாலை லாகூரில் உள்ள தயானந்தர் ஆங்க்லோ வேதிக் காலேஜ் ஆகும். இரண்டாயிரம் மாணவர்களுக்கு மேல் அதில் வாசிக்கிருர்கள். அனேகசம்பளம் பெறும் உபாத்தியாயர்கள் அதில் வேலைசெய்கிருர்கள். ஜீவிய சந்தாதாரர்கள் அனேகம் பேர் இதில் இருக்கிருர்கள். அரசாங்கத்திலிருந்து 1 தம்பிடிகூட வாங்காமலேயே இப்பள்ளிக்கூடத்தின் கட்டடம் மிகப்பெரிதாக கட்டப்பட்டிருக்கிறது. அரசாங்கத்திலிருந்து இப்போதும் அது ஒன்றையும் வாங்கிக் கொள்

வதில்லே. அதன் செலவெல்லாம் சம்பளவசூலிலிருந்தும், பெரியோர்களின் உதவிகளிலிருந்துமே நடைபெற்று வருகிறது. இவைகளே ஆர்யசமாஜத்தின் வெற்றிக்கறிகுறியாகும். ஐக்ய மாகாணம்கூட 12க்கு மேற்பட்ட சமாஜ கல்விச் சாலேகளேயும் கான்பூரில் ஓர் காலேஜையும், தேராதூனில் ஓர் காலேஜையும் அனேக எலிமெண்ட்டரி ஆண், பெண் பாடசாலேகளேயும் உடைத்தாயிருக்கிறது. இவைகள் பலவிதங்களாக சமாஜத்தின் உதவிபெற்று நடந்துவருகின்றன.

மற்ற மாகாணங்களிலும் சமாஜப் பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன. அவைகளில் முக்யமானது கோலாபூரில் உள்ள ராஜாராம் காலேஜ் ஆகும். இது கோலாபூர் தர்பாரால் காப்பாற்றப்பட்டு வருகிறது.

---

# முடிவுரை

இப்போது நாம் இப்புத்தகத்தை முடிப்போம். ஆனாலும் அவ்வாறு செய்யுமுன் தயானந்தரின் வாழ்க்கையைச் சுருக்கிச் சொல்வோம். தயானந்தர் ஓர் வைதிக ப்ராம்மண குடும்பத்தில்பிறந்து முக்தியைநாடி இல்லத்தைத்துறந்து சென்றார். அனேகதுன்பங்களுக்கு உட்பட்டுக்கொண்டே கல்வியை விருத்தி செய்து வந்தார். மத்திய இந்தியா முதல் வட இந்தியாவரை எல்லா பாகங்களுக்கும் ப்ரயாணம் செய்தார். கடைசியாக மதுராவில் அவரின் குருவாகிய விரஜானந்தரை சந்தித்தார். இங்கு மூன்று வருடங்கள் வரை கல்வி கற்றிருந்து தன் குருவின் உத்திரவை நிறைவேற்றி வைப்பதாக ப்ரமாணிகம் செய்தளித்து வந்து தன் வேலையைத் துடங்கினார். முதல் ஐந்து வருடங்கள் வரை தன் வேலையை எவ்வாறு செய்யவேண்டுமென்று அறிவதற்கான அனுபவம் பெறுவதிலேயே கழித்தார். அதனால் பெற்ற அவ்வனுபவத்தின் மூலம் வேலை செய்யத்துடங்கினார். அவரின் வேலைகளையே நோக்கமாகக் கொண்டு வேலை செய்வதற்காக "ஆர்யசமாஜ"த்தை ஸ்தாபித்தார். சமாஜம் என்னென்ன வேலைகளைச் செய்தென்னும் விவரங்களை இதற்கு முன்பே ஆராய்ந்து விட்டோம். சமாஜம் முழுவதும் இந்துசமூகத்தின் உன்னதியையே நாடுகின்றது. தயானந்தர் உண்மையான பெரிய கல்வியாளராயும், வேதாந்தியாயும், மத - சமூக - சீர்திருத்த வாதியாகவு

யிருந்தார். அவரின் கொள்கைகளையே அடிப்படையாகக் கொண்ட ஆர்யசமாஜம் இந்துசமூகத்தைப் பாழாகப் போய் விடாமல் தடுக்கும் வேலியா யிருக்கிறது.

இப்பேற்பட்ட பெரியோர்கள் எப்போதும் தோன்றுவ தில்லை. தயானந்தரும் கடவுளால் பொருக்கி யனுப்பப்பட்ட வர்களுள் ஒருவராகும். அஜ்மீரில் 1883ம் வருடம் அக்டோ பர் மாதம் 30ந் தேதி தனக்கு விஷத்தை யளித்தவனுக்கும் கருணைகாட்டி உதவிபுரிந்த கருணாகார் தயானந்தர். ஆர்ய சமாஜம் இப்போது அவரின் அர்த்தசதாப்தியைக் கொண்டாடு கின்றது. பெரிய சமூகங்கள் ஒவ்வொன்றும் அவர்களின் சமூகத்திற்கு நன்னெறிகாட்டியவரான தயானந்தரை மறக் காது அவரின் வழியைப் பின்பற்ற வேண்டியது கடமை யாகும்.

அவரின் ஆத்மா அமைதி யடைவதாக.

ஓம் தத் ஸத்

## (சில முக்கிய சம்பவக் குறிப்புகள்)

---

சகோதரர்களே! சென்ற அத்தியாயத்துடன் இப்புத்தகம் முடிந்துவிட்டது, ஆனாலும் இதில் தயானந்தரின் வாழ்க்கையிலே ஏற்பட்ட சம்பவங்கள் ஒன்றும் எழுதப்படவில்லை. ஆகையால் யான் சில முக்யமான சம்பவங்களை மாத்திரம் சுருக்கமாக எழுதிப் பிறகு இப்புத்தகத்தை முடிக்கின்றேன். இச்சம்பவங்கள் எல்லாம் ஹிந்தி "தயானந்தரி" லிருந்தும் எடுக்கப்பட்டன.

1. அனூபசஹர் எனுமிடத்தில் லாலாபாபூயென்பாரின் மாளிகையில் தயானந்தர் வீற்றிருக்குங் காலையில் ஓர் நாள் ஓர் ப்ராம்மணன் அவரைக் காணவந்தான். வந்தவன் குருநாதனை தாழ்மையுடன் வணங்கி ஓர்வெற்றிலையையளித்து ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டினன். ஸ்வாமீஜீயும் அதை யேற்று வாயிலிட்டு மென்று இரண்டு மூன்றுமுறை அதன் ரசத்தை விழுங்கியபோது அது விஷவெற்றிலையென்று கண்டார். ஒருவருக்கும் சொல்லாமல் உடனே அவ்விடத்தை விட்டுச்சென்று கங்கைநதியை அடைந்து சிறிதுநேரம் வரை நீரில்விஷமுறிப்பு யோகாப்பியாசம் செய்தபின் திரும்பிவந்து ஆசனத்தின் மேலமர்ந்திருந்தார். ஆயினும் இச்சமாச்சாரம் எவ்வாறோ ஊரெல்லாம் பரவிவிட அதைக் கேள்வியுற்ற அவ்வூர் தாசில்தார் ஸ்வாமிகளின்மேல் வைத்திருக்குங் கருணையினாலே கோபமடைந்து அப்பிராம்மணனைப் பிடித்து சிறையில் வைத்துவிட்டு தயானந்தரிடம் தெரிவித்து ஆசீர்வாதம்

பெறுவதற்காக அவரிருப்பிடத்தை நாடிச்சென்று அவரை சந்தித்து எல்லா விஷயங்களையும் சொன்னபோது அவர் சிறிதும் சந்தோஷ மடையாமல் சும்மாயிருந்ததை நோக்கி அதன் காரணத்தை வினவ ஸ்வாமீஜீ—"என்பொருட்டு நீ இன்னொருவனை சிறைப்படுத்தியதாக நான் கேள்விப்பட்டேன். ஆனால் நான் மனிதர்களை பந்தத்தில் செலுத்துவதற்காக வரவில்லை. மனிதர்களின் விலங்குகளை விடுவிக்கவே நான் வந்துள்ளேன். துஷ்டன் தன் துஷ்டத்தனத்தை விட்டுவிட வில்லையென்றால் அதற்காக நாம் நம் நல்ல நடத்தையைவிட்டு விடவேண்டுமா?" என விடையளிக்க அதைக்கேட்டு விம்மிதமடைந்து தாழ்மையுடன் தயானந்தரை வணங்கி இல்லத்திற்குச் சென்று உடனே சிறைப்படுத்தியிருந்த அப்பிராமணனை விடுவித்து விட்டு ஸ்வாமியின் குணத்தைக் குறித்து புகழ்ந்து கொண்டிருந்தார்.

2. அனூபசஹரில் ஓர் நாவிதனிருந்தான். அவனின் உள்ளத்தில் தயானந்தரின் உபதேசத்தை குடியிருக்கச் செய்திருந்தான். ஓர்நாள் பக்திபாவனையுடன் சாதம் சமைத்து தயானந்தரிடம் எடுத்துச்சென்று அதை அருந்தி தன்னை ஆசீர்வதிக்க வேண்டுமென்று வேண்டிக்கொள்ள தயானந்தரும் அதை அருந்திக்கொண்டிருக்க, அச்சமயம் அவ்வழியே வந்துகொண்டிருந்த சில பிராம்மணர்கள் இக்காட்சியைக் கண்ணுற்று "சீ சீ சீ! ஸ்வாமிஜீ! என்ன செய்கின்றீர்கள்? நீங்கள் அருந்திக்கொண்டிருக்கும் ரொட்டி நாவித ரொட்டியாகும்" என, அதைக்கேட்டு ஸ்வாமிகள் புன்சிரிப்புடன் "இல்லை. இந்த ரொட்டி கோதுமை மாவுரொட்டி. ஆகையால் இதைநான் கட்டாயம் சாப்பிடுவேன்" என்று பதிலளிக்க அவர்கள் தலைகுனிந்து சென்றார்கள்.

3. கர்ணவாசத்தில் தன் பழைய குடிசையில் தயானந்தர் விளங்கியிருந்தார். அம்மாதத்தில் கங்காஸ்நான உற்சவம் நடைபெற்றது. ஆயிரக்கணக்கான ஆண்பெண்கள் கூடியிருந்தனர். அச்சமயத்தில் ராவ் கர்ணசிம்ஹரும் அதற்கு வந்திருந்தார். ராவ் மஹாசயர் ரங்காச்சார்யாரின் உபதேசப்படி வைஷ்ணவ மதத்தைத் தழுவிய காலத்திலிருந்து வஞ்சனைக்காரராய் மாறிவிட்டிருந்தார். ஸ்னானம் முடிந்த அன்றிரவு ராவ்மஹாசயரும் அவரின் சீடர்களுமாக ராஜலீலைகள் புரியத்துடங்கினர். சிலர் தயானந்தரிடம் சென்று அவரையும் தங்கள் லீலைகளில் கலந்து கொள்ளுமாறுவேண்ட தயானந்தர் இம்மாதிரியான நிந்திக்கத்தக்க காரியங்களில் தான் ஒருபோதும் கலந்துகொள்ள முடியாதென்று பதிலளித்துவிட இதைக்கேட்டு கோபமடைந்த பண்டிதர்களெல்லாம் மறுநாள் ராவினிடம் தங்களின் சொந்தச் சரக்குகளையும் சேர்த்து புளுக, ராவும் மஹா கோபத்தை யடைந்தார். உடனே அப்பண்டிதர்களுடனும் தன் வேலைக்காரர்களுடனும் ராவ் தயானந்தரின் குடிசையை அடைந்தார்.

காலம் மாலை. தயானந்தர் உபதேசம் செய்து கொண்டிருந்தார். அனேக பக்தர்கள் உபதேசாம்ருதத்தைப் பருகி ஆனந்த மடைந்து கொண்டிருக்கின்றனர். தடதட வென்ற சப்தங்களுடன் திடீரென்று ராவின் சேனைகள் வந்ததைக்கண்டார்கள். ராவைக்கண்ட தயானந்தர் "வாருங்கள், உட்காருங்கள்" என்று உபசரிக்க ராவ் தன்தொண்டையின் முழு பலத்தையு முபயோகித்து "எங்கே உட்கார" என்று கேட்க அவனின் உண்மை நிலையை அவ்வளவிலேயே யூகித்தறிந்து கொண்ட தயானந்தர் "எங்கே விருப்பமோ அங்கே உட்

காரலாம்'' என்று விடையளிக்க கோபாவேசத்தையடைந் திருந்த ராவ் " நீர் உட்கார்ந்திருக்கு மிடத்திலேயே நானும் உட்காரவேண்டும்.'' என்று சொல்ல தயானந்தர் தன்னாசனத் தை அப்பால் நகர்த்திக்கொண்டு " வாருங்கள், இங்கேதான் உட்காருங்கள் '' என ராவ் " சரிதான், நேற்று எங்கள் லீலை களிலே நீர் ஏன் வந்து கலந்து கொள்ளவில்லை ? சன்னியாசி யாயிருந்தும் இவ்வாறு செய்தது பெரிய தப்பிதம். எங்களி டத்தில் ராஜலீலை நடக்கும்போது எல்லா பண்டிதர்களும் சன்னியாசிகளும் வந்து கலந்து கொள்வது வழக்கம் '' என தயானந்தர்—" உங்களிடம் உங்களால் மாத்திரம் பெரியோர் களென்று மதிக்கப்படுபவர்களான மலின புருடர்களே வரு வார்கள். நீங்கள் செய்யும் காரியத்திலே உங்களுக்குச் சிறிதும் வெட்கம் தோன்றுவதில்லை. இது ஆச்சரியமே! நீங்கள் எப் படி க்ஷத்திரிய ரானீர்கள்? பெற்ற தாய் தகப்பன்மார்களும் தங்கள் குழந்தைகள் விளையாடினால் காணச் சகிக்காது வருந் தும் படியான நிலையிலுள்ள விளையாட்டுகளை நீங்கள் சிறிதும் கூச்சமின்றி பெரியோர்களென்று சொல்லிக் கொள்ளும் படி யானவர்களுடன் விளையாடுகின்றீர்கள். அதனால் சந்தோ ஷத்தையு மடைகிறீர்கள் '' என— ; ராவ்—" நாங்கள் உம் முடன் வாக்குவாதம் புரிய வந்துள்ளோம். நீர் அவதாரங் களையும், கங்கா தேவியையும் நிந்திப்பதாகக் கேள்விப் பட் டோம். பத்திரம். என்னெதிரிலும் நிந்திப்பீர்களானால் பிறகு மிகுந்த கஷ்டங்களேற்படும் '' - என—

தயானந்தர்—" நான் நிந்தனை செய்வதில்லை. எப்பொருள் எவ்வாறுண்டோ அப்பொருளை அவ்வாறே இருப்பதாகச்

சொல்கின்றேன். கங்கை எவ்வாறு எவ்வளவாக இருக்கிறதோ அதை அவ்வாறு அவ்வளவாகவே வர்ணிக்கின்றேன். சத்தியத்தைச் சொல்வதில் சதா நான் நிர்ப்பயமானவன்" என

ரா :—கங்கை எவ்வளவு ?

தயா :—(தன் கமண்டலத்தைக்காட்டி) எனக்காக இவ்வளவு நீரே அதிலிருந்து கிடைக்கின்றதாகையால் என் வரையில் கங்கை இவ்வளவே.

ரா:— "கங்கா கங்கேதி" இத்யாதி சுலோகங்களின் நாம, கீர்த்தன, தர்சன, ஸ்பர்ஸனங்களால் பாபநாசம் சொல்லப்பட்டிருக்கின்றது.

த :—இச்சுலோகங்கள் சாதாரண மனிதர்களின் கற்பனைகளாகும். மஹாத்மியங்களெல்லாம் புளுகு. பாபநாசமும் மோக்ஷ ப்ராப்தியும் வேதானுகூலத்தாலேயே உண்டாகும். மற்றபடி உண்டாகாது. ராவ்மஹாசயரே! உங்கள் நெற்றியிலிருப்பதென்ன ?

ரா :—இது "ஸ்ரீ" யாகும். இதை தரிக்காதவர்களெல்லாம் சண்டாளர்களாகும்.

த :—நீங்கள் எவ்வளவுகாலமாய் வைஷ்ணவராயிருக்கிறீர்கள்.

ரா :—சிலவருடங்களாக.

த :—தங்கள் தகப்பனாரும் வைஷ்ணவதீக்ஷை பெற்றிருந்தாரா ?

ரா :—இல்லை.

த :—என்றால் இப்போது உங்களின் வார்த்தைப்படியே உங்கள் தகப்பனாரும் சில வருடங்களுக்கு முன்பாக நீரும் சண்டாளர்கள் தானே ?

ரா :—(கோபமடைந்து உடைவாளின்மேல் கைவைத்து) வாயை அடக்கிப்பேசும்.

என்று சொன்னவுடன் அக்கும்பலிலிருந்த பூகாராமன் ராவின்மேல் பாய எத்தனிக்க அவனை தயானந்தர் தடுத்து "ஏன் பயப்படுகின்றாய் ? சிந்திக்க வேண்டியது யாதுமில்லை. நாம் சொன்னதெல்லாம் சத்யமேயாகும்" என்றார்.

மற்றோர்பக்கம் ராவானவர் மதம்வழியும் யானைபோல் திரிந்துகொண்டிருக்கிறார். கண்களில் நெருப்புப்பொரி பறக்கிறது. அத்துடன் வாயில் வந்தபடி தயானந்தரை திட்ட ஆரம்பித்தான். தயானந்தர் சிரித்துக்கொண்டே—"ராவ் மஹாசயரே ! என்னுடன் சாஸ்த்திரவாதம் செய்ய விருப்பமிருந்தால் சென்று ப்ருந்தாவனத்திலிருக்கும் ரங்காச்சாரியாரை என்பால் அனுப்பிவையுங்கள். அதில் வென்றவரின் சித்தாந்தங்களை தோற்றவர் ஏற்றுக்கொள்வோம்" என

ராவ் :—ரங்காச்சாரியாருடன் நீங்கள் என்ன வாதம் செய்யமுடியும் ? உங்களைப்போன்றவர்களெல்லாம் அவரின்

செருப்புக்குச் சமமாகும்." என்று இன்னும் வாயில் வந்தபடியெல்லாம் வசைமொழிகளைக்கூற ஆரம்பித்துவிட்டார். அன்றி பலமுறை உடைவாளின் மேலும் கையை வைத்து வைத்துக்காண்பித்தார். இவற்றையெல்லாங் கண்டு புன்முறுவல் கொண்ட தயானந்தர்—"ராவ் மஹாசயரே! கத்தியை என் பன்முறை தொடுகிறீர்கள்? சாஸ்திர வாதம் புரிய விரும்பினால் உன் குருவை இங்கழைத்து வா. நான் சித்தமாயிருக்கிறேன். சாஸ்திர வாதம் புரிய விருப்பமில்லை யென்றால் துறவியான என்னுடன் என் வீணாக வாதம் செய்கிறாய்? சண்டைசெய்ய வேண்டுமென்று விருப்பமிருந்தால் எதாவது ஒரு ஊரின் மேல் படையெடுத்துச்செல்" என்று சொன்னார்.

இதைச்செவியுற்ற ராவின் கோபம் அளவு மீறி விட்டது. கைகள் நடுக்குற்றன. கால்கள் தள்ளாடின. முகம் கோரமாக மாறியது. திடீரென்று உடை வாளை நீக்கி தயானந்தரை நோக்கி வீசினான். "அடே தூர்த்தா" என்று சொல்லிக்கொண்டே தயானந்தர் ராவின் கையை இடது கையில் இரும்புப் பிடியாகப் பிடித்துக் கொண்டார். வலது கையால் வாளைப்பிடுங்கி இரண்டு துண்டாக்கி பூமிமேல் வீசியெறிந்தார். ராவின் முகம் வெளுத்து விட்டது. மூர்ச்சை அடைந்தார். மறுபடி தயானந்தர் "ஐயா! நான் ஓர் துறவி. நீ என்ன செய்த போதிலும் உன்னை தண்டிக்க வேண்டுமென்ற எண்ணம் எனக்குக் கிடையாது, செல். கடவுள் உனக்கு நல்ல புத்தியைக் கொடுப்பாராக" என்று சொல்லி உடைந்த வாளின் துண்டுகளை அவர் கையில் பலவந்தமாகத் திணித்து விடை கொடுத்தனுப்பி வைத்தார்.

4. ஒரு நாள் ஆயிரக்கணக்கானவர்கள் தயானந்தரின் உபதேசாம்ருதத்தைப் பருகிக் கொண்டிருந்தனர். மத்தியில் ஓர் பண்டிதர் எழுந்து உருவ வழிபாட்டைக் குறித்து வாதம் செய்து கொண்டிருந்தார். தயானந்தரும் அவருக்கு மிகுந்த சந்தோஷத்துடன் விடையளித்துக் கொண்டிருந்தார். இதன் மத்தியிலே காளி உபாசனை செய்யும் ஓர் குடிமயக்கத்திலிருந்த ப்ராமணன் சபையின் மத்தியில் எழுந்து நின்று பலவித ஆபாச மொழிகளைச் சொல்லிக்கொண்டே ஓர் செருப்பையெடுத்து ஸ்வாமீஜியை நோக்கி வீசினான். ஆனால் அது ஸ்வாமீஜீ வரையில் வராமல் மத்தியிலேயே விழுந்து விட்டது. ஆனாலும் அச்சபையில் இருந்த சாதுக்கள் மிகுந்த கோபத்தையடைந்தார்கள். அந்நராதமனைப் பிடித்து அடித்தும் உதைத்தும் பலவிதமாக துன்புறுத்த ஆரம்பித்தனர். இதைக்கண்ட தயானந்தரின் உள்ளம் துடித்தது. உடனே அச்சாதுக்களை நோக்கி தயானந்தர் "அவரின் காரியத்தால் நம் யாருக்கும் துக்கமுண்டாகவில்லை. செருப்பே என் மேல் விழுந்திருந்த போதிலும் அது என்ன ராமபாணமா? அவர் செய்ததெல்லாம் அறியாமையினாலேயே. ஆகையால் தயைகூர்ந்து அவரை விட்டுவிடுங்கள்" என்று சொல்ல எல்லோரும் அவனை விட்டுவிட்டார்கள்.

5. காசியில் தயானந்தர் வேலை செய்துகொண்டிருந்த காலத்தில் மகம்மதிய மதத்திலுள்ள குற்றங்களையும் எடுத்துக் காண்பித்துக்கொண்டிருந்தார். இதனால் சில மகம்மதியர்கள் கோபமடைந்திருந்தார்கள். ஒரு நாள் மாலை தயானந்தர் கங்கை நதிக்கரையில் அமர்ந்திருந்தார். எதிர்பாராவிதமாக அச்சமயம் அவ்வழியாக ஓர் மகம்மதியக் கூட்

டம் வந்துகொண்டிருந்தது. அக்கூட்டத்திலே சிலர் தயானந்தரைக் கண்டுகொண்டு "இதோ நம் மதத்தை தூஷித்தவர் இவர்தான்" என்று கூச்சலிட்டனர். இதைக் கேட்ட இருவர் மிகவும் ஆவேசம் வந்தவர்கள்போலாகி முன் சென்றனர். சென்றவர்கள் இருவரும் தயானந்தரின் இரண்டு அக்குள்களின் வழியாக கைகளைவிட்டு தயானந்தரை பிடித்துக் கொண்டனர். அவ்வாறே தூக்கி நதியில் தயானந்தரை வீசிவிட யத்தனித்தபோது தயானந்தர் அக்குளின் வழியாகத் தன்னை பிடித்துக்கொண்டிருந்தவர்களின் கைகளை நன்றாக அழுத்திப்பிடித்துக்கொண்டு அவ்விருவருடனேயே திடீரென்று நதியில் குதித்தார். இருவரையும் சிறிது நேரம் தண்ணீரில் அமிழ்த்திவைத்திருந்தார். இனியிருந்தால் அவர்களின் உயிர் போய்விடும் என்று கண்டபோது அவர்களை தயானந்தர் விட்டுவிட்டார். கரை சேர்ந்த அவர்கள் கைகளில் கல், மண் முதலியவைகளை எடுத்துக்கொண்டு தயானந்தரை அடித்துக்கொன்றுவிட நதியை நோக்கினர். இவர்களின் கருத்தை அறிந்தவரான தயானந்தர் யோகப்பியாசத்தால் பத்மாசனமிட்டு நதிக்குள்ளேயே வெகு காலம்வரை யிருந்தார். இரவு ஆகும்வரை கரையிலேயே நின்றிருந்த அம்மதம் மதியக் கூட்டம் தயானந்தர் தண்ணீரில் மூழ்கி இறந்துவிட்டதாகவும், நாளை அவருடைய பிரேதத்தைக் காணலாகு மெனவும் தீர்மானித்துக்கொண்டு சென்றுவிட்டது. தயானந்தரும் நதியைவிட்டு வந்து தன் குணத்தால் பிரகாசித்துக் கொண்டிருந்தார்.

6. ஒருநாள் தயானந்தர் கங்கை நதிக்கரையிலமர்ந்து இயற்கையினழகைக்கண்டு உள்ளூற வியந்தவரா

யிருந்தார். அச்சமயத்தில் அவரெதிராக ஓர் பெண் ஓர் இறந்த குழந்தையை அடியில் ஓர் துணியிட்டுக் கையில்பிடித்த வண்ணம் வந்துகொண்டிருந்தாள். தண்ணீரில் கொஞ்ச தூரம் இறங்கிச்சென்று அப்பெண் அக்குழந்தைமேலிட்டிருந்த ஆடையை எடுத்துக்கொண்டு குழந்தையை நீரில் விட்டுவிட்டாள். வெளிவந்து அவள் கையில் பிடித்த அத்துண்டுடன் அழ ஆரம்பித்துவிட்டாள்.

இக்காட்சியைப் பார்த்துக்கொண்டிருந்த தயானந்தரின் துக்கம் பொறுக்க முடியாததாகவே அவரும் கண்களில் நீரைச்சிந்த ஆரம்பித்தார். உடனே தயானந்தர் தனக்குள்ளாகவே—"ஐயோ! பாரத தேசம் இந்த நிலைக்கா வந்துவிட்டது? பெற்ற குழந்தையுடன் எறிந்து விடவும் ஓர் துண்டு அற்று வசிக்கும் நிலைக்கா பாரதப் பெண்கள் ஆய்விட்டார்கள்! ஐயோ! இத்துண்டில்லாமல் அவள் வாழ்க்கை நடத்த முடியாதுபோயிருக்கிறது. இந்நிலையிலுள்ள இத்தேசத்திற்கு உதாரணங்கிடைப்பது கஷ்டம். இத்தரித்திரத்தை இந்நாட்டை விட்டொழிக்க நான் முயற்சிக்கிறேன்—" என்று சிந்தித்தார்.

7. மாங்கிலாலெனும் ஓர் மார்வாடி தயானந்தரை விரோதித்துவந்தான். தயானந்தரின் கீர்த்திக்கும், நற்பெயருக்கும் ஓர் களங்கம் உண்டுசெய்ய வேண்டுமென்று அதற்கான உபாயங்களை அநேக நாட்களாய் சிந்தித்திருந்தான். ஓர் நாள் தயானந்தர் லக்ஷ்மீதாஸ் ஸேட் என்பவரின் வீட்டில் பிரசங்கம் செய்து கொண்டிருந்தார். மத்தியிலே ஓர் முகம்மதியனும் ஓர் குடிகாரனுமாக எழுந்துநின்று "ஸ்வாமிஜீ! உங்

கள் பாக்கி வந்து சேரவேண்டியதற்குமேல் அனேக நாட்களாய் விட்டன. சீக்கிரத்தில் ஏன் நீங்கள் பைசல் செய்து கொள்ளக்கூடாது ?" என்று கூற இதைக்கேட்ட அங்கிருந்தவர்களின் கண்களில் கோபத்தனல் வீசியது. ஆனால் தயானந்தர் அவர்களை அமைதிப்படுத்தி தன்னைக் கேட்டவர்களுக்குக் கடைசியில் விடையளிப்பதாய்சொல்லிவிட்டு ப்ரசங்கத்தைத்தொடர்ந்து நடத்தினர். ப்ரசங்கம் முடிந்த பின் அவ்விருவரையும் அருகில் அழைத்து தன் கைகளால் இருவரின் கழுத்துகளையும் பிடித்துக்கொண்டு—"உண்மையைச் சொல்லுங்கள், இவ்வாறு சொல்லும்படி உங்களைத் தூண்டியது யார் ?" என்று கேட்க அவர்கள் கைகளை கூப்பிக்கொண்டு—"ஸ்வாமீ ! மாங்கிலால் எங்களை இச்சபையில் சென்று இம்மாதிரி சொல்லும்படித் தூண்டினர். அதனாலேயே நாங்கள் சொன்னோம். இது உங்களுக்குக் கெடுதலையளிக்கக் கூடியது என்று தெரிந்திருந்தால் நாங்கள் ஒருபோதும் சொல்லியிருக்க மாட்டோம்" என்று சொல்ல அவர்களை தயானந்தர் விட்டுவிட்டார். ஆனாலும் அவ்வூர்வாசிகள் அத்துடன் அம்மாங்கிலால் மார்வாடியைத்திட்ட ஆரம்பித்து விட்டதன்றி அவனுடன் இருந்த லேவாதேவிகளையும் நிறுத்திக் கொண்டனர்.

8. சில துஷ்டர்கள் ஓர் துஷ்டப் பெண்ணை தயானந்தரின் ப்ரசங்ககாலத்தில் சென்று அவரை அவமானம் செய்துவிட்டு வரும்படிச் சொல்லி அனுப்பிவைத்தார்கள். தயானந்தரை அவமானம் செய்துவிட்டால் நமக்குப் பெருந்தொகையான பணம் கிடைக்குமென்ற ஆனந்தத்துடன் அவள் தயானந்தரின் ப்ரசங்க சபையை அடைந்தாள்.

பயில் நுழைந்த அவள் மகாராஜனின் பரமபுனித ப்ர
:த, தேஜோமுகமண்டலத்தைக் கண்டாள். அவள்
'திலிருந்த கெட்டஎண்ணங்களெல்லாம் ஒவ்வொன்ருக
றந்துவிட்டன. அவள் மனதில் முனிராஜனின் பக்தியும்,
க்தையும் உற்பத்தியாயிற்று. "இம் மகாத்மாவை அவ
ாம் செய்யஎண்ணியதால் நான் பெரிய பாபியானேன்"
று நினைத்தவண்ணம் துக்கித்தாள். தயானந்தரின் எதிரில்
ன்று நடுங்கிக்கொண்டு நின்ருள். திடீரென்று பூமியின்
ல் விழுந்து தன்னை மன்னிக்குமாறு மன்ருடினுள். அழுது
ண்டே தான் வந்த காரியத்தையும், தன்னை அனுப்பிவைத்
'களின் துஷ்டத்தனங்களையும் தட்டுத்தடுமாறி சொல்லி
த்தாள்.

அவளை சமாதானம் செய்து தயானந்தர்—தேவீ!
! இப்போதிருந்து உன்னறிவை ஈஸ்வரன் நல்வழியில்
யுத்துவானுக. இனியாவது அறிவினியாய் விளங்கு
ாக! செல்!—என்று விடையளித்தனுப்பிவைத்தார்.

9. கவி நர்மாதாஶங்கர்ஜீயின் வேண்டுகோளின்
அவரின் வீட்டிற் கெதிராக தயானந்தர் ப்ரசங்கம்
துகொண்டிருக்கிருர். மத்தியிலே இச்சாஶங்கர் எனும்
ண்டிதர் எழுந்துநின்று விக்ரஹ ஆராதனையின் ஆதார
பௌராணிக அத்தாட்சிகளைக் கொடுக்க ஆரம்பிக்கிருர்.
நுக்கு இரண்டு மூன்று விடைகள் தயானந்தர் அளிக்கும்
து அவர் நடுங்கிக்கொண்டேஉட்கார்ந்து விடுகிருர். இச்ச
தில் சபையிலிருந்த சில போக்கிரிகள் கலகம் செய்ய
பிக்கிருர்கள். சிலர் கற்களையும், மண்களையும்

வீசி யெறிய ஆரம்பிக்கிறார்கள். அருகிலிருந்தவர்கள் ப்ரசங்கத்தை முடித்துவிடுமாறு தயானந்தரை வேண்டிக்கொள்கின்றனர். ஆனால் தயானந்தர்—என் சகோதரர்கள் எறிந்து கொண்டிருக்கும் இக்கல் மண்ணெல்லாம் எனக்கு புஷ்ப மழையாகத் தெரிகின்றது. ஆகையால் நான் குறித்த சமயம்வரை ப்ரசங்கத்தை நிறுத்தமாட்டேன்" என்று சொல்லி தொடர்ந்து ப்ரசங்கத்தை நடத்தி குறித்த சமயத்திலேயே நிறுத்துகிறார்.

10. ஜயகிருஷ்ணதாஸின் பங்களாவில் தர்மாலோசனை நடந்துகொண்டிருந்தது. இதே சமயத்தில் பிரிடிஷ் இண்டியன் அஸோஸியேஷன் கூட்டமும் அதே பங்களாவின் ஓர் பாகத்தில் நடைபெற்றது. கடைசி நாளில் "உலக உற்பத்தி எப்போது ஆயிற்று?" என்ற விஷயமாய் வாதம் நடந்துகொண்டிருந்தது. பாதிரியார் "உலகம் உண்டாகி 5 ஆயிரவருடங்கள் ஆயிற்று" என்று சொன்னார். தயானந்தர் எழுந்து பக்கத்தரைக்குச் சென்றார். அங்கிருந்து ஓர் மாக் கல்லை எடுத்துக் கொண்டுவந்து அச்சபையை நோக்கி நீங்கள் பூகர்ப்பவித்தையை அறிந்தவர்கள். இக்கல் இந்நிலைக்கு வருவதற்கு எத்தனை வருடங்கள் ஆயிருக்குமென்று தயவுசெய்து சொல்லுங்கள்? என்று கேட்டார். அவர்கள் அக்கல்லை நோக்கி "இது இந்நிலையை அடைய சுமார் லட்சம் வருடங்கள் ஆயிருக்கும்" என்று பதிலீந்தனர். அப்போது தயானந்தர் பாதிரியாரை நோக்கி "இப்போது சொல்லுங்கள். உலகம் உண்டாகி 5000 வருடங்களே ஆயிற்றென்றால் லட்சம் வருடங்களான இக்கல் எப்படிக்கிடைக்கும்?" என்று கேட்க பாதிரியார் மிகுந்த வெட்கமடைந்தவராய் பதில் சொல்ல முடியாது விழித்தார்.

ஓர் நாள் ஓர் கிருஸ்தவப் பாதிரியார் தயானந்
தமை ன்ம விஷயமாய் கேள்வி கேட்டார் தயானந்தர்
அவை க்கி ட சாப்பிடுதல், குடித்தல், கேட்டல், பார்த்
தல் ர்மங்கள் தேஹத்துடனிருப்பவைகளுக்கா தேக
மில்லை பகளுக்கா ?" என்று கேட்க.

: —இக்கர்மங்களெல்லாம் தேகத்துடனிருப்பவை
களுக்

—ஒரு சரீரத்தைவிட்டு மற்றொரு சரீரத்தை தரித்
துக் ( ளுதல்தானே புனர் ஜன்மம் ?

:—ஆம், அதுவே புனர் ஜன்மம்.

—நீங்கள் சாப்பிடுதல், குடித்தலாதி கர்மங்கள்
சரீரத் ிருப்பவைகளுக்கே யென்றும், ஒரு சரீரத்தை
விட்டு ாரு சரீரத்தை தரித்துக்கொள்ளலே புனர்ஜன்ம
மென் ஒப்புக்கொண்டீர்கள். இப்போது நீங்கள் மனித
தேகத் ட்டு மேல் உலகத்தில் சென்று பலவிதங்களான
ஆகார ா உண்டு களிக்கும் கிருஸ்தவர்களுக்கு அங்கே
புனர்ஜ ண்டாகிறதென்பதையும் நீங்கள் ஒப்புக்கொள்ள
வேண் வா?" கிருஸ்தவப்பாதிரியார் மௌனமடைந்தார்.

பாதிரி க்ளார்க் என்பார் ஓர் நாள் தயானந்த
ரைப் ந்து—"வாருங்கள். நாமிருவருங்கலந்து ஒரு
நானேச் ே மேஜைமேலமர்ந்து ஆகாரமருந்துவோம்",
என்று ன்றார்

: —அப்படிச் செய்வதால் என்ன லாபம் ?

பாதிரி :—ஒன்ருகச் சாப்பிடுவதால் பாஸ்பரம் ப்ரீதி யேற்படும்.

தயா :—ஸீயா, சுண்ணி முசல்மான்கள் ஒரே கிண்ணியில் சாப்பிடுகிருர்கள். அதேபோல நீங்களும், ரோமன் கத்தோலிக்கர்களும் ஒரே மேஜையில் அருந்துகிறீர்கள். ஆனல் ஒருவருக்கொருவர் எப்பேர்ப்பட்ட கொடூர விரோதிகளென்பதை எல்லோரும் அறிவார்கள்.—இத்துடன் பாதிரி மௌனியானுர்.

13. ஒரு நாள் பிரோஜ்பூர் பெரிய கோவிலின் பூஜாரியான ரகுநாதன் தயானந்தரிடம் சென்ருன். தயானந்தர் " கேள்வியைப் பிறகு கேட்கலாம். முதலில் பூஜாரி யென்பதற்கு அர்த்தம் சொல்லுங்கள் " இதைக் கேட்ட ரகுநாதன் மௌனம் அடைந்தான். பிறகு தயானந்தர் " பூஜாரி யென்ருல் பூஜையின் விரோதி " என்றர்த்தமாகும். நீங்கள் பண்டிதராயிருந்தும் ஏன் இம்மாதிரியான பெயரை வைத்துக் கொண்டிருக்கின்றீர்கள் ?" என்று கேட்க ரகுநாதன் ஓட்டம் பிடித்தான்.

14. ஓர்நாள் சர்தார் விக்ரம ஸிம்ஹர் தயானந்தரை யணுகி—" ஸ்வாமி, ப்ரம்மசர்யத்தால் மனிதர்கள் மஹாபலர்கள் ஆகிருர்கள் என்பது பொய்யா மெய்யா ? " என்று கேட்க

தயா :—ப்ரம்மசர்யத்தால் என்னென்ன பலன்களுண்டாமென்று சாஸ்த்திரங்களில் சொல்லி யிருக்கிறதோ அவைகளெல்லாம் சத்தியமாக அதனுல் உண்டாகக்கூடியதே. அதில் சிறிதும் ஐயமில்லை.

சர்தார் :—ஸ்வாமீஜீ ! நீங்களும் ப்ரம்மசாரிதான். ஆனால் தங்களிடம் ஒன்றும் விசேஷமான பலம் காணப்படவில்லையே ?

இதற்கு தயானந்தர் ஒரு பதிலுமளிக்காமல் சும்மாயிருந்துவிட்டார். பின்னும் கொஞ்சநேரம் அங்கே இருந்து சர்தார் செல்வதற்காக புறப்பட்டு வண்டியில் சென்றமர்ந்து குதிரைகளைத் தட்டிவிட்டார். ஆனால் வண்டி நகரவேயில்லை. மறுபடி மறுபடி குதிரைகளை எவ்வளவோ அதட்டியும் குதிரைகள் ஒரு அடியும் எடுத்து வைக்கவில்லை. இதைக்கண்ட சர்தார் ஆச்சரியமடைந்து பின்பக்கம் திரும்பிப் பார்த்தபோது தயானந்தர் தன்வண்டியை இடது கையால் பிடித்துக்கொண்டிருப்பதைக் கண்டு அதியாச்சரிய மடைந்தார். அப்போது தயானந்தர்—“ சர்தார்ஜீ ! இதோ ப்ரம்மசர்யத்தின் பலத்தை உங்களுக்கு நிரூபித்துக் காட்டப்பட்டது. இனி செல்லலாம்” என்று வண்டியை விட்டுவிட அச்சாமர்த்தியச் செய்கைக்கு வியந்தவராகவே சர்தார் தன்னில்லத்தை யடைந்தார்.

15. போடுசிம்ஹன் என்னும் ஓர் “ அத்வைதி ” தயானந்தரிடம் சென்று “ ஸ்வாமீ ! உங்களுக்கு பராவித்தை தெரியாது. தெரிந்திருந்தால் நீங்கள் “ த்வைத ” வாதப் பிரசாரத்தை ஒருபோதும் செய்யமாட்டீர்கள் ”. என்று சொல்லி இத்துடன் அனேக உபநிஷத் வாக்கியங்களையும் சொல்லி கடைசியில் “ ஜீவாத்மாவே தான் ப்ரம்மம் ” என்று சொன்னான்.

தயா :—போடுசிம்ஹ ! நீயும் ப்ரம்மம் தானே ?

போதே :—சந்தேஹமில்லாமல் நான் ப்ரம்மம் தான்.

தயா :—இவ்வுலகத்தை உண்டாக்கியது யார் ?

போதே :—ப்ரம்மா.

உடனே தயானந்தர் அங்கு இறந்துகிடந்த ஓர் எறும்பை எடுத்து போதேசிம்ஹனின் எதிரில் வைத்து "ஈஸ்வரா! தயவு செய்து இவ்வெறும்புக்குக் கொஞ்சம் உயிரையளித்துவிடுங்கள். அப்போதுதான் எல்லோரும் உம்மை ப்ரம்மமென்று நம்புவார்கள்" என்றார்.

போதேசிம்ஹன் ஊமையாய் வெளிச்சென்றான்.

16. இக்காலத்தில் வேணீப்ராசாதன் நல்ல வாலிபப் பருவத்தினனாயிருந்தான். ஒருநாள் தன் பலாட்டிய நண்பர்கள் ஆறுபேர்களுடன் தயானந்தரின் குடிசைக்குவந்து—

வேணீ :—பகவான்! இன்று நாங்கள் உமது காலைப் பிடித்து விடவேண்டுமென்று விரும்புகிறோம்.

தயா :—(தனக்குள்) ஓஹோ! இவர்கள் காலைப் பிடிப்பதாக பாவனைசெய்து என் பலத்தை பரிசோதிக்கப் போகிறார்கள். (வெளிப்படையாக) காலைப் பிறகு பிடித்து விடுவீர்களாம். முதலில் நீங்கள் எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து இதோ இவ்விடது காலை பூமியிலிருந்து கொஞ்சம் மேலே தூக்குங்கள், பார்ப்போம்.

என்று சொல்லி தயானந்தர் இடது காலை நீட்டிவைத்துக் கொண்டார். உடனே அவ்வெல்லோரும் தங்கள் முழு

பலத்தையும் செலுத்தி ஒன்றாக அக்காலை தூக்க முயன்றதில் எல்லோருக்கும் வியர்வை வழிந்ததன்றி, பெருமூச்சு வந்ததேயன்றி, கால்மாத்திரம் கொஞ்சமும் பூமியைவிட்டு மேலே வரவில்லை.

காலைப்பிடித்திருந்தபிடியை விட்டுவிட்டு பிடித்தார்கள் ஓட்டம் திரும்பிப்பாராமல்.

17. மீரட்நகரத்தில் ஸ்ரார்த்த கண்டன வ்யாக்யானம் ஒன்றை தயானந்தர் நிகழ்த்தினார். அங்கிருந்த ப்ராம்மணர்களுள் அநேகர் கோபமடைந்தனர். அவர்களில் சிலர் தயானந்தர் வீட்டிற்குச்செல்லவேண்டிய வழியில் பெரிய தடிகளை வைத்துக்கொண்டு அங்கங்கே உட்கார்ந்து கொண்டனர். எல்லோரின் தீர்மானமும் தயானந்தர் இவ்வழியாகப்போகும் போது அவரை அடித்து உருட்டி விடவேண்டுமென்பதே. தடிகளுடன் ஒளிந்திருந்து தயானந்தரின் வரவை எதிர் நோக்கிக்கொண்டிருந்தனர்.

இச்சமாச்சாரம் தயானந்தரின் பக்தர்கள் சிலருக்கு எட்டியது. அவர்கள் உடனே தயானந்தரிடம் சென்று - "பகவான்! கொஞ்ச நேரம் தங்கிச் செல்லுங்கள். வழியிலே இன்று உங்களுக்குக் கொஞ்சம் உபத்திரவம் உண்டாகும் போலிருக்கிறது. சில துஷ்டர்கள் உங்களை அடிப்பதற்காக நீங்கள் செல்லவேண்டிய வழியில் தடிகளுடன் காத்திருக்கின்றனர்."

இதைக்கேட்ட தயானந்தர் சிரித்துக்கொண்டே "அவர்கள் என்னை ஒன்றும் செய்யமுடியாது. இப்பேர்ப்பட்ட ஆபத்துகளுக்கு நான் எப்போதும் பயப்படுவதில்லை. ஆகையால் நான் இங்கே தங்கிச்செல்லவேண்டிய அவசியமில்லை."

உடனே தயானந்தர் தனியாக யானையைப்போன்ற கம்பீரத்துடனும், சிங்கத்தைப்போன்ற பயங்கரத்துடனும், பார்த்தவர்களை அஞ்சும்படிச்செய்யக்கூடிய நடையுடனும் அத்துஷ்டர்கள் இருக்கும் வழியாகவே சென்றார்.

அவர் வருவதை யறிந்தும் அத்துஷ்டர்கள் அவரின் கம்பீரத்தையும், பயங்கரத்தையுங் கண்டு ஒன்றும் செய்ய மாட்டாதவர்களாய் ஒருவரின் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டு விழித்துக்கொண்டே யிருந்துவிட்டனர். தயானந்தர் சென்ற பிறகு ஒருவரை யொருவர் பார்க்கவும் வெட்கி நாலா பக்களிலும் சிதறி ஓடி அவரவர்களின் வீட்டை யடைந்தனர்.

18. இந்த்ரவணி யென்பார் தயானந்தரை நோக்கி "நீங்கள் ஒருவருக்கொருவர் சந்தித்துக்கொள்ளும்போது "நமஸ்தே" சொல்லவேண்டுமென்று சொல்கிறீர்கள். இதற்கு நாங்கள் "ஜெய கோபால்" என்று சொல்லிக்கொண்டிருந்தோம். ஏனென்றால் "கடவுளுக்கு ஜெயம்" எனும் பதமே மனிதர்களுக்குக் கொஞ்சம் கடாக்ஷத்தை உண்டாக்கக்கூடியதாகும். நீங்கள் புதியதான "நமஸ்தே" என்பதைக் கற்றுக் கொடுத்தால் ஜனங்கள் கடவுளையே மறந்து விடுவார்கள் போலிருக்கிறதே! அதுவுமின்றி சந்திப்புக்காலங்களில் "கடவுளுக்கு ஜெயம்" என்ற பதமே உசிதமாகவும் காணப்படுகிறது. சிறியோர்கள் பெரியோர்களுக்கு "நமஸ்தே" என்று சொன்னால் பாவாயில்லை. ஆனால் தகப்பன் புத்திரனுக்கும், எஜமானன் வேலைக்காரனுக்கும், அரசன் தன் குடிக்கும் "நமஸ்தே" என்று சொன்னால் அது நன்றாயிருக்காது. சரியல்ல." என்று சொல்ல

தயா :—இந்த்ரமணிஜீ! அபிமானப் புருடன் பெரிய வனுகமாட்டான். தன்னஹங்காரத்தை வென்றவனே பெரியவனுகும். அம்மாதிரியான உண்மைப் பெரியோர் தன் பெருந்தனத்தைக் காட்டிக் கொள்ளமாட்டார். நம் முன்னோர்களான ரிஷி, மகரிஷி, அரச, மகாராஜர் முதலியோர்களில் யாருமே தன்னைப் பெரியோர் என்று சொல்லிக் கொண்டார்களில்லை. "நமஸ்தே" என்றால் காலைப் பிடிப்பது என்றல்ல அர்த்தம். இதன் அர்த்தம் "சன்மான- சத்காரம் ஆகும். சகல பெரியோர் சிறியோர், மேலானோர்-கீழானோர் யாராயிருப்பினும் சந்திப்புக் காலங்களில் சன்மான-சத்காரம் செய்யவேண்டியது மனிதர்களின் கடமையாகும். உலகம் எல்லாவற்றிற்கும் இது சம்மதமான பொதுக்கட்டளை யாகும். நீங்களே சொல்லும்! திடீரென்று யாராவது உமக்குத் தெரிந்தவர் உம்மை நாடிவந்தால் அந்நிலையிலே முதலில் உம் மனதில் எழும் உணர்ச்சியாது ?

இந்த்ரமணி இதற்கொன்றும் பதில் சொல்லவில்லை. மறுபடி தயா—"மஹாசய! திடீரென்று நம்வீட்டிற்கு யாராவது வந்துவிட்டால் உடனே அவரை எதிர் சென்றழைத்து வந்து அமரச்செய்து அவரின் சுகத்தை விசாரிக்க நம்மெண்ணம் தூண்டுகின்றது. புத்திரனாயின் அவனுக்கு அன்பைச்செலுத்த நம்மனம் தூண்டுகின்றது. வேலைக்காரர்களாயின் "வாப்பா, உட்காரப்பா, சாப்பிடப்பா" என்று உபசரிக்க நம் மனம் சொல்கின்றது. மேல் சொன்ன நான்கு பாவங்களையும் "நமஸ்தே" என்பதும் காட்டுகின்றது. இக்காலங்களில் கடவுளின் பெயரைச் சொல்லல் சரியல்ல. ஆத்மாவில் உண்டான எண்ணத்திற்குத் தக்கதாகவே வார்த்தைகளும் இருக்க

வேண்டும். ஆகையால் மனித உபாசனை செய்யும் எண்ணம் உண்டாகும்போது கடவுளின் பெயரைச் சொல்லல் சரியல்ல. உள்ளே உண்டாகும் எண்ணங்களை வெளியில் சொல்வது தான் சத்தியமேயன்றி "உள்ளொன்றுவைத்து புறம்பொன்று பேசுதல்" அசத்தியமாகும்.

புராதன கால ஆர்யர்கள், "நமஸ்தே" என்றே சொல்லிவந்தார்கள். வேதங்களிலும் இச்சப்தம் அநேக இடங்களில் வந்திருக்கிறது. ஆகையால் ஆர்யர்கள் இதையே தான் ப்ரசாரம் செய்யவேண்டும்.

19. மஹாராஷ்ட்ர ப்ராம்மண குலத்திலே பிறந்த ரமா யெனும் ஓர் பெண்மணி சம்ஸ்கிருதத்திலே பாண்டித்யமடைந்திருந்தாள். பன்முறை தயானந்தரின் கல்வித்திறனைக் குறித்துக் கேள்விப்பட்டிருந்த ரமாள் ஓர் நாள் தயானந்தரைக் கண்டு தனக்கேதாவது உபதேசமளிக்கும்படி வேண்ட தயானந்தர் :—

"தாயே! இக்காலத்தில் ஆர்யப் பெண்மணிகளின் நிலைமை மிகவும் யோசிக்கவேண்டிய நிலைமையிலிருக்கிறது. இவ்வுலகத்தில் நடைபெறும் மோசங்களான கிணற்றில் அவர்கள் ஆழ்ந்து கிடக்கிறார்கள். நீங்கள் உங்கள் முழுவாழ் நாளும் ப்ரம்ம சாரிணியாகவே யிருந்து அவர்களை அக் கிணற்றிலிருந்தும் கரையேற்றுவீர்களாக. இச்சுபகார்யத் தின்பொருட்டு உமக்கு உதவிவேண்டியதாயின் நீர் ஆர்ய சமாஜிகளைக் கேட்டால் உமக்கு வேண்டிய உதவிகள் அளிக் கப்படும். தாயே! உம்மைத்தவிர நான் இதுவரை எதிரமர்ந்து எந்தப் பெண்மணியுடனும் வார்த்தையாடியதில்லை.

உம்மெதிரமர்ந்து உமக்கு உபதேசமளிப்பது கேவலம் நீர் அத்விதீய விதுஷியாயிருப்பதாலேயே. இன்று முதல் நீர் ப்ரம்மசாரிணியாகவே யிருப்பீர் ; பரோபகாரரூப, பரமபுண்ய காரியத்தில் உங்கள் உயிரை தியாகம் செய்வீராக ”

என்று சொல்ல ரமாள் தயானந்தரை நோக்கி— “ ஸ்வாமீ ! இல்லறத்தவர்களுங்கூட உபகார காரியத்தைப் புரியக்கூடுமே ! அவர்களுக்குங்கூட பரோபகாரம் புரிவதற்கு வேண்டிய அவகாசம் கிடைக்கின்றதே ? ” என்று வினவ— தயானந்தர் :—

“ ஓர் ப்ரம்மசாரி அல்லது ப்ரம்மசாரிணி செய்யும் அவ்வளவு காரியங்களை பந்துமித்திரர்களின் பலவிதமான பந்தனையால் கட்டுண்டு சண்டை சச்சரவுகளிட்டுக்கொண்டிருக்கும் இல்லறத்தவர்கள் செய்யமுடியாது. கேவலம் தனக்கு அருகாக சம்பந்தப்பட்டவர்களுக்கே தங்களின் அன்பைச் செலுத்தி அவர்களின்மேன்மைக்காக உழைப்பதிலேயே அவர்களின் காலம் கழிந்துவிடுகிறது. பந்துக்களினால் அவர்களின் அவகாசம் கழிந்துவிடுகிறது. குழந்தைகள் உண்டாய் விட்டால் அவைகளைப் பராமரிக்கும் கவலை வேறுண்டாகி விடுகின்றது. பதி, புத்ர-பௌத்திரர்களின் மரணம் ஏற்பட்டு விடின் அவர்கள் மிகுந்த துக்கித்தவர்களாக தங்கள் சுகமே அழிந்துவிட்டதென நினைக்கிறார்கள். இவ்வாறான இல்லறத்தில் ஈடுபட்டவர்களுக்கு எழும் பரோபகார எண்ணங்களும் சித்திபெறுவதன்றாய் ஒவ்வொன்றாக மறைகிறது. ஆகையால் ரமாஜீ ! நீ உன் ஜீவிதத்தை பிறருக்காகவே அர்ப்பணம் செய். “ மஹிளா மண்டலத்தை ” உன்னதியாக்குவாயாக ” என்று விடையளித்தார்.

20. ஓர்நாள் வக்ஷீராம்ஜீ, இந்த்ரமணிஜீ இவர்களுடன் தயானந்தர் பேசிக் கொண்டிருந்தார். அப்போது தயானந்தர் தன் பழைய காலத்தில் நடந்த ஓர் சம்பவத்தைக் குறித்து கீழ் வருமாறு சொன்னார்:—

"நான் தனியாகவே சுற்றிக்கொண்டு திரிந்த காலத்தில்ஓர் சமயம் சில சக்தி பூஜையாளர்கள் வசிக்கும் இடத்திற்கருகு சென்றேன். அவர்கள் என்னை மிகுந்த அன்புடன் உபசரித்தார்கள். சில நாட்கள் அங்கிருந்த பிறகு நான் சென்று வர விடை கேட்டபோது அவர்கள் என்னைத் தடுத்து விட்டார்கள். அவர்களின் பக்தி பாவத்தால் அப்படிச் செய்கிறார்கள் என்று நான் நினைத்துக்கொண்டேன். இவ்வாறாக சிலநாள் சென்றபின் அவ்ர்களின் பர்வதினம் வந்தது. அந்நாளில் எல்லா தேசத்தர்களும் தேவியின் கோவிலில் ஒன்றாகக்கூடி பாட்டுகள் பாடினார்கள். அந்நாள் என்னையும் அவர்களின் கோவிலுக்குக் கட்டாயம் வரவேண்டுமென்று வற்புறுத்தினார்கள். நான் தேவியை தரிசிக்கவேண்டிய அவசியமில்லையென்று எவ்வளவோ தூரம்சொன்னேன். அவர்கள் கேட்கவில்லை. அவர்கள் என்காலைப் பிடித்துக்கொண்டு "இன்று தாங்கள் வாராவிட்டால் எங்களின் உற்சாகமெல்லாம் பாழாய்விடும். அவசியம் வந்தே யாகவேண்டும். நீங்கள் மூர்த்தி ஒன்றையும் கும்பிடவேண்டாம். எங்களுக்காக நீங்கள் அங்கு வரவேண்டும்" என்று வேண்டினர்.

அவர்களின் கோவில் நகருக்கு வெளியில் ஓர் தனியான இடத்தில் அமைக்கப்பட்டிருந்தது. அவர்களின் பலவந்தத்தினால் நான் அக்கோவிலுக்குச் செல்ல நேர்ந்தது. நான் அங்கே சென்றபோது மெத்தைத் தாழ்வாரத்தில் ஹோமம்

நடந்து கொண்டிருந்தது. சிலர் ஏதேதோ செய்துகொண்டிருந்தனர். அவர்கள் எனக்கு துர்க்கையின் சிலையைக் காட்டுவதற்காக அழைத்துச் சென்றனர். நானும் சாதாரணமாக அச்சிலையினெதிரிற்சென்று நின்றேன். அச்சாலைக்கு அருகாமையில் ஓர் பலிஷ்டன் உரையினின்றும் நீக்கிய ஓர் வாளை வைத்துக்கொண்டு நின்றிருந்தான்.

அங்கு சென்ற பின் அவர்கள் என்னை நோக்கி "மஹாத்மாஜீ! தாயாருக்கு வணக்கம் செய்துகொள்ளுங்கள்" என்றார்கள். "நான் இவ்வாறு செய்யவேண்டுமென்று நீங்கள் விரும்புவது வீணுசையாகும்" என்று சொன்னேன். இதைக் கேட்டு கோபமடைந்த அத்துர்க்கையின் பூஜாரி என்னருகுவந்து என் கழுத்தைப் பிடித்துக்கொண்டு தலையைத் திருகப் பார்த்தான். நான் பேசாமல் இருந்து பார்த்துக் கொண்டே யிருந்தபோது எதிரில் வாளைவைத்து நின்று கொண்டிருந்தவன் என்மேல் வாளை வீச்சுவதற்காக வந்து கொண்டிருப்பதை நான் கண்டேன்.

அவன் என்னருகில் வரும் வரையில் சும்மாயிருந்த நான் அருகில் வந்தவுடன் திடீரென்று அவன் கையிலிருந்த வாளை பிடுங்கிக்கொண்டேன். அவ்வாளைக்கையில் பிடித்தவண்ணமே மெத்தைத் தாழ்வாரத்திற்குச் சென்றேன், என்னைக்கண்ட அனைவரும் ஆட்டைக்கண்ட புலிபோல் பலவிதங்களான ஆயுதங்களைக்கொண்டு என்னைத்தாக்கினர். வெளி வாயிற்படியை நோக்க அது தாளிட்டிருந்தது. என்னை பலியிடவே இவ்வளவு சூழ்ச்சிகள் நடந்ததென்று அறிந்துகொண்ட நான் மெத்தையின் கைப்பிடிச்சுவற்றின் மேலேறி திடீரென்று கீழே

20. ஓர்நாள் வசுதீராம்ஜீ, இந்த்ரமணிஜீ இவர்களுடன் தயானந்தர் பேசிக் கொண்டிருந்தார். அப்போது தயானந்தர் தன் பழைய காலத்தில் நடந்த ஓர் சம்பவத்தைக் குறித்து கீழ் வருமாறு சொன்னார்:—

"நான் தனியாகவே சுற்றிக்கொண்டு திரிந்த காலத்தில் ஓர் சமயம் சில சக்தி பூஜையாளர்கள் வசிக்கும் இடத்திற்கருகு சென்றேன். அவர்கள் என்னை மிகுந்த அன்புடன் உபசரித்தார்கள். சில நாட்கள் அங்கிருந்த பிறகு நான் சென்று வர விடை கேட்டபோது அவர்கள் என்னைத் தடுத்து விட்டார்கள். அவர்களின் பக்தி பாவத்தால் அப்படிச் செய்கிறார்கள் என்று நான் நினைத்துக்கொண்டேன். இவ்வாறாக சிலநாள் சென்றபின் அவர்களின் பர்வதினம் வந்தது. அந்நாளில் எல்லா தேசத்தர்களும் தேவியின் கோவிலில் ஒன்றாகக்கூடி பாட்டுகள் பாடினார்கள். அந்நாள் என்னையும் அவர்களின் கோவிலுக்குக் கட்டாயம் வரவேண்டுமென்று வற்புறுத்தினார்கள். நான் தேவியை தரிசிக்கவேண்டிய அவசியமில்லை யென்று எவ்வளவோ தூரம்சொன்னேன். அவர்கள் கேட்கவில்லை. அவர்கள் என்காலைப் பிடித்துக்கொண்டு " இன்று தாங்கள் வராவிட்டால் எங்களின் உற்சாகமெல்லாம் பாழாய்விடும். அவசியம் வந்தே யாகவேண்டும். நீங்கள் மூர்த்தி ஒன்றையும் கும்பிடவேண்டாம். எங்களுக்காக நீங்கள் அங்கு வரவேண்டும் " என்று வேண்டினர்.

அவர்களின் கோவில் நகருக்கு வெளியில் ஓர் தனியான இடத்தில் அமைக்கப்பட்டிருந்தது. அவர்களின் பலவந்தத்தினால் நான் அக்கோவிலுக்குச் செல்ல நேர்ந்தது. நான் அங்கே சென்றபோது மெத்தைத் தாழ்வாரத்தில் ஹோமம்

ந்து கொண்டிருந்தது. சிலர் ஏதேதோ செய்துகொண் ந்தனர். அவர்கள் எனக்கு துர்க்கையின் சிலையைக் ட்டுவதற்காக அழைத்துச் சென்றனர். நானும் சாதாரண க அச்சிலையினெதிரிற்சென்று நின்றேன். அச்சாலைக்கு நகாமையில் ஓர் பலிஷ்டன் உறையினின்றும் நீக்கிய ஓர் ளை வைத்துக்கொண்டு நின்றிருந்தான்.

அங்கு சென்ற பின் அவர்கள் என்னை நோக்கி "மஹாத் ஜீ! தாயாருக்கு வணக்கம் செய்துகொள்ளுங்கள்" என் ர்கள். "நான் இவ்வாறு செய்யவேண்டுமென்று நீங்கள் நம்புவது வீணாசையாகும்" என்று சொன்னேன். இதைக் கட்டு கோபமடைந்த அத்துர்க்கையின் பூஜாரி என்ன துவந்து என் கழுத்தைப் பிடித்துக்கொண்டு தலையைத் நகப் பார்த்தான். நான் பேசாமல் இருந்து பார்த்துக் காண்டே யிருந்தபோது எதிரில் வாளைவைத்து நின்று காண்டிருந்தவன் என்மேல் வாளை வீச்சுவதற்காக வந்து காண்டிருப்பதை நான் கண்டேன்.

அவன் என்னருகில் வரும் வரையில் சும்மாயிருந்த நான் ருகில் வந்தவுடன் திடீரென்று அவன் கையிலிருந்த வாளை டுங்கிக்கொண்டேன். அவ்வாளைக்கையில் பிடித்தவண்ணமே மத்தைத் தாழ்வாரத்திற்குச் சென்றேன். என்னைக்கண்ட னைவரும் ஆட்டைக்கண்ட புலிபோல் பலவிதங்களான ஆயு ங்களைக்கொண்டு என்னைத்தாக்கினர். வெளி வாயிற்படியை நாக்க அது தாளிட்டிருந்தது. என்னை பலியிடவே இவ்வ ரவு சூழ்ச்சிகள் நடந்ததென்று அறிந்துகொண்ட நான் மெத் தயின் கைப்பிடிச்சுவற்றின் மேலேறி திடீரென்று கீழே

குதித்து நடக்க ஆரம்பித்தேன். அக்கோவிலுக்கருகிலே யிருந்த ஓர் வனத்தில் தங்கி அன்றிரவைக் கழித்தேன், அன்றிலிருந்து நான் சாக்தர்களை கொஞ்சமும் நம்புவதே யில்லை".

[இதுவரை தயானந்தரின் வாழ்க்கையில் ஏற்பட்ட சில அனுபவங்களை மாத்திரம் குறித்தோம். இங்கு குறித்தவை கள் கடலில் ஒரு செம்பு ஜலம் போன்றதேயாகும். இருப்பி னும் இப்புத்தகப்பெருக்கை யுத்தேசித்து இதை இத்துடன் நிறுத்தி அடுத்தபடி அவரின் மரணத்தைச் சுருக்கமாக ஆரா ய்ந்து இதை முடித்துவிடுவோம்.]

## ஆத்மசாந்தி.

ஜோத்பூர் அரசபெருமானின் வேண்டுகோளின்மேல் அவ்வூரையடைந்த தயானந்தர் அவரால் ஏற்படுத்தப்பட்ட ஓர் அழகிய ஆஸ்ரமத்தில் தங்கி அவ்வூர்வாசிகளுக்கு சத்ய மாம் தேவாம்ருதத்தை காட்டிக்கொண்டிருந்தார். ஜோத்பூர் அரசரும் நாள் தோறும் தயானந்தரை தரிசனம் செய்து வந்துகொண்டிருந்தார்.

ஓர் நாள் தயானந்தர் ஜோத்பூர் அரசருக்கு தரிசனம் ஈயும் பொருட்டு சென்றுகொண்டிருக்கும் அதே சமயத்தில் அவ்வரசனின் வைப்பாட்டியாளும் பல்லக்கில் அரண்மனையை நோக்கி வந்துகொண்டிருந்தாள். அவள் அரண்மனையின் வாயிற்புரத்தை யடைந்தபோது அரசன் உள்ளிருந்துவந்து அவளுக்குக் கைலாகு கொடுத்து உள்ளழைக்க அவள் பல் லக்கை விட்டு நீங்கி அரண்மனையினுள் சென்றுவிட்டாள். இக்

காட்சியைப் பார்த்துக்கொண்டே வந்த தயானந்தருக்கு உள்ளம் பதறியது. தர்மாவேசம் கொண்ட தயானந்தர் அங்கு நிற்கும் அரசனை நோக்கி "ஏ அரச ! அரசன் சிம்ஹத்திற்குச் சமமானவன். பலவிடங்களில் அன்பைச் செலுத்தும் வேசி பெண் நாய்க்குச்சமமானவள். வீர சிம்ஹம் கேவலமான நாயினிடம் அன்பைக்காட்டியுபசரித்தல் அசம்பாவிதம். ஆர்ய ஜாதி மரியாதைக்கிது அவமானமாகும். கேசரியின் புஜத்திற்கு இப்பேர்ப்பட்ட அவமானம் உண்டாகவேண்டிய காரணமென்ன ? இப்பேர்ப்பட்ட காரியங்களாலேயே தர்ம கர்மங்கள் நாசத்தை யடைகின்றன. இப்பாபாசரணமே நாளடைவில் மனிதனை பெரிய அதமனாக்கிவிடுகிறது. ஆகையால் இப்பேர்ப்பட்ட காரியத்தை இன்றுடன் இத்துடன் நீர் மறந்துவிடவேண்டும்" என்றுபதேசித்தார்.

முழு உபதேசத்தையுங் கவனமாகக் கேட்டிருந்த அரசன் அரண்மனையினுள் சென்றான். உட் சென்று தன்மந்திரிமார்கள் சகிதம் கலந்து ஆலோசித்துக் கொண்டிருந்தான்.

முதலிலிருந்து கடைசீவரை நடந்தவைகளை யெல்லாம் கேட்டுக்கொண்டேயிருந்த அவ்வரசனின் வைப்பாட்டி உடனே அவ்விடத்தினின்றும் நீங்கி தன்னில்லம் சென்று தயானந்தரை பழிக்குப் பழி வாங்க ஆலோசித்திருந்தாள். அதற்கான வழிகளையும் தீர்மானித்துக் கொண்டே சமயத்தை எதிர்நோக்கி யிருந்தாள்.

தயானந்தரிடம் அரசனால் அளிக்கப்பட்ட வேலையாட்கள் அனேகம்பேர் அவருக்கு வேண்டிய உபசாரங்களை சமயமறிந்து செய்து கொண்டிருந்தனர்.

ஓர் நாள் வழக்கம் போல தயானந்தர் இரவானவுடன்
எதிரில் மேஜைமேல் வைத்திருந்த பாலை யருந்திவிட்டு படுக்கச்
சென்றார். சிறிது நேரம் படுத்திருந்து கண்ணயரும் சமயத்
தில் வயிற்றில் ஏதோ கோளாறு நடப்பதாய் தெரிய எழுந்து
உட்கார்ந்தார். வெகு சீக்கிரத்தில் இரண்டொருமுறை வாந்தி
யாயிற்று. தானே தண்ணீரைக்கொண்டு சுத்தம் செய்து
கொண்டார். அருகில் படுத்து தூங்கிக்கொண்டிருந்த வேலைக்
காரர்களுக்கு தொந்தரவளிக்கவில்லை.

மறுநாள் வழக்கம்போல உலாவுவதற்காக எழுந்து செல்ல
முயற்சித்த தயானந்தருக்கு எழுந்திருக்கமுடியவில்லை. மறு
படியும் சிறிது நீரையருந்தி மற்றோர் முறை வாந்தியெடுத்தார்.
தனக்கேதோ கோளாறு நடந்திருக்கிறதென்று கண்டபின்
தன் பரிசாரகர்களுக்கு தனக்கேதோமாதிரியாக இருப்பதாகத்
தெரிவித்தார். குடலில் பலமான வேதனையுண்டாயிற்று.
தானிருக்கும் அறையில் “ஹவனம்” செய்து காற்றை சுத்தி
செய்யுமாறு வேண்டினார். உடனே ஹவனமும் நடைபெற்
றது. மற்றும் சிறிது நேரத்திற்கெல்லாம் வயிற்றில் சூல
வேதனையுண்டாயிற்று. சில மருந்துகள் அளிக்கப்பட்டன.
ஆனால் வியாதிமாத்திரம் அமைதியடையவில்லை. அதற்குப்
பதிலாக இன்னும் சிறிது அதிகமேயாயிற்று.

உடனே டாக்டர் சூர்யமல் என்பவர் வரவழைக்கப்பட்
டார். அவர் வாந்தியை நிறுத்த மருந்தளித்துவிட்டு தயானந்
தரை நோக்கி “இப்போது உங்கள் ஆரோக்யம் எப்படியிருக்
கிறது?” என்று கேட்க தயானந்தர் “வயிற்றில் பலமான
நோயுண்டாயிருக்கிறது. முகமும் சிறிது வலிக்க ஆரம்பிக்கி

றது" என்று பதிலளிக்க டாக்டர் தாகத்தையடக்கவும் மருந்தளித்தார். மற்றவர்களாயிருந்தால் வலியைப்பொருக்க மாட்டாமலே இறந்துவிடக்கூடிய பெரிய கொடியவலி யுண்டாயிற்று. ஆனாலும் தன் தைரியத்தால் அதையும் சஹித்துக் கொண்டிருந்தார். "ஹா, ஹூ" என்று ஒரு வித சப்தமும் அவர் இடவே இல்லை. சிறிது நேரத்தில் தன் சரீரம் முழுவதும், ஒவ்வொரு நாடியிலும், ஒவ்வொரு துளி ரத்தத்திலும் கொடிய விஷம் புகுந்துகொண்டு தன்னுயிரை வூற்றச்செய்து கொண்டுவருகின்றதென உணரலானார். சரீர முழுவதும் வேதனை யுண்டாய்விட்டது. நீடூல் நீடூலென்று சூல வேதனையும் உண்டாயிற்று. உஸ்வாஸ நிஸ்வாசங்களின் வேகம் சிறிது சிறிதாக தடைபட்டுவந்தது. ஆனாலும் ஸ்வாமிகள் தன் முகத்தில் ஒருவித துன்பக்குறியையும் காட்டவில்லை. பரமசாந்தரூபராய் பரமாத்மனின் தியானத்திலே ஆழ்ந்து கிடந்தார்.

மாலை நான்கு மணி குமாருக்கு இச்சமாச்சாரம் "ப்ரதாப சிம்மனுக்கு எட்டியது. உடனே அவரின் தற்கால வைத்தியரான அலீமர்த்தான்கானை மருந்தளிக்கும்படி தயானந்தரிடம் அனுப்பிவைத்தார். அவர் சென்று வயிற்றின்மேல் சில ஒத்தடங்களும் உள்ளுக்கு சில மருந்துகளுமளித்தார். ஆனால் அவைகளின் பொருட்டு அளிக்கப்பட்டவைகள் எல்லாம் மிகக் கொடூரமாக வேதனையையே மேலும் மேலும் அதிகரிக்கச் செய்துவிட்டன. டாக்டர் ஒத்தடமளித்ததிலே மேல்வேதனை சிறிது அடங்கியதாகத் தெரிந்தபோதிலும் சூல வேதனைமாத்திரம் அதிகமாகிக் கொண்டேவந்தது. மறுநாள் டாக்டர் வந்தபோது தயானந்தர் அவரை நோக்கி "நான்

பேதிக் கொடுத்துக் கொள்ளவேண்டுமென்று விரும்புகிறேன்" என்றார். டாக்டர் "சரிதான். அத்துடன் முதலில் கபத்தை யறுக்க ஏதாவது மருந்து சாப்பிட்டால் நல்லது." என தயானந்தர் "எந்த மருந்தாயினுஞ்சரியே. வியாதி தீரவேண்டியதுதான் முக்யம்" என்றார்.

அன்று டாக்டர் வீட்டிற்குச் சென்று அங்கிருந்து சில மாத்திரைகளை அனுப்பிவைத்தார். டாக்டர் சொல்லியனுப்பியவாறே தயானந்தர் அம்மாத்திரைகளை உட்கொண்டார். பத்துமணிக்கெல்லாம் பேதியாக ஆரம்பித்தது. இரவுக்குள்ளாக முப்பது (30) முறை பேதியாயிற்று. மறுநாள் டாக்டர் வந்தபோது தயானந்தர் அவரை நோக்கி "ஐயா! ஐந்தாறு முறைதான் பேதியாகுமென்று சொன்னீர். ஆனால் இதுவரை 30 முறை பேதியாய்விட்டது. எங்கோ பாதாளத்திலிருப்பது போல் எனக்குணர்ச்சியுண்டாகிறது" என்றார்.

பேதிகளின் வேகத்தால் தயானந்தரின் உடல் அசைய முடியாது களைத்துவிட்டது. இவ்வாறாகவே இருக்க 8-9 தினங்களில் தயானந்தரின் பௌதிக உடல் மிகுந்த குறை நிலையை அடைந்து விட்டது. விஷமேறிய உடலுக்களிக்கப் படும் மருந்துகளெல்லாம் விஷத்தன்மையையே அடைகின்றதென்றால் அச்சமயத்தில் தயானந்தரின் நிலையை வர்ணிக்க முடியுமா? நெருப்பில் நெய்யிட்டதுபோல் அவருக்களித்த மருந்துகள் அவருக்குதவின.

அந்நாள் இரவில் தயானந்தர் கண்களை மூடி, அயர்ந்து படுத்திருக்கும்போது தன்னருகில் மிகமெதுவாக நடந்துவந்து தன்னை உற்று ஓர் மனிதன் கவனிப்பதை யறிந்து படுத்த

படியே திடீரென்று அவனைப் பிடித்துக்கொண்டார். "புலிவா யில் சிக்குண்ட ஆட்டைப்போல்" பயந்த ஜகன்னாதன் இரு கைகளையும் சிரமேற் கூப்பியவண்ணம் "ஸ்வாமீ! பரம காருண்யமூர்த்தி! கருணைவள்ளா! தயானந்தா! இக்கொடிய பாபியை மன்னிக்கவேண்டும். தங்களுக்கு இக்கதியை உண் டாக்கினவன் நான் தான். ஆனாலும் என் சுயமாக நானிக் கொடிய பழிக்காளாகவில்லை. என்னை இவ்வாறு செய்யும் படித் தூண்டியது வேறொருவராகும். கேவலம் கொஞ்சம் பணத்திற்காசைப்பட்டு, மற்றும் சில தளுக்குகளால் மயங்கி என்னை மறந்து நான் இக்கொடுந்தீச் செயலை செய்யத் துணிந்தேன், என்னை ஆட்கொண்டு மன்னித்தருளவேண் டும்" என்று நாத்தடுமாற உடலெல்லாம் நடுங்கக் கூறினான். ஆனால் பரம புண்யமூர்த்தியான தயானந்தர் அவனை கொஞ்ச மும் துன்புறுத்த வில்லை! சீ என்று கூட அவனைத் திட்டிய வான்று. அவர் ஜகன்னாதனை நோக்கி "ஜகன்னாதா! நான் இப்போது இறந்துவிடுவதால் என்னால் செய்து முடிக்கப்பட வேண்டிய அனேக காரியங்கள் முடிவுறாமல் நின்று விடு கிறது. உலோகோபகாரத்திற்கு இது எவ்வளவு நஷ்டத்தை உண்டாக்கி விட்டதென நீ அறியாய். நல்லது, விதித்தவனின் விருப்பம் இவ்வாறுபோலும், உன்மேல் சிறிதும் குற்றமில்லை. ஜகன்னாதா! இந்தா. இந்த ரூபாய்களை எடுத்துக்கொள். உட னே இவ்ராஜ்யத்தின் எல்லையைத் தாண்டி ஓடி விடு. நேபாள ராஜ்யத்திற்குச் சென்று விட்டால்தான் உன் உயிர்தப்பும். இவ்வரசருக்கு இக்கொடிய காரியம் புரிந்தவன் நீதானென்று தெரிந்துவிட்டால் உன்னைப்பிடித்து உன் ஒவ்வொரு துளி ரத்தத்திற்கும் துன்ப முண்டாக்குவார். அவரின் கோபத்தை

நீ எவ்விதத்தாலும் தணிக்கமுடியாது. ஜகன்னாதா! தாமதி யாதே. சப்தமின்றி ஓடிப்போய்விடு. என்ன ஆபத்து வரினும் இச்சமாச்சாரத்தை யாருக்கும் சொல்லாதே. நான் யாருக் காவது சொல்லி விடுவேனென்று நீ கொஞ்சமும் சந்தேகப் படாதே. என் உள்ளக்கடலில் நீ செய்த இவ்வஞ்சனை இனி யொருபோதுமிருக்காது. நான் எல்லாவற்றையும் மறந்து விட்டேன்" என்று சொல்லி அவனைப் பிடித்திருந்த பிடியை விட்டுவிட ஜகன்னாதன் தயானந்தரின் மேல்விழுந்து சிறிது நேரம் அழுது பிறகு அவ்விடத்தை விட்டுச் சென்று விட்டான்.

சன்னியாசி வேடத்தரித்து நேபாளராஜ்யத்திற் சென்று வசித்துவந்த ஜகன்னாதன் சதா தன்வாயில் "தயானந்த், தயானந்த்" என்றுசொல்லி பைத்தியம் பிடித்தலைந்துகொண் டிருந்தான். பதினைந்து வருடங்களான பின் அப்பைத்தியக் காரனை ஆர்யசமாஜிகள் கண்டுபிடித்து அவனுக்கு வேண்டிய உதவிகள் செய்தும் அப்பைத்தியத்துடனேயே ஜகன்னாதன் இறந்தொழிந்தான்.

தயானந்தர் வியாதியுற்றிருப்பதை தந்திகள் மூலமா யறிந்த ஆரியசமாஜிகள் எல்லோரும் ஜோத்பூரை யடைந்த னர். எல்லாரிலும் பெரிய டாக்டர் தயானந்தரைக் காண வந்தபோது தயானந்தர் தான் ஆபுமலைமேல் செல்லவிரும்புவ தாக டாக்டரிடம் தெரிவிக்க டாக்டரும் அங்கு செல்ல சம்மதித்தார். அன்று மாலை மஹாராஜ் யஸ்வந்த்ஸிம்ஹர் தன் சர்தார்களுடன் தயானந்தரைக் காணவந்தார்.

ஆபூமலைக்குச்செல்ல எல்லாம் தயார் செய்யப்பட்டன. பகல்மேல் மஹாராஜ் யஸ்வந்த்ஸிம்ஹர் மஹாராஜ் ப்ரதாப

சிம்ஹர் முதலியவர்கள் தயானந்தரினிருப்பிடத்தை யணு
கினர். அச்சமயம் தயானந்தர் பலகைமேல் அமர்ந்திருந்தார்.
அவருக்கு இருபக்கத்திலும் அரசர்கள் அமர்ந்து கொள்ள
தயானந்தர் சிரித்த முகத்துடன் அவர்களிடம் வார்த்தை
யாடிக்கொண்டிருந்தார்.

ரதங்களும், குதிரைப்படைகளும் அங்குவந்து சேர்ந்தன.
தயானந்தருக்காக ஓர் விசேஷமான பல்லக்கு தயார்செய்யப்
பட்டிருந்தது. இலவம் பஞ்சு மெத்தைகள் அதனுள்
சுற்றிலுமிட்டிருந்தன. அதனுள்ளேயே ஓர் பங்கா (விசிறி)
யும் இருந்தது. பல்லக்கைத் தூக்கிச்செல்வதற்காக 16 பேர்
கள் ஏற்படுத்தப் பட்டிருந்தார்கள். தயானந்தர் பங்களா
வின்மேல் பாகத்திலே வசித்திருந்தாராதலாலே ஜனங்கள்
அவருக்கு கைலாகு கொடுத்தும், அக்குளின் வழியாக கைகளை
விட்டுப் பிடித்துக்கொண்டும் மெதுவாக கீழே இறக்கினர்.
அவரை பல்லக்கில் ஏற்றும்போது ஸ்ரீமன் மஹாராஜா யஸ்
வந்த்ஸிம்ஹர் தன்னிரண்டு கைகளாலும் அவருக்கு உதவி
செய்தார். பல்லக்குச்செல்ல ஆரம்பிக்க முன்னும் பின்னும்
சேனைகள் சென்றன. உத்தியான வாயிலை அடைந்தபோது
பல்லக்கு நிறுத்தப்பட்டது. உடனே ஸ்ரீமன் மஹாராஜ்
யஸவந்த்ஸிம்ஹரும், ஸ்ரீ மஹாராஜ் ப்ரதாபஸிம்ஹரும் தயானந்
தரை வணங்கினர். இருவரும் கைகளை கட்டிக்கொண்டு
தயானந்தரை நோக்கி—"காருண்ய வள்ளலே! இந்நிலையில்
நீங்கள் இங்கிருந்து செல்வது எங்களுக்கு மிகுந்த துக்கமா
யிருக்கிறது. உங்களுக்கு இந்நிலையுண்டானது எங்களுக்குத்
தான் ஓர் பெரிய கெடுதலாகும். பூர்ண சுகமடைந்து நீங்கள்
மறுபடி இங்கு வருவீரேயானால் அப்போதே எங்கள் துக்கம்

விலகி சந்தோஷமுண்டாகும். அந்தோ! எங்களின் மனதின் மனோரதம் மனதிலேயே நிலைத்துவிட்டது." என்று சொன்ன போது அவர்கள் கண்களிலிருந்தும் நீர்வழிந் தோடியது.

அத்துக்க அரசர்களை சாந்தமடையச் செய்து தயானந்தர்—" அரசரேறே! கொஞ்சமும் விசனப்படாதீர்கள். கடவுளின் ஆக்கினையை யார் மீறமுடியும்? எழு தாதுக்களாலாகிய இவ்வுடலுக்கு வியாதி உண்டாவது ஆச்சரியமல்ல. துக்கப் படாதீர்கள். உங்களின் அன்புபசாரங்களாலே நான் சதா களித்திருந்தேன். என் பூர்ணஹிதமும் உங்களுடையதென வே நீங்கள் நம்புங்கள்" என்று சொன்னார்.

மறுபடி தயானந்தரை வணங்கிக்கொண்டு அரசர்கள் தங்கள் மாளிகையை அடைந்தார்கள். மற்றும் அனேகம் பேர்கள் ஸ்வாமிகளை வணங்கிக்கொண்டு அவரவர்களினில்லங்களுக்குச் செல்லத்துடங்கினர். அரசன் உத்திரவுப்படி டாக்டர் சூர்யமல் தயானந்தருடனேயே சென்றார். ஆபூபர்வதத்திலுள்ள அரசிப்பந்திகளுக்கு தந்திமூலமாக தயானந்தரின் வரவு முன்பே தெரிவிக்கப்பட்டிருந்தது.

ஆபூபர்வதத்தின்மேல் தயானந்தர் அமர்ந்திருக்கும் பல்லக்கு மெதுவாக சென்றுகொண்டிருக்கும் போது பஞ்ஜாப்பைச்சேர்ந்த டாக்டர் லக்ஷ்மணதாஸ் தயானந்தரை சந்தித்தார். தயானந்தரின் நாடியை பரீட்சித்த அவர் மிகுந்த விசனப்பட்டார். அவரின் சரீரம் நடுங்கி விட்டது. கண்கள் நீரைச்சொரிந்தன.

பஞ்ஜாபை நோக்கிச் சென்றுகொண்டிருந்த அவர் தயானந்தருடனேயே தங்கிவிட்டார்.

அம்மலைவாசத்திற் சென்று 16 நாட்கள் வரை தயானந்தர் வலியால் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தார். டாக்டர் லக்ஷ்மணதாஸ் அவாருகிலேயே இருந்து உபசாரம் செய்த வண்ணமாகவே இருக்க தயானந்தர் அவ்வலியை அவ்வளவாக உணராதிருந்தார்.

திடீரென்று தயானந்தரின் தேகநிலை மிகக்கேவலமடைந்துவிட்டதைக்கண்ட டாக்டர் எல்லா ஆரியசமாஜிகளுக்கும் தந்தியடித்து விட்டார். ஆயிரக்கணக்கான ஆர்யர்கள் ஆபூமலையை அடைந்தனர்.

தயானந்தர் ஆபூமலையிலேயே இருக்க விரும்பியிருந்தாராஜைலும் பக்தர்களின் வேண்டுகோள்களின்மேல் அஜ்மீரையடைந்தார். முன்பே தயாரித்து வைத்திருந்த இடத்திற்கு தயானந்தரை அழைத்துச்சென்று மஞ்சத்தின்மேல் அமர்த்தினர் ஆர்யபக்தர்கள்.

இங்கும் டாக்டர் லக்ஷ்மணதாஸ் எவ்வளவோ மருந்துகள் கொடுத்து கவனித்து வந்தார். ஆஞலும் அவர் மனதிற்கு திடம் உண்டாகவில்லை.

நாட்பட நாட்பட தயானந்தர் பேசுவதற்கும் முடியாத நிலையை அடைந்து தொடர்ச்சியாக நியாஞவஸ்தையில் ஆழ்ந்திருக்கலாஞர்.

ஆங்கிலநாட்டு வைத்யரான ந்யூடன் வரவழைக்கப்பட்டார். அவர் தயானந்தரைப் பரீட்சித்தபின் மிகுந்த ஆச்சரியமடைந்து அங்குள்ளோரை நோக்கி "ஐயா! இதென்ன அதிச

யம். இது மனித உடலா அன்றி வைரவுடலா ? ஒவ்வொரு மயிர்க்கால் வழியாகவும் கொடிய விஷம் பரவி வேலைசெய்து கொண்டிருக்க இம்மனிதர் அமைதியாகப்படுத்திருக்கின்றாரே! மிக மிக ஆச்சரியந்தான்! உலகத்தில் இம்மாதிரியான மனிதர் இதுவரையிலும் இருந்ததில்லை யென்று நான் நிச்சயமாய்ச் சொல்வேன்'' என்றார்.

"பீர்ஜி" யெனும் பெயருடைய ஓர் பெரிய மகமதிய வைத்தியரும் தயானந்தரைக் காண வந்திருந்தார். அவரும் தயானந்தரின் உடலை பரீட்சித்துவிட்டு மிகுந்த ஆச்சரியமடைந்தவராய் அங்குள்ளோரை நோக்கி—"மனதால் நினைத்தவுடனேயே மரணாவஸ்தையை நினைப்பூட்டத்தக்கக் கொடிய விஷம் இவர் உடல் முழுவதும் பரவி இருக்கின்றது. தைர்யத்தையே பூர்ணசெல்வமாகக் கொண்ட இவரைப்போல இவ்வுலகில் மற்ற யாரையுமே நான் கண்டதில்லை" என்று சொன்னார்.

இவ்வாறாக பக்தஜனங்கள் வருவதும் போவதுமாயிருக்க, நேரமும் கழிந்து கொண்டேயிருக்க, வியாதியும் வளர்ந்து கொண்டேயிருந்தது.

மூச்சு முழுவதும் தடைபட ஆரம்பித்தது. ஆயினும் அப்போதும் தன் பக்த ஜனங்களுடன் வார்த்தையாடிக் கொண்டே யிருந்தார். மத்தியில் "ஒரு மாதத்திற்குப் பிறகு இன்றுதான் கொஞ்சம் சௌக்கியமாயிருக்கிறது." என்று சொன்னார். வார்த்தையாடிக்கொண்டு வரும்போது இடை இடையே வியாதி அதிகரிக்கும்போதெல்லாம் மௌனமாயிருந்து விடுவார்.

இவ்வாருகவே அன்றையதினம் மாலை நான்கு மணி வரை கழிந்தது. அதன்மேல் தயானந்தர் அம்பட்டனை அழைத்து க்ஷவரம் செய்யும்படிச் சொன்னார். அருகிருந்தோரனைவரும் "பிதா! இன்று க்ஷவரம் செய்துகொள்ள வேண்டாம். கத்திபட்ட விடமெல்லாம் ரத்தம் வந்துவிடும்" என்று விண்ணப்பித்தனர். ஆனால் தயானந்தர் "பாவாயில்லை. வருத்தப்படாதீர்கள்" என்று சொல்லிவிட்டு க்ஷவரம்செய்து கொண்டார். பிறகு நகம் முதலியவைகளையும் சுத்தம் செய்துகொண்டு மஞ்சத்தின்மேல் சயனித்துக் கொண்டார்.

அப்போது தயானந்தர் தன் ப்ரிய சிஷ்யராகிய ஆத்மானந்தரை அழைக்க அவரும் வந்து வணங்கிநின்ருர். தயானந்தர் அவரை நோக்கி—"குழந்தாய்! எனக்குப் பின்னால் உட்கார்ந்துகொள்" என்று உத்திரவளிக்க அவரும் அவ்வாறே அமர்ந்து தயானந்தரின் உடலை மெதுவாக பிடித்துக்கொண்டிருந்தார்.

தயானந்தர் அவரை நோக்கி மறுபடி—"குழந்தாய் ஆத்மானந்தா! இச்சமயத்தில் நீ என்ன விரும்புகிருய்?" என்று கேட்க அன்பினால் கண்ணீரை வழியவிட்ட ஆத்மானந்தர் தன் குருநாதனை நோக்கி—"நாதா! இவ்வடிமை இப்போது விரும்புவதெல்லாம் பரமகருணாநிதியாகிய பரமனின் கிருபையால் ஒவ்வொரு நிமிஷத்திலும் உங்களின் சரீரம் ஆரோக்யமடைந்து வரவேண்டுமென்பதே. இதைத் தவிர மூவுலகத்திலும் நான் விரும்பத்தக்கதொன்றுமேயில்லை" என்ருர்.

தயானந்தர் ஆத்மானந்தரின் தலைமேல் கைவைத்து—"குழந்தாய்! இந்நாசவான், க்ஷணஹீன சரீரம் எத்தனை தினங்கள்வரை தான் சுகமாயிருக்கும்? குழந்தாய்! நீ உன் கடமைகளை சரிவர நிறைவேற்றிக்கொண்டு வரவேண்டும். அஞ்சாதே! சேர்தலும் பிரிதலும் உலகில் ஸ்வபாவமானவைகளாகும்" என்று சொன்னதைக் கேட்டு உண்மையை அறிந்துகொண்ட ஆத்மானந்தர் அழுதடங்கிவிட்டார்.

இவ்வாறாக மாலை 5½ மணியானவுடன் தன்னெல்லா பக்தர்களையும் தன்னெதிரில் வந்து நிற்கச் சொன்னார் தயானந்தர். எல்லோரும் வந்துநின்றபோது "இன்று என்ன பக்ஷ திதி, நட்சத்திரம்?" என்று வினவினார். உடனே பண்டித மோஹன்லால்—"இன்று கார்த்திக கிருஷ்ணபக்ஷ அமாவாஸ்ய மங்களவாரம்" என்று பதிலுரைத்தார்.

உடனே அக்குடிசை முழுவதையும் கண்களாலேயே ஒரு முறை சுற்றிப் பார்த்துவிட்டு வேதபாடங்களைச் சொல்ல ஆரம்பித்துவிட்டார். அவரின் அப்போதைய ஸ்வரத்திலோ, உச்சரிப்பிலோ, சப்தத்திலோ ஒருவிதமான குற்றமும் இருக்கவில்லை.

தயானந்தரின் அன்பை அப்போதே கவர்ந்த மற்றோர் மாணவனாகிய குருத்தன் ஓர் பக்கத்திலமர்ந்து விழித்த கண் மூடாமல் தயானந்தரையே பார்த்துக்கொண்டிருக்கின்றான்.

தயானந்தரின் கண்கள் மலர்ந்த புஷ்பம்போல் விகசித்திருந்தன. அவரின் முகம் சந்த்ரப்ரகாசம் போல் ப்ரகாசித்

திருந்தது. அவரின் உடல் பூர்ண ஆரோக்யமானதைப் போல காணப்பட்டது.

கடைசியாக தயானந்தர் காயத்ரீ மந்திரத்தை ஜெபிக்கத் தொடங்கினார். ஜெபித்துக் கொண்டேயிருந்து மௌனமடைந்துவிட்டார். சிறிதுநேரம் அவ்வாறே சமாதிநிலையிலிருந்தார். அதிலிருந்தும் கலைந்தபின் தன்னிருகைகளாலும் தாதுகளை மூடிக்கொண்டு கம்பீரத்வனியுடன்—"ஹே தயாமய, ஹே ஸர்வ சக்திமான் ஈஸ்வரா, உமக்கு விருப்பம்போலும்! பரமாத்மா, உன்விருப்பம் பூர்ணமாகட்டும்! என்பரம! உன்லீலை வெகுஅழகியது!" என்று சொல்லிவிட்டு ப்ரம்மாந்திரத்தின் வழியாய் பரம செல்வத்தை அறிவதற்காக ஆத்மீகப்ராணத்தை ஸ்வர்க்க விமானத்தில் ஏற்றினார். அதன் பிறகு காற்றுருபமாகிய உயிரை சிறிதுநேரம்வரை உள்ளடக்கி வைத்திருந்து ப்ராணவ நாதத்துடன் சேர்த்து வெளியே செல்லவிட்டார். அவரின் ருத்திர ஆத்மா வாயு மண்டலத்தில் லீனமடைந்தது.

[நாம் செய்யவேண்டியதென்ன? அவரின் கோரிக்கைகளை நம் கடமையாகக் கொண்டு அவைகளை நிறைவேற்றுவதற்காகவே வாழ்ந்து அதிலேயே உயிரையும் இழந்து உத்தம நற்பதவியைப் பெற்றுய்வோமாக!]

ஆரிய வீரர்களே! எழுமின்! விழிமின்!

ஓம் சாந்திஸ் சாந்திஸ் சாந்தி:

முற்றிற்று.

ஸாந்தி பிரசார பிரஸ், திருவல்லிக்கேணி, சென்னை.